ஸ்ரீ:

ஸ்ரீமதே லக்ஷ்மீந்ருஸிம்ஹபரப்ரஹ்மணே நம:

# ஜநகநந்திநீ.

(ஓர் ஸ்ரீவைஷ்ணவப் பெண்ணின் கதை)

திவான் பஹதூர் திருவெவ்வுளூர்

தட்டை ரங்காசார்யரால்

எழுதப்பட்டு,

அன்பர்கள் வேண்டுகோளுக் கிணங்க

ப்ரசுரிக்கப்பட்டது.

---

மதிராஸ்

கலாரத்நாகரம் அச்சாபீஸ்.



விலை ரூபாய் 1.

---

1921.

ஜநக நந்திநீ.

விலை. ரூ. 1-0-0. [தபால்கூலி நீங்கலாக.]

(1) திவான் பஹதூர் தி. த. ரங்காசார்யர், பி.எ., பி.எல்.
திருவள்ளூர் (செங்கல்பட்டு ஜில்லா.)

(2) கொ. ஸுந்தர்ராஜம் ஐயங்கார், தமிழ்ப்பண்டிதர்,
ஹநுமந்த ராயர்கோயில் தெரு, திருவல்லிக்கேணி, மதராஸ்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே லக்ஷ்மீந்ருஸிம்ஹபரப்ரஹ்மணே நம:.

# விஜ்ஞாபநம்.



ஸ்வல்ப காலம் முன்வரையில், இந்தத் தக்ஷிணதேசத்தில், வைதிகஸ்ரீயால் நிறைந்துள்ள ஸந்ததிகளில் ஜநித்தவர்களாய், ஸதாசார்ய கடாக்ஷமடியாக பால்யாத் ப்ரப்ருதி ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பந்நர்களாய்,

‘அயத்நாகதா: ஸேவ்யா க்ருஹஸ்தைர் விஷயாஸ்ஸதா।’

என்கிறபடி கர்ம விசேஷாதீநமாக வரும் விஷயாநுபவங்களை அஸக்தர்களாய் அநுபவித்துக்கொண்டு, காமக்ரோதாதிகளற்று, ஸ்வநிஷ்டை தெளிந்து, பகவத் பாகவத கைங்கர்யத்தையே அநர்க்கமான தநமாக பாவித்து லோகஸ்திதிக்கு முக்கியதாரகர்களாய் வர்த்தித்து வந்த ஸ்ரீ வைஷ்ணவ மஹாந்கள் பலர் இருந்தார்கள். கலியின் கொடுமையால் இக்காலத்தில் அம்மாதிரியான வ்யக்திகள் அதிமாத்ரம் ம்ருக்யராகிவிட்டார். ஒவ்வொரு திவ்ய தேசத்திலும், பூர்வம் இம்மாதிரியான ஸாத்விக பாகவதர்களால் அலங்கரிக்கப்பட்டுவந்த வீதிகளும் திருமாளிகைகளும் இப்பொழுது பாழடைந்திருக்கின்றன. அந்த மஹத்ஸந்ததியிலேயே ஜநித்திருக்கும் இக்காலத்திய வைஷ்ணவர்கள், தமக்கு அஸாதாரணதாய தநமாக ப்ராப்தமாயிருக்கும் உந்நத பதவியை இழந்து, கால வேகத்தால் அர்த்த காமாதிகளில் இழுக்கப்பட்டு, ஸ்வதர்மத்தில் எவ்வித ப்ரயத்நமும் செய்யாமல், வைஷயிக ஸுகத்தையும் க்யாதி லாபாதிகளையுமே கருதி, ஆத்மோஜ்ஜீவநத்திற்கு அத்யந்தம் அநுரூபமாயிருக்கும் தமது பூர்வர்களால் அதிஷ்டிதங்களான க்ராம ஆவஸதங்களை த்யஜித்து, பத்தநாதிகளில் புகுந்து,

'[illegible]'

என்கிறபடி நிக்ருஷ்ட வ்யாபாரங்களில் ப்ரவ்ருத்திக் கிறதை நாம் ஆயிரக்கணக்காகப் பார்க்கிறோம். மநஸ்ஸின் ஶாந்தி என்பதே அவர்களுக்கு துர்லபமாகி விட்டது. கர்மபல மர்க துக்கம் ஏதாவது ஸம்பவித்தால், அதனால் ஆவேகமும் கோபமும் அதிகரிக்கின்றனவே தவிர, அப்ரதீகார்யங்களான விஷயங்களில் நிரூபகர்களுக்கு ஜநிக்கவேண்டிய சித்த ஸமாதாநகரமான ஜ்ஞாநம் ஜநிக்கிறதே இல்லை. நிரூபணம் இல்லாததால் ஶாஸ்த்ர விருத்தமான ப்ரவ்ருத்தியும் ஏராளமாக ஸம்பவிக்கின்றது. இந்த துஸ்திதி நமது தேஶத்திற்கு என்ன தீங்கை விளைவிக்கப்போகின்றதோ தெரியவில்லை. தவிரவும், கீழ் கூறப்பட்டுள்ள மஹான்கள் எழுந்தருளியிருந்த காலத்தில், அவர்களுடைய ஸஹவாஸத்திற்குப் பாத்ரமாகவும், அவர்களுடைய க்ருபாகடாக்ஷத்திற்கு கோசரர்களாயுமிருந்த ஸ்த்ரீ ஜநங்களும் அந்த ஸஹவாஸ பலமாகவே ஸமஸ்தமான கில்பிஷத்திலிருந்தும் விடுபட்டவர்களாய், ஸுக துக்கங்களில் ஹர்ஷ ஶோகாதிகளைச் செய்யாமல், அவர்களுக்கு ஸத்ருஶமான அநுவ்ருத்தியைச் செய்து கொண்டே, அநஸூயை அருந்ததீ ப்ரப்ருதிகளைப்போல வர்த்தித்து வந்தார்கள். அவர்களுடைய புத்தியின் பரிபாகமும் மிகுந்த ஆஶ்சர்யத்தைக் கொடுக்கத் தகுந்ததாகவே இருந்தது. அம்மாதிரியான வ்யக்திகளை இப்பொழுது எங்கு காணலாம்? ஜகத்தின் ஶ்ரேயஸ்கரமான ஸ்திதி அம்மாதிரியான ஸாத்விக குடும்பங்களின் ஸத்தையைச் சார்ந்திருக்கிறதன்றோ?

"Ill fares the land to hastening ills a prey,
Where wealth accumulates and men decay"

என்று மற்றொரு ஸந்தர்ப்பத்தில் ஒரு ஆங்கிலகவி சொன்ன விஷயம் நமக்கு இப்பொழுது ப்ரக்ருத விஷயத்தில் அதிமாத்ரம் ஸமஞ்ஜஸமாக அந்வயிக்கின்றதே.

ஸீக்கிரத்தில் நஸித்துப்போகும்போல இருக்கும் இம்மாதிரியான வைதிக குடும்பங்களின் அழகான ஸ்திதியை கதா ரூபமாகவாவது ஸம்ரக்ஷித்து வைப்பது உசிதமென்றும், இந்த நல்ல வஸ்து அஸ்தமித்து விடுகிறதே என்னும் ஸோகத்துக்கு இம்மாதிரியான கதாநுஸந்தாநம் கொஞ்சம் ஆஶ்வாஸகரமாக இருக்குமென்றும் எண்ணி, இம்மாதிரியான வைதிக குடும்பத்தை விஷயமாக்கி இந்த 'ஜநகநந்திநி' என்னும் கதை எழுதப்பட்டிருக்கின்றது.

> "வியோகே வாயோகே ப்ரியஜந ஸத்ருக்ஷாநுபவந
> ஜாத ஶ்ருதும் கஃ ..................................।
> "ப்ரதீகாரஃ காலம் வ்யதி நயதி நவாம் கோऽவி ஶமிதஃ"

என்பதை ரஸிக ஜநங்கள் அறிவார்கள். இம்மாதிரியான வைதிக ஸந்ததி, ப்ரியஜநம் போலவே நமது மநஸ்ஸை ஆகர்ஷிக்கின்றது. அதன் வியோகம் ப்ரியஜந வியோகம் போலவே வ்யதையை ஜநிப்பிக்கின்றது. சித்ர கர்மம் போல அவர்களுடைய கதையை அநுஸந்தித்தாவது ஒரு வித ஆஶ்வாஸத்தை அடையலாமென்று ஒரு எண்ணம் நமக்கு உதித்தது உண்டு. அப்படிப்பட்ட அநுஸந்தாநத்திற்கு உபகாரகமாக ஸ்ரீ வேதாந்ததீபிகை என்னும் ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்த ஸபையின் பத்ரிகையும் அவகாஶம் கொடுத்தது. இம்மாதிரியான கதையின் நிர்மாணத்திற்கு பல விதமான கௌஶலம் அபேக்ஷிதம் என்பது உண்மையே. எல்லாருக்கும் த்ருப்தியைக் கொடுக்கும்படி இந்தக் கதை அமைந்திருக்கிறது என்று நாம் சொல்லத் துணியோம். ஆனலும், ஒன்று மாத்திரம் தைரியத்துடன் நாம் சொல்லக்கூடும். அதாவது - இந்த அமைப்பில் அஸம்பாவிதமாக ஒன்றுமில்லை என்பதே. கேஶவாசாரியர் போன்ற ஸாத்விகர்களும் ஹரிப்ரியை போன்ற ஸாத்விகளும் ஜநகநந்திநி போன்ற பெண்ரத்நங்களும் இந்த ஜகத்தில் அவதரித்து அவர்கள் போலவே நடந்து வந்திருக்கிறார்கள். வைராக்யாதிஶயத்தால் பால்யத்திலேயே துரீயாஶ்ரமத்தை ஸ்வீகரித்தவர்களும் உளர். ஆகையால், வஸ்து ஸ்திதிக்கு எவ்வித விரோதமு மில்லாமல் இந்தக்கதை அமைக்கப்

பட்டிருக்கின்றது என்பதை எல்லாரும் உணரலாம். நமது ஸித்தாந்தத்தின் கொள்கைகளும் ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக பல அம்ஶங்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. கேவலம் வாங்மாத்ர பர்யவஸாயிகளாக இராமல் அநுஷ்டாநத்திலும் அவை வரக்கூடுமென்பதும் இதில் விஶ்ருதமாகி இருக்கின்றது. மற்றை அம்ஶங்களில் இதன் குண தோஷங்களை விசாரிப்பதற்கு இதை அபிமாநிக்குமவர்களே அதிகாரிகளாவார்.

துர்மதி௵
ஐப்பசிமீ 10௳
திருவெவ்வுளூர்.

க்ரந்த கர்த்தா.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 39 | 1 | கன்டனர் | கண்டனர் |
| 40 | 7-8 | என்றுசொன்ஞர் | என்று கேசவாசார்யர் சொன்ஞர் |
| 45 | 22 | தோன்றின | தோன்றியும் |
| 43 | 15-16 | உரைக்கப் பட்டும் | உரைக்கப்பட்டும் |
| 63 | 27 | ஸ்வதந்த்ர்யம் | ஸ்வாதந்தர்யம் |
| 68 | 25 | பரார்த்தித்து | ப்ரார்த்தித்து |
| 70 | 20 | ஸாமர்த்ப மற்ற | ஸாமர்த்ய மற்ற |
| 74 | 7 | ஸ்மரனே | ஸ்மரணே |
| | 12 | கேவகையை | தேவதையை |
| | 15 | அன்று | என்று |
| | 18 | ஸமங்களில் | ஸமயங்களில் |
| 75 | 22 | ஸந்யாஸிதாஞே | ஸந்யாஸியோ |
| 76 | 3 | நரகரித் | நாகரிகத் |
| | 8 | ஸநதியா | ஸந்தியா |
| 79 | 1 | அஹராதிகள் | ஆஹாராதிகள் |
| 85 | 13 | ஸம்ஸர்கத்தில் | ஸம்ஸர்க்கத்தில் |
| | 20 | அஸத | அஸத் |
| | 21 | ஶரீரசுகம் | ஶரீரஸுகம் |
| 92 | 7 | விஸம்ருதமா | விஸ்ம்ருதமா |
| 93 | 29 | மகந | மக்ந |
| 95 | 26 | குமாரரக்கு | குமாரருக்கு |
| 99 | 16 | கும்பலாக | கும்பலாகக் |
| 100 | 17 | ஆஶரிதர்களுக்கு | ஆஶ்ரிதர்களுக்கு |
| 101 | 22 | அதயாதம | அத்யாத்ம |

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 102 | 11 | அம்மான | அம்மான் |
| 106 | 10 | ஜநம் | ஜநகம் |
| 114 | 18 | ஆகரததை | ஆகாததை |
| 118 | 32 | வொண்ணுமோ? | வொண்ணுமோ? |
| 132 | 31 | ஆராதகாலம் | ஆராதநகாலம் |
| 134 | 5 | ப்ரத்யநுஷ்டாநம் | ப்ரபத்யநுஷ்டாநம் |
| | 31 | போற்றி ! | போயிற்றே ! |
| 140 | 14 | அறுமை | அருமை |
| 141 | 24 | ப்ரஸ்தாவித்திருக்கின்ருர் | ப்ரஸ்தாபித்திருக்கின்ருர் |
| 150 | 18 | திருவடுக்கு | திருவடிக்கு |
| 151 | 21 | கொண்டு | கொண்ட |
| 152 | 28 | கிடைக்கு | கிடைக்க |
| 159 | 14 | கூவிக்கொள்ளா | கூவிக்கொள்ளாய் |
| 164 | 18 | யஶஸ்வீ | யஶஸ்வீ |
| 166 | 12 | கெமெம் | கெடும் |
| 167 | 12 | நீரட்டம் | நீராட்டம் |
| | 25 | அவன் | அவள் |
| 168 | 6 | சிரஸ்மேல் | சிரஸ்ஸின்மேல் |
| 173 | 21 | ஜநகவல்லி | கநகவல்லி |
| 175 | 31 | சிகித்ஸைக்காக | சிகித்ஸைக்காக |
| 179 | 20 | செய்ய | சொல்ல |
| 181 | 8 | வாழ்வுற்று | வாழ்வுற்ற |
| | 11 | மெட்டவட் | கெட்டவட் |
| | 14 | புகழ்துயர் | புகழ்ந்துயர் |
| 182 | 2 | பொற்றவேளையிதென்றுனைக்கொண்டனன் | பெற்றவாறுங்கண்டெம்பெருமானுவந் |



# ஜநகநந்தினி.

## ஓர் உபாக்யாநம்.

### முதல் அதிகாரம்.

காசிமுதலாகிய நன்னகரியெல்லாம் கார்மேனியருளாளர் கச்சிக்கொவ்வா, என்று, ஆகமாந்தார்யனுலும், நகர்கட்குள் காஞ்சியெனக் கவிஸ்ரேஷ்டனுலும் புகழ்பெற்ற கச்சிமாநகர்கண், ப்ராஹ்மணரில் உயர்குலத்தோரெனப்பட்டவரும், ஆத்ரேய வம்சத்தில் பிறந்தவருமான கேசவாசார்யரெனப் பெயர்வழங்கிய வித்வானெருவர் இருந்தார். அவர் க்ருஷ்ணபக்தர். ஸாமாந்ய சாஸ்த்ரங்களிலும், வேதாந்த சாஸ்த்ரங்களிலும் கரைகண்டவர். ஜ்ஞாநத்தாலும், அனுஷ்டாநத்தாலும் கீர்த்தி பொருந்திய புண்டரீகாக்ஷமிஸ்ரரெனும் பெரியோரை ஆசார்யனுக அடைந்தவர். ஸச்சரித்ரமெனப்பட்ட வைதிக தர்மங்களைப் பகவானுடைய ஆக்ஜ்ஞா கைங்கர்யங்களென நினைத்து நியமத்துடன் அநுஷ்டித்துக் கொண்டுவந்தவர். பரமபுருஷன் க்ருபையால் பிதாமூலமாகக் கிடைத்த அற்பமான பூஸ்திதியினின்று கிடைத்த தான்யத்தைக் கொண்டு, த்ருப்தியுடன் சரண்யன் ஆராதநத்தைச் செய்துகொண்டு சரீரயாத்ரையை நடத்திக்கொண்டுவந்தார். ஸத்ஸங்கத்தினுல் அவர் காமம், குரோதம் முதலான துர்குணங்களைக் கூடியமட்டும் ஜெயித்தவர். ஆசார்யன் இருக்கையிலும் அநேக சிஷ்யர்களால் ஆஸ்ரயிக்கப்பட்டவர். அவர் தம்பெரியோர் வஸித்த இடம்படாத தம்முடைய இல்லமதில், கற்பில்சிறந்த ஹரிப்ரியை எனும் மனைவியுடனும், பத்தாம்பிராயத்தை முடிக்கிலாத அழகில்சிறந்த ஜநகநந்தினி யெனப் பெயர்வாய்ந்த தமது பெண்மணியுடனும், இல்லறம் நடத்திவந்தார்.

ப்ராஹ்ம முஹூர்த்த மெனப்பட்ட அருணேதயத்திற்கு முன்பாகவே அவர் துயிலெழுந்து, பகவானுடைய நாமங்களை உச்சரித்துவிட்டு, "பவக்கடலில்களித்து விளையாடும் நலமறியாத

மானிடர்கள், தாமரைக்குளத்தில் விளையாடக் காலிட்ட மதங் கொண்ட யானையானது முதலையால் ஆக்ரமிக்கப்பட்டது போல், ஒருகாலத்தில் தம்முடைய தீவினையால் ஆக்ரமிக்கப்படுகின்றனர். அந்தக் கஜேந்த்ரன் தனக்கோர் ரக்ஷகரைக் காணுமல் ஜகத்கார ணனை நினைத்துக்கூவவே, எங்கும் நிறைந்த இறைவன், தன்பக் தன் துயர்நீக்கத் துரிதமாய்க் கருடன்மீதேறி வருபவனென, அவ னுக்குக் காட்சிதந்து காத்தானன்றோ? தீவினையில் மூழ்கித்தமது ரக்ஷணத்தில் அஸமர்த்தராய்க்கதறும் எம்போலியரையும் அந் தப்பகவான் ரக்ஷிக்கட்டும். அதற்காக இந்த விடியற்காலத்தில் அவனை நான் ஸ்மரிக்கின்றேன்; மநத்தாலும், வாக்காலும், சிரத் தாலும், பரமபுருஷனான நாராயணன் திருவடிகளை வணங்குகின் றேன். பூர்வம் என்னால் ஸம்பாதிதங்களான எனது ஸர்வபாபங் களினின்றும் எனக்கு அபயம்தரவல்ல பரமனை இவ்விடியற் காலத்தில் பஜிக்கின்றேன்'' என்றிவ்விதமாகப் புருஷோத்த மனை த்யானித்தார்.

பிறகு ஶாஸ்த்ரம் விதித்த நியமங்களைத் தவறுமல் தத்காலம் கர்தவ்யங்களை யநுஷ்டித்துவிட்டு,ஶ்வேதபுஷ்கரிணிக்குச்சென்று, ஸ்நாந ஸந்த்யோபாஸநாதி ஆஜ்ஞா கைங்கர்யங்களை முடித்துக் கொண்டு, அந்த வித்வான் ஸ்வாவாஸம் வந்து சேர்ந்தனர்.

அவர் எழுந்திருந்து பகவானுடைய நாமங்களை உச்சரிக்கு மளவில் விழித்துக்கொண்ட அவருடைய பத்நீ வீட்டிற்குரிய சுத்திகளைச் செய்துவிட்டு, ஜநகநந்தினியை எழுப்பி, உசிதமான கோலங்களால் க்ரஹத்தை அலங்கரிக்கும்படி ஏவிவிட்டு, ஸ்நா நார்த்தம் அநந்த ஸரஸுக்குச் சென்றனள். புருஷன் திரும்பு வதற்குமுன்பே வீட்டிற்குத்திரும்பி அவராகமநத்தை எதிர்பார்த் துக்கொண்டிருந்தனள். ஜநகநந்தினியும் வீட்டை ரங்கவல்லிக ளால் அலங்கரித்துவிட்டுக் குளித்துச் சுத்தமான ஆடைதரித்து முகாலங்காரம் செய்து கொண்டு நின்றனள்.

கேசவாசார்யரும் வீட்டையடைந்து கைகால்கள் அலம்பிக் கொண்டு, ஆசமநம்செய்து, ஔபாஸநத்தால் அக்நீரூபதாரியான ஜநார்தநனை ஆராதித்துவிட்டு, எம்பெருமானுடைய ஸந்நிதியை நெருங்கி, அபிகமநாராதநார்த்தமாக உசிதமான ஸ்தோத்ரங்களை

அநுஸந்தித்துவிட்டுத் தன்வீட்டின் நடைத்திண்ணைமீது உட்கார்ந்து, க்ரந்தாவலோகநம் செய்து கொண்டிருந்தார்.

அவருடன் முன் காலக்ஷேபம் செய்தவர்களும், அவர் குருவினிடம் அப்போது காலக்ஷேபம் செய்பவர்களும், அவருடைய சிஷ்யர்களும் அக்காலம் அவரிடம் வருவதுவழக்கம். அந்தவழக்கப்படி மதவாசார்ய ரென்பவரும், பத்மநாபாசார்யர் என்பவரும் அன்று கேசவாசார்யர் இல்லம் சென்றனர். வந்தந ப்ரதிவந்தநாதிகள் செய்து முடித்தபிறகு, பின் விவரிக்கின்றபடி அவர்க்குள் ஸம்பாஷணைகள் நடந்தன. பத்மநாபாசார்யர் கேசவாசார்யரைப் பார்த்து, "ஸ்வாமிந்! அடியேனுக்கோர் ஸம்சயம்உளது. அதைத் தேவரீர் நிவர்த்திக்கவேண்டும். விசேஷ சாஸ்த்ரத்தின் அப்யாஸம் அநுஷ்டாநத்தில் பரிணமிக்க வேண்டும். நம்மைபோல்லாத்தவர் ஸம்பாதிக்கும் ஜ்ஞாநத்துக்கும் நமது அநுஷ்டாநத்துக்கும் மிகுந்த வித்யாஸம் தென்படுகின்றது" என்றனர். "சொல்வதை விசதமாய்ச் சொல்லும்படி ப்ரார்த்திக்கின்றேன்" என்று கேசவாசார்யர் மொழிந்தார். பிறகு மாதவாசார்யர் "அடியேன் விஜ்ஞாபநம் செய்துகொள்கின்றேன். ஸம்சயவிஷயம் எங்களுக்குளாகச் சர்ச்சைசெய்யப்பட்டது. சாஸ்த்ரஜ்ஞாநத்தின் ப்ரயோஜநம் பரமபுருஷார்த்தத்தை அடைவிக்கும் உபாயத்தில் புருஷனை ப்ரவ்ருத்திக்கச் செய்யவேண்டியதன்றோ? இப்போது பண்டிதர்களுடைய அநுஷ்டாநங்களைப் பர்யாலோசித்தால், அந்த விஷயத்தில் ஸம்சயம ஜநிக்கின்றது. உபாயாநுஷ்டாநம் அவர் செய்யாதிருக்கவில்லை. ஆனால் ஜ்ஞாநத்துக்குத் தக்க சித்தபரிபாகம் அவரிடம் ப்ரகாசிப்பதாகத் தெரியவில்லை." என்றனர்.

"தேவரீர்களுடைய உக்திகளில் கிஞ்சித் வைசத்யத்தை அபேக்ஷித்தவனாக அடியேன் இருக்கின்றேன்." என்றுரைத்தார் கேசவாசார்யர். பத்மநாபாசார்யர் "ஆத்மஜ்ஞாநம் ஹ்ருதயத்தின் கட்டுகளை அவிழ்த்து நிவ்ருத்திமார்க்கத்தில் புருஷனை மூட்ட வேண்டும்; சித்தத்தில் பற்றிய காமங்கள் முற்றிலும் அதனால் நசிக்கவேண்டும். இவ்வண்ணம் சாஸ்த்ரம் மொழிகின்றது. ஜ்ஞாநம் சாஸ்த்ர பரிசயத்தால் உண்டானபின்பும், தாரபுத்ராதிகளிடம் பற்று நிலைக்கின்றது. அவருடைய போஷணார்த்தம் வித்வான்களும் ஸதா ப்ரவ்ருத்தர்களாய் நிற்கின்றார்கள். இவர்களும்

உபாயாநுஷ்டாநம் செய்துவிட்டு, க்ருதக்ருத்யரெனத் தம்மை நினைத்துக்கொண்டு, ஸ்வநிஷ்டையின் ஸ்வரூபத்தை மறக்கின்றார்களன்றோ?" என்றுரைத்தார். உடனே மாதவாசார்யர் "ஆத்மாவைப்போல் ஸர்வப்பிராணிகளையும் பார்க்கவேண்டியதன்றோ? பண்டிதர் ஸமதர்சிகளா யிருக்கவேண்டும். அப்படி யிருக்கத்தமரென்றும் பிறரென்றும் பேதபுத்திதான் பெரியோருடைய அநுஷ்டாநங்களில் தெரிகின்றது" என்று சொன்னார்.

இதைக்கேட்ட கேசவாசாரியர் சிறிது யோசித்து விட்டுப் பின்வருகிறபடி யுரைத்தார். "தேவரீர்களுடைய ப்ரச்நங்கள் மிகவும் ஸரியாகவே யிருக்கின்றன. பகவத்ப்ராப்திக்கு உபாயங்கள் பலவாறாக விதிக்கப்பட்டன. அவற்றின் பலம்மாத்ரம் ஏகரூபமானது. கூடியவரையில் ஹ்ருதய பரிபாகம் எல்லா உபாய நிஷ்டர்களுக்கும் ஏகரூபமாகப் பரிணமிக்கவேண்டும். உபாயங்களில் குருத்வ புத்தியும் லகுத்வபுத்தியும், ஒவ்வொன்றின் அநுஷ்டாநத்தால உண்டாகும் க்லேசங்களின் தாரதம்யத்தைப் பொறுத்து உதிக்கின்றன. பகுஜநங்கள் கடைத்தேறவேண்டுமெ எனும் ஸங்கல்பத்தைக்கொண்ட கருணைக்கடலாகிய நம்ராமாநுஜன் லகுவான உபாயத்தைத் தமது ஸம்ப்ரதாயஸ்தர்க்குக் காட்டியருளினார். இதுதான் பரபத்தி. த்ருஶ்ய பதார்த்தங்களில் பேதத்தை அநாதரித்து ஸர்வதர ஸமனாய் நிலைத்திருக்கும் அந்தர்யாமியான புருஷனைத் தர்சிக்க வேணுமென்றால், மோக்ஷத்தை அபேக்ஷித்து உபாயாநுஷ்டாநம் செய்தவர்க்கெல்லாம் இது சாக்ஷாத்ஷபரத்யக்ஷ விஷயமன்று. இந்த விஶ்வாஸம் அவர் சித்தங்களில் த்ருடப்படவேண்டும். அந்தவிஶ்வாஸ தார்ட்யம் அவருடைய அநுஷ்டாநத்தால் தெரியவேண்டும். எவ்வுயிர்களுள்ளும் இருப்பவனை ஶரண்யனிடம் நாம் கொண்டபக்தியானது, அவ்வுயிர்க்கெல்லாம் நம்மைச் செந்தண்மை பூண்டொழுகச்செய்யும். பகவான் பொருட்டு ஸர்வத்ர அநுகூலபுத்தியும், ப்ரதிகூல ப்ரவ்ருத்தியை விலக்குவதும் பரபந்நன் நியமமாக அநுஷ்டிக்கத்தக்கவன். லோகத்தில் புருஷரைக் கெடுப்பவை இச்சையும் த்வேஷமும். அஹங்காரமடியாகத் தமது சரீரங்களில் அபிமானமும், சரீரஸம்பந்திகளிடம் மமதையும் இச்சையா லுண்டாகின்றன. இந்த இச்சையெனும் காமத்துக்கு ப்ரதிபந்திகளாய் நேரிடும் மனிதரி

டம் க்ரோதமும், அதன்பயனான த்வேஷமும் உண்டாகின்றன. ஆதலால் அஹங்கார மமகாரங்களைச் சக்தியுள்ளவரையில் புருஷன் ஜெயிக்கவேண்டும். இந்த ஜெயம் அப்யாஸத்தால் ஸித்திக்கவேண்டும். ஜந்மாந்தரங்களில் அப்யாஸ தார்ட்யமுள்ளவர் ஸுலபமாக அவற்றை ஜெயிக்கின்றனர். சாஸ்த்ரஞானமும், சக்தியுள்ளவரையில் அதற்குத் தக்கபடி ஒழுக்கமும் ஏற்பட்டதாகில், மநுஷ்யர் ப்ராயேண பல உத்தேஸ்யங்களால் ப்ரவ்ருத்திமார்க்க நிஷ்டர்களாயிருக்கின்றபடியால், இந்த ப்ரவ்ருத்தியில் ஏற்பட்ட ஆபிமுக்யத்தையே ஸ்வாராதநமாகப் பரிணமிக்கும்படிக் கீதாசார்யன் அநுக்ரஹித்தனர். முதலில் வர்ணாஸ்ரமோசித கர்மங்களை அவன் பண்ணின ஆஜ்ஞையை அநுஸரித்து அவன் ப்ரீணநமாகச் செய்யும் பக்ஷத்தில், அவை அவன் கைங்கர்யமாக முடிகின்றன. அவற்றுள் ஸங்கத்யாகமும் பலத்யாகமும் நிஜமாக ஏற்படுமாகில், அவை பந்தத்தின்பொருட்டு ஆகமாட்டா. தாரபுத்ராதிகளுடைய போஷணையும், அதற்கு ஸஹாயமாக நிற்கும் வ்ருத்தியும், இன்னும் ஒவ்வொரு புருஷனுடைய ஸ்திதியடியாக நேர்ந்த வ்யாபாரங்களும், பகவதாராதநமாகக் கொண்டாடப்படுவது ஈஸ்வராஜ்ஞை. தாரபுத்ராதிகளும் தாரபுத்ராதி ரூபமாகப் புருஷனுக்கு விஸ்வாஸார்ஹராககூடாது. அவர்க்குள் நின்ற அந்தர்யாமியினிடம் நமக்கு இருக்கவேண்டிய அன்புதான் அவரிடம் நாம் பாராட்டும் அன்பிற்குக் காரணமாகத்தக்கது. இவ்வண்ணம் அன்பானது ஒவ்வொரு பாகவதனாலும் ஸர்வத்ர பாராட்டப்பொருந்துமா என்று கேட்கவேண்டாம். பாராட்டத்தான் வேண்டும். இது சித்தத்தில் நிலைக்க யாவர்க்கும் பொருந்தும். சித்தத்தின்படி வாக்கும் இருக்கலாம். க்ரியாவிஷயங்களில் தாரதமயம் ஏற்படுவது ஒவ்வொரு புருஷனுடைய சக்தியையும், அவனுக்குண்டாகும் அவகாசங்களையும்பொறுத்தது. தாரபுத்ராதி போஷணம் ஒவ்வொரு புருஷனுக்கும் தர்மமாக ஏற்பட்டது. உபபத்திக்குறைவால் ஒருவனுக்கு அவர் போஷணமே பெரும்பாரமாகலாம். அவன் அந்யருடைய போஷணத்தைப்பற்றி க்ரியாவானாக வேண்டாம். புருஷன் தாரபுத்ராதி போஷணத்தையும் கர்தவ்யமென்று நினைத்துப் பகவத் ப்ரீணநமாகவும், அந்த விஷயத்தில் தனது பற்றை விலக்கியும், செய்தானாகில், அவன் நிஷ்டைக்குக்குறையிலது. உபபத்யதிஸயம் உள்ளவன் அதற்கேற்ற

படிப் பரோபகாரத்தையும் அநுஷ்டிக்கத்தக்கவன். அது அவனுக்கு ஸ்வதர்ம கோடிகளில் சேரும். இவ்விதமாக ப்ராப்தமாகும் ஆராதநம் விபுலமாயிருக்கவேண்டுமென்பது ஸ்ரீக்ருஷ்ணன் திருவுள்ளமன்று. அதில் புருஷனை மூட்டுகின்ற பக்தியின் ஆதிக்யத்தைத்தான் அவன் விரும்புகின்றான். ஆதலால். பகவான்.

யத்கரோஷி யதஶ்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் ।
யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்ப்பணம் ।
பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி ।
ததஹம் பக்த்யுபஹ்ருதமஶ்நாமி ப்ரயதாத்மந: ॥

என்றருளிச்செய்தான். சக்திக்குத் தக்கபடிச் செய்யப்பட்ட அல்ப பூஜையையும் அவன் அங்கீகரிப்பது புருஷனுடைய பக்தியைப் பொறுத்தது. பெரியோர் கார்யம் செய்தெனக்கு அர்ப்பணம் செய்யென்று அவன் கேட்கவில்லை. எதை உன் சக்திக்கு அநுகுணமாக நீ செய்கின்றையோ அதை (அதாவது, அதின்பலத்தை) எனக்குத்தந்துவிடு என்றவன் சொல்லியிருக்கின்றான். ஆதலால் பெரியோர் க்ரியாவந்தராயும் ஸங்கிஹித பந்துபோஷகராகவும் இருக்கக்குறையில்லை. "நியதம் குரு கர்ம த்வம், தஸ்மாதஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர, ஸ்வதர்மே நிதநம் ஶ்ரேய:, க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோகே ஸித்திர்பவதி கர்மஜா, கர்மகைவ தஸ்மாஸக்தம், ஜ்ஞாநாக்நி தக்தகர்மாணம் தமாஹு: பண்டிதம் புதா:, யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே, க்ருத்வம் தம் ந கர்மாணி லிம்பந்தி, அயுக்த: காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே ।" இத்யாதி வசநங்களை ஆலோசித்தால், பெரியோருடைய அநுஷ்டாநம் உபபந்நமாகத்தோன்றும். பகவானுடைய ஆஜ்ஞையை ஸ்மரித்துக்கொண்டு, தாம் அதன்படி அநுஷ்டிப்பதாக எண்ணிக்கொண்டு, ஸம்ஹிதமான கர்மங்களைக் கர்த்தவ்யம் எனும் புத்தியால் செய்துகொண்டு, அவற்றினிடம் ஸங்கத்தை விலக்கச் செய்தாராகில், அவருடைய ஜ்ஞாநத்துக்கும், க்ருதக்ருத்யதாபுத்திக்கும், தோஷம் சொல்லவொண்ணாது." என்று சொன்னார்.

இவ்வண்ணம் சிறிது காலம் ஸம்பாஷித்துவிட்டு மாதவாசார்யரும், பத்மநாபாசார்யரும் புறப்பட்டுப்போனார்கள். அவர்கள் வார்த்தைகளையும், தனது பிதாவின் உக்திகளையும் தாழ்வாரத்தில் நின்றுகொண்டு, ஜநகநந்தினி விடாமல் கேட்டனள். ஜந்மாந்தர ஸம்ஸ்காரத்தால் அவளுக்கு மஹான்களுடைய க்ரஹத்தில் ஜந்மம் உண்டாயது. அந்தக்காரணத்தினாலும், அநவரதம் ஸாதுக்களுடைய வார்த்தைகளைக் கேட்பதினாலும், அவற்றைப்பற்றிப் பிதாவுடன் ஸம்பாஷிப்பதாலும், அந்யர்க்கு விளங்காத தத்வார்த்தம் யாவும் அவள் புத்தியில் தெளிவுடன் பதிந்தன. மற்றவர் சென்ற பிறகு பிதாவின் முன்சென்று, தண்டனிட்டு, இவ்வண்ணம் மொழிந்தனள்.

"அப்பா! அந்த ஸ்வாமிகளுடைய ப்ரஸ்நைகளையும் தேவரீர் விளம்பிய ஸமாதாநங்களையும் கேட்டேன். தேவரீர்க்கும் அடியேனுக்கும், பிதாவென்றும் புத்ரியென்றும், ஓர் ஸம்பந்த விசேஷத்தை நம்பி, அதனிமித்தம் ஸந்தோஷமும் கொண்டிருந்தேன். அந்த ரூபமான ஸம்பந்த ஜ்ஞாநத்தை அஸ்மதாதிகளிடம் தேவரீர் ஒழித்து வர்த்திப்பதாக அடியேன் நினைக்கும்படி நேரிட்டது."

"ஆனால் என்ன? நீ ஸாமாந்ய ஸத்ரீபுத்தி யுள்ளவளன்றே? தத்வார்த்தங்களை ஸததம் சிந்திப்பவளென்று உன்னை நான் எண்ணுகின்றேனே. விபீஷணன் தாரபுத்ராதிகளை த்யாகம்செய்துவிட்டு ராகவனைச் சரணமடையவில்லையா? ஸர்வபந்துக்களையும் நிவர்த்தித்துப் பகவானிடம் கோபஸ்த்ரீகள் அடிமை செய்ய விரும்பவில்லையா? தாரபுத்ராதிகளும் வித்தபோகங்களும் எந்தப் பரமாத்மா நிமித்தமாக நம் விஸ்வாஸத்துக்குப் பாத்ரமாகின்றனவோ, அந்தப் பரமாத்மாவினிடம் நமக்கு இருக்கவேண்டிய அன்பு அளவிடக்கூடியதன்றே? அவன் ஸர்வதா இருக்கின்றுனையால், அவன் பொருட்டு ஸர்வமும் அவனைப்போல அன்புடன் தர்சிக்கத்தக்கவையன்றோ? இந்த அன்பானது கேவலம் சரீர ஸம்பந்த ஜ்ஞாநத்தால் உண்டாகும் அன்பைக்காட்டிலும் மிக்கதன்றோ? ஆதலால் அத்தகைய அன்பை உன்னிடம் நான் பாராட்டுவதால் உனக்கு ஸந்தோஷம் குறைவானேன்?" என்று கேசவாசார்யர் கூறினர்.

இதைக்கேட்ட பெண்மணி, "அப்பா! நான் உமது பெண் என்பது நம்மிருவர்க்கும் தனிமையில் ஏற்பட்ட ஸம்பந்தம். அதனால் பரஸ்பரம் உண்டாகும் விச்வாஸம் நம்மிருவர்க்கும் அந்யத்ர உண்டாகாது. அந்தர்யாமி சிந்தனையால் உண்டாகும் விச்வாஸம் எல்லாரிடமும் ஸமந்தானே" என்றனள்.

"ஆகிலும் அந்த அன்பானது சரீர ஸம்பந்த ப்ரயுக்தமாக ஜனிக்கும் அன்பைக்காட்டிலும் ஆழ்ந்ததன்றோ?" என்று அவள் பிதா உரைத்தார். பெண்மணியும், "அது அப்படியிருக்கலாம். பகவத் ஸம்பந்த மடியாகவரும் அன்பை அடியேனிடம்போலவே மற்ற யாவரிடமும் தேவரீர் ஆவிஷ்கரிக்கவேண்டுமென்றோ?" என்று கேட்டாள். அதற்குக் கேசவாசார்யர், "மாநஸிகமாக அப்படித்தான் இருக்கவேண்டும். வாக்கும் மநஸை அநுஸரித்துச் செல்லும். க்ரியையில், எனது சக்தி ஸங்க்ஹித பந்துபோஷணத்தில் மாத்ரம் பர்யவஸிக்கும். பகவத் ஸங்கல்பத்தால் இது எனக்கு விஹிதமான பரம். உன்னுடைய ஐஹிக ஸம்ரக்ஷணையைப் பரமபுருஷன் என்னை வ்யாஜமாகக்கொண்டு நடத்துகின்றனாகையாலும், அந்த விஷயம் நமது சரீர ஸம்பந்தமடியாக ஏற்பட்டதாகையாலும், க்ரியையில், மற்றோரைக்காட்டிலும் உன்னிடம் நான் ஸமதர்சநரூபமான அன்பை விசேஷமாகப் பாராட்டுகின்றேன். ஆகலால் நீ வ்யஸநப்பட அவஸரம் இலதே. ஆழ்வார் பாசுரத்தை மறந்தையோ? வேதத்தின் படிப் புருஷனுக்கு ஏற்பட்ட ஆயஸ் நூறு வருஷம். அதில் பாதி உறக்கத்தில் கழிகின்றது. மிகுதியுள், சைசவம், பால்யம், வார்த்தகம் இவற்றின் பங்குகள் நீங்கப் பிணியாலும், துன்பத்தாலும் பீடிக்கப்பட்ட காலங்களையும் கழித்துப்பார்த்தால், சரீரங்களிலும, அவற்றால் வரும் ஸம்பந்தங்களிலும் பற்றுள்ளவர் மதியுள்ளவர் ஆகமாட்டார். ஆதலால் சரீரஸம்பந்தங்களை அதிகமாகப் பாராட்டவேண்டாம். பகவத் சேஷத்வம் ஸர்வஸமம். அந்த ஜ்ஞானத்தாலும், பகவான் நம்மிருவரையும் ஜஹிகத்தில் சேர்த்துவைத்தபடியால் சேர்ந்து நாம் அவனுக்குச் செய்யும் ஆராதநத்தாலும், நமக்குள் உண்டாயிருக்கும் ஸ்நேஹமன்றோ வ்யக்தத்தக்கது? ஸமுத்ரத்தில் காற்று மழையில் ஒரு கட்டை யுடன் மற்றொன்று சேர்ந்து, இரண்டும் சில காலம் கூடி மிதந்து கொண்டுபோய்க் காலாந்தரத்தில ஓலையால்

பிரிக்கப்பட்டுத் தனித்தனியே பிரிந்துபோவதுபோல், சில ஆத்மாக்களின் கர்மபலமாக அவற்றிற்குச் சரீர ஸம்பந்தம் நேரிட ஜந்மமுண்டாவதும், அந்தக் கர்மம் அநுபவத்தால் முடிந்த பிறகு, அந்தச் சரீரிகள் ஒவ்வொன்றின் சரீர நாசத்தால் பிரிந்துபோகின்றதும் ஸஹஜந்தானே. பெண்ணே! ஜ்ஞாநமுள்ள உனக்கு இவ்விதமாக யோசனைகள் உதிக்கலாமோ?" என்று ஸமாதாநம் கூறினர்.

இதற்குள் மாத்யாஹ்நிகஸ்நாந ஸமயம் கிட்டவே கேசவாசார்யர் எழுந்துவிட்டார். ஜநகநந்தினியும் தனக்குரிய க்ருஹக்ருத்யா பாரங்களைச் செய்யப்போனள்.

## இரண்டாவது அதிகாரம்.

ஜநகநந்தினி பன்னிரண்டாவது பிராயத்தைக் கடக்குங்கால் வைசாக உத்ஸவம் வந்தது. பகவத் ஸேவார்த்தம் பஹு ஜநங்கள் காஞ்சீபுரத்தில் கூடினர். வேறு உத்தேஸ்யங்களாலும் அந்நகரத்தில் அநேகர் கூடினர்கள். கல்யாண வார்த்தைகள் முடிப்பதற்கு அக்காலம் தகுந்ததென்று வருபவர்களும் உண்டு. அநேகம் ப்ராஹ்மணப் பெண்கட்கு வரன்கள் அமைந்தனர். வைதிகஸார்வபௌமரான கேசவாசார்யர் பெற்று வளர்த்த பெண்மணிக்கு ஓர் தக்க வரன் அமையவில்லை. பாஷாந்தரப் பயிற்சியும் ப்ரஷ்டர்களுடைய ஆசாரங்களும் கூடி வளர்வதால், தத்வார்த்த விமர்சியான தன் புத்ரியைப் பாஷாந்தரம் படித்தவர்க்குத் தானம் செய்ய அவர் இச்சிக்கவில்லை. வைதிகவ்ருத்தியும், தாரித்ரியமும் கூடியே நிற்றலால், பெண்ணைப் பரிக்க உபபத்தி யற்றவர்க்கும் அவளைக் கொடுக்க அவர் இசைந்தாரில்லை. இவ்வண்ணம் வரன் கிடைக்காமல், ஶாஸ்த்ரம் வரம்பிட்ட வயதை அவள் அதிக்ரமிக்கப்பார்த்து அவர் வருந்தினர். வைதிக குலப்ரஸூதரான பாஷாந்தரம் படித்தவர்க்குக் கொடுக்கமுடிவாகத் தன் மநஸைத் திருப்பினராயினும், அவர் யோசித்த ஒவ்வொரு ஸ்தாநங்களிலும் கேட்கப்பட்ட வரதக்ஷிணையை நினைக்க நினைக்கத் திடுக்கிட்டுப் போயினர்.

வைநதேயன் மீதேறித் திருவீதிகள் அலங்கரித்துவிட்டு வரதன் ஸந்நிதிக்குத் திரும்பினர். பகவான் பின்னல், வேதகோஷ்டி

யில் கைங்கர்யம் செய்துவிட்டுக் கேசவாசார்யர் இல்லம் சென்றனர். தத்கால நியதமான ஆஜ்ஞா கைங்கர்யங்களை அநுஷ்டித்துவிட்டு, ஶ்ரம பரிஹார நிமித்தமாக நடைத்திண்ணையில் படுத்துக்கொண்டார். ஸாயங்காலம் வந்த பிறகு ஜநகநந்தினி வீட்டினின்றும் வீதியில் இறங்கினாள். வீட்டின் முன் வீதியில் தண்ணீர் தெளித்து, மண்ணினைப் போக்கி, ரங்கவல்லிகளால் அந்த ப்ரதேசத்தை அலங்கரித்துக் கொண்டிருந்தாள்.

"ஜநகம்! கோலமிடுகின்றையோ?" என்றொரு சிறுவன் சொல்ல, முகமெடுத்துப் பார்த்தனள். "எப்போது வந்தாய் ஸ்ரீநிவாஸா?" என்று அவனை வினவினள்.

"நேற்றிரா இவ்விடம் வந்தேன். உத்ஸவத்தின் கூட்டத்தால் உன்னை இதுவரையிலும் பார்க்கத் தடையாயிற்று. ஸுகமாயிருக்கின்றையா?" என்று சிறுவன் மொழிந்தான்.

"ஸுகமே யிருக்கின்றேன். உன்பள்ளிக்கூடம் மூடிவிட்டார்களோ? ஸௌக்யமாக இருக்கின்றையோ?" என்று ஜநகநந்தினி கேட்டாள்.

"பள்ளிக்கூடம் மூடித்தான் இவ்விடம் வந்தேன். நான் ஸௌக்யம் தான். என்ன இவ்வளவு விஸ்தாரமாக இந்த வீண் தொழில் செய்கின்றையே?" என்றனன் ஸ்ரீநிவாஸன்.

"இது வீணென்பதும் நன்றென்பதும் அபிப்ராயபேதம். உன் போல் நானதை நினைக்கின்றேனில்லை" என்றாள் ஜநகநந்தினி.

"என்ன? விக்ரஹங்களை வைத்துக்கொண்டு விளையாடுகின்றீர்கள்? ஜநங்களுக்கு உபகாரமான தொழில்களில் காலங் கழித்தல் நலமன்றோ?" என்றனன் ஸ்ரீநிவாஸன்.

"ஆத்மா உஜ்ஜீவிக்கும் வழியென்று நம்பி, வாக்குக்கும் மநஸுக்கும் எட்டாத ஸ்வரூபத்துடன் கூடிய பரமேஶ்வரனை, அவன் இட்ட கட்டளையென்று நம்பினபடியே, திவ்ய மூர்த்திகள் மூலமாக, அவற்றுள் அவன் ஸாந்நித்யம் செய்கிறான் என்று விஶ்வஸித்து உபாஸிக்கும் ஜநங்களை, இவ்வளவு எளிதாக நிந்திப்பது ஸத்வ்ருத்தமென்று எண்ணுகின்றையோ? இதுதானு

உன் படிப்பின் ப்ரயோஜநம்? இந்த விஷயத்தில், உன் புத்தியை மயக்கினவர்களுடைய விஷமோக்திகளைத் தவிர உனக்கு அபரோக்ஷமான அநுபவம் ஏதாவதுண்டோ? என்ன ஸ்ரீநிவாஸா? இப்படிக் கெட்டுப்போனாயே?" என்று ஜநகநந்தினி வெறுப்புடன் சொன்னாள்.

"ஆத்மா உண்டென்றும் பரமேஸ்வரன் ஒருவன் இருக்கின்றான் என்றும் உனக்கெப்படித் தெரியும்?" என்றான் ஸ்ரீநிவாசன்.

"அதில் ஶாஸ்த்ரம் ப்ரமாணம்; ஆப்தர்களென நாம் மதிக்கும் மஹாத்மாக்களுடைய அநுபவமும், அதை வெளிப்படுத்தும் வாக்யங்களும் ப்ரமாணம். ஶரீரங்களெனப்பட்ட ப்ரக்ருதியின் விகாரங்களில் சேராமல், உன்னிடமும், மற்று யாவரிடமும், தனக்குத் தானே ப்ரகாசிக்கும் சேதநர்கள் ப்ரமாணம்" என்றாள் பெண்மணி.

"ஜநகீ! என்னமோ மனம் போனபடிப் பேசிவிட்டேன். என்னை நீ மன்னிப்பாய். அப்பா எங்கே இருக்கிறார்?" என்றனன் சிறுவன்.

"உள்ளே இருக்கின்றார்" என்று சொல்லிவிட்டு, ஜநகநந்தினி தன் கார்யத்தைப் பார்த்தனள். ஸ்ரீநிவாஸனும் உள்ளே சென்றனன். அவன் சிறிது நேரம் கழித்து வெளிப்பட்டவரையில், ஹஸ்திகிரீசன் எழுந்தருளப் போகின்ற வீதியை அலங்கரித்துக் கொண்டிருந்தாள். பிறகு உள்ளே ப்ரவேசிக்கும் கால், நடையில் எழுந்து உட்கார்ந்திருந்த தன் பிதாவைப் பார்த்தாள்.

கேசவாசார்யரும், "பெண்ணே! உனக்கும் ஸ்ரீநிவாஸனுக்கும் உரத்த குரலாய் வார்த்தை நடந்ததே! என்ன விஷயம்?" என்றனர்.

ஜநகநந்தினியும், "அப்பா! என்ன சொல்வேன்! எம்மட்டும் அவன் கெட்டுப்போனான்? நான் பெருமாள் எழுந்தருளும் வீதியலங்காரம் செய்தது வீண் தொழிலாம். விக்ரஹங்கள் வைத்துக் கொண்டு விளையாடுகின்றோமாம். ஆத்மாவும் இல்லையாம். ஈஸ்வரனும் இல்லையாம். இவ்வண்ணமெல்லாம் அவன் பேசினான்" என்றுரைத்தாள்.

"அதற்குத் தக்கபடி நீ விடைதந்தாயன்றோ? பெண்ணே! உங்கட்குள் ஸம்பாஷணையை நான் கிஞ்சித்துக் கேட்டேன். ப்ராசீந ஸுக்ருதத்தால், உனக்கு மேதையும், ஸத்ஸங்கமும் கிடைக்கவே, நீ நாஸ்திக வாதங்களால் சலிக்கப்படமாட்டாய். உனது ஸம்ஸர்க்கம் உன்னை இவ்வண்ணம் ஆக்கியது, அவனுடைய ஸம்ஸர்க்கம் அவனை அவ்வண்ணம் போக்கியது", என்று சொன்னார் கேசவாசார்யர்.

"அப்பா! காவ்ய க்ரந்தங்கள் தான் அடியேனுக்குத் தேவரீர் கற்பிக்கின்றீர். தத்வவிஷயங்கள் வாசிக்காமல், கேள்வியால் மாத்ரம் ஈஷத் அறிகின்றேன். அவற்றுள் நிஷ்க்ருஷ்டார்த்தங்களைத் தேவரீர் அடியேனுக்கு க்ரந்தங்கள் மூலமாகத் தெளிவிக்கக் கூடாதோ?" என்றனள் ஜநகநந்தினி.

"குழந்தாய்! அதற்குத் தகுந்த காலத்தை ப்ரதீக்ஷித்துக் கொண்டிருக்கின்றேன்" என்று சொல்லிவிட்டுக், கேசவாசார்யர் எழுந்து ஸந்நிதிக்குச் சென்றார். ஸூர்யாஸ்தமநம் ஆன பிறகு பேரருளாளன் ஸந்நிதி வீதியில் எழுந்தருளிவிட்டார். அந்த வீதியில் தன்னுடைய க்ரஹத்தின் முன்பாகத் தன் தாயுடன் ஜநகநந்தினி நின்றுகொண்டு எம்பெருமானுடைய உத்ஸவ வைபவத்தைத் தர்சித்தனள்.

முதலில் ஆனை, குதிரை, வாத்ய விசேஷங்கள், அவள் முன்பாக வீதியைக் கடந்தன. இவற்றின் முன்பும், பின்பும் பகுத்தறிவற்ற பாமரஜநங்கள் கூட்டம் கூட்டமாய்ச் சென்றனர். அவற்றின் பின்னால், அவ்யக்தமான கோஷத்துடன் அத்யாபக கோஷ்டிகள் சென்றன. அவற்றிற்கு ரக்ஷகராகப் பல போலீஸ் உத்யோகஸ்தர்களும் ஓர் கோஷ்டிபோலச் சென்றார்கள். சிறிய திருவடிமீது ஸேவை ஸாதிக்கும் எம்பெருமான், அந்தத் திருவடியின் ஸந்நிதிப் புறத்தே எழுந்தருளுமுன், அத்யாபகர் பெருமாள் முன்பாக எதிர்நின்று, ஆழ்வார் பாசுரங்களைச் சக்தியுள்ள வரையில் உரக்கப்பாடி நிறுத்தும் பர்யந்தம், போலிஸார் அதிகாரத்துக்குப் பயந்த வாஹநம் சுமப்போர், கடற்கரையில் அலைகள் கரைமேல் மோதிப் பின்னிடுவதைப்போல், வாஹநம் சுமக்கும் வருத்தம் தாளாமல் முன்னும் பின்னுமாக நடை கொண்டு நின்றிருந்தார்கள்.

இப்படி அத்யாபக கைங்கர்யத்தை நின்று கடாக்ஷித்த எம்பெருமான், அது முடிவுற்றவுடன், அவ்விடம் விளம்பித்த காலத்தை அதன் பின்னால் தான் நடக்கும் வேகத்தால் ஸமமாக்க எண்ணுபவன்போல், அதி சீக்கிரமாகச் செட்டிவீதியைக் கடந்தான். இதையெல்லாம் ஜநகநந்தினி நோக்கி நின்றனள். அத்யபாக கோஷ்டியின் பின்னும், எம்பெருமான் முன்பாகவும், தமது குஞ்சியழகும், கொடுந்தானைக் கோட்டழகும், மஞ்சளழகும், மற்றோர் பார்க்க வேண்டுமென்று ஆவல்கொண்ட ஆடவர்களும், வாய்பற்ற வெற்றிலை பாக்கை மென்று சொண்டு ஒருவர்க்கொருவர் கைகளைப் பற்றிக்கொண்டு, உல்லாஸமாய் வார்த்தையாடிச் சிரித்துக் கொண்டு நடந்தார்கள்.

இவர்பின் பெருமாள் எழுந்தருளினார். முன்னடந்தவரைப் போல் தமைப் பிறர் நினைத்தலை வேண்டாத மற்றோர், அவரைப் போல் ஆடை முதலானவற்றை அணிந்தாராயினும், தேப்பெருமாள்பின் கூட்டங் கூட்டமாகச் சென்றனர். இவர் கூட்டத்தால் விதியில்லாமல் பின்னிட்ட வேதகோஷ்டிகள் வருவதைப் பெண்மணி கண்டாள். அவற்றின் மத்யே, தனது பிதாவையும் தர்ஸித்தாள். வேதத்தின் மதுர ஸ்வரங்களை ஆநந்தத்துடன் கேட்டு அநுபவித்தனள். இதற்குள், அந்தக் கோஷ்டிகளின் பின்னால் அநுயாத்ரை செய்யும் ஸ்ரீவைஷ்ணவர்களையும் கண்டனள். இப்படி ஸர்வேஸ்வரன் உத்ஸவம் கண்டருளின போதிலும், அதில் ப்ரத்யக்ஷமாகத் தெரிகின்ற குற்றங்களை அவள் கண்டாளில்லை. தன் ஜநகனால் தனக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்ட ஸ்ரீபாகவத ஸ்லோகங்களை அவள் அநுஸந்தித்துக் கொண்டிருந்தாள். அவையாவன:—

ஸவெவ கிஷாயம் வாஈஷஃ வாராதநொ யவனக ஶுஸீஷ விஶெஷஶாதநி। கஹெ ஶாணெஹொ ஜஶஷாதநீஷெ நிதீவிதாதஷஸி ஸாவஸஷிஷா ॥ ஸனவ ஹரியொ நிஜவீயவொதிதாம ஷுஜீவஶயாம் ஷுக்ஷுதிம் விஸ்ருக்ஷதீம் । கநாஶரவொ தநி ரவெநாஶநீ விபிதஶொநாநாஸஸார ஶாஸ்ருக்ருக॥ ஸவாகயம் யதஃதுஸரயொ ஜிதெஂஜியா நிஜிதஶாதஸிஷுநஃ।

[illegible] ॥ இவற்றின் பொருள் :—

"ஸத்வாதி குணங்களுடைய வைஷம்யத்தால் உண்டாகும் மஹத் அஹங்காரம் முதலானவற்றின் உத்பத்திக்கு முன்னல், நாமரூப விபாகமற்றதும், ஸூக்ஷ்ம தசையுடன் கூடியதுமான ஜகத்துக்கு, ஆதாரபூதனை ஈஸ்வரன், ப்ரக்ருதி, ஜீவன், கர்மம், எனப்பட்ட அவனுடைய ஸகல சக்திகளும் தூங்கும் வண்ணம் இருக்க, யோகநித்ராவஶனுய் நிற்கும் ப்ரளயமாகும் இரவில், சிதசித்ரூபமான அவனது ஶரீரம் நிஷ்ப்ரபஞ்ச தசையாகும் ஸூக்ஷ்மாவஸ்தையுடன் நிற்கையில், அவன் ஒருவனே இருந்தனன் என ஸ்ருதிகளால் உத்கோஷிக்கப்பட்ட, அந்தப் புராதந புருஷனன்றே இந்த ஸ்ரீக்ருஷ்ணன். அவன்தான், மறு

படியும் நாமரூப ரஹிதங்களான ஜீவன்களுக்கு நாமரூபாதிகளை அவற்றிற்குக் கரண களேபர ப்ரதானத்தால் செய்ய இச்சித்த வனுய்க் கொண்டு, தனது வீர்யத்தால் ப்ரேரிதமானதும், அவ னம்சபூதனுன ஜீவனை மோஹிக்கச் செய்வதும், ஸ்ருஷ்டிக்கு அபிமுகமா யிருக்கப்பட்டதுமான ப்ரக்ருதியை, ஸ்ருஷ்டி நிமித் தம் அதிஷ்டானம் செய்தது மன்றி. அந்த ஜீவன்களுக்குக் கார் யாகார்ய நிஸ்சயத்தின் பொருட்டு மாஸ்த்ரத்தையும் அநுக்ர ஹித் தளித்தனன். ஜிதேந்த்ரியர்களும், யோகிகளும், நித்யஸூரி களும் நிரந்தரமான பக்தியுடன் கூடிய புத்தியினல் எவனு டைய பரமபதத்தை ஸாக்ஷாத்கரிக்கின்றார்களோ, அந்த நாரா யணன் தான் இந்த ஸ்ரீக்ருஷ்ணன். ஆதலால், அவன் தூரம் சென்று அவனைப்பற்றி நமக்குண்டான ஜ்ஞானத்தைப் போக்க டிக்கத் தகான். ஓ, ஸகி! யாதொரு ஈமன் ஒருவனே கேவலம் லீலைக்காக ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்துக் காத்துத் தனக்குள் அடக்குகின்று னென்றும், அந்த ஜகத்வ்யாபாரத்தில் ஸங்கமற்று மிருக்கின்றான் என்றும், வேதங்களிலும், உபநிஷத்துக்களிலும், ப்ரஹ்மஸ்வரூப ரஹஸ்யங்களைச் சொல்லுபவர்களாலும், நிரந்தர மாகப் பாடப்பட்ட திவ்ய சரித்ரங்களுடன் கூடினவனே, அவன் தான் இவன். எக்காலங்களில் தமோகுண வ்யாப்தமான புத்தி யுடன் கூடின மன்னர்கள் அதர்ம கார்யங்களைச் செய்துகொண்டு ஜீவிக்கின்றனரோ, யுகந்தோறும் அக்காலங்களில், இந்த ஸ்ரீக்ரு ஷ்ணனே ஜகத்தின் ரக்ஷணத்தின்பொருட்டு அவதார ரூபங் களை ஸ்வீகரித்தவனுய்க்கொண்டு, தர்மத்தையும், ஜ்ஞானம் முத லான தனது கல்யாண குணங்களையும், ஸத்யப்ரதிஜ்ஞையையும், ஸத்சரித்திரத்தையும், பக்தாநுகம்பையையும், அத்புத கீர்த்தியை யும் ப்ரகடநம் செய்கின்றான். எந்தக் காரணங்களால் கேட்பவர்க்கு ப்ரியமான கீர்த்திபொருந்திய இந்தப் புருஷோத்தமன், தனது அவதாரத்தாலும், திருவடித் தாமரைகளின் விந்யாஸத்தாலும், ஸத்காரம் செய்தானே, அந்தக் காரணங்களால் யதுவம்சம் ஸர்வ மங்களமாய் மாயிற்றென்பது என்ன ஆச்சர்யம்? மதுராக் கிருப்பிடமான மதுவனமும் மிகவும் புண்ய ப்ரதேச மாயிற்றென் பது மஹதாஸ்சர்யம்! இன்னும் அத்யாஸ்சர்யம்! த்வாரகையா னது பூமிக்குப் புண்யமான யஸஸ்ஸை உண்டுபண்ணிக்கொண்டு, ஸ்வர்க்கத்தின் யஸஸ்ஸைத் திரஸ்காரம் செய்கின்றதென்பது.

ஏனெனில், அந்நகரவாஸிகள் ப்ரதிதினமும் அநுக்ரஹத்துடன் செலுத்தப்பட்ட ஸ்மித பூர்வாவலோகநத்தை யுடைய தம்முடைய நாதனான ஸ்ரீ க்ருஷ்ணனைப் பார்க்கின்றார்கள். வ்ருத விசேஷங்களாலும், புண்ய ஸ்நாநங்களாலும், ஹோம விசேஷங்களாலும் இந்த ஈச்வரன், அவன் திருவடிகளை ஆச்ரயித்த பத்னீமார்களால் ஜந்மாந்தரங்களில் நன்கு ஆராதிக்கப்பட்டான் என்பது திண்ணம். ஏனெனில், ஓ ஸகிகளே! எவனிடம் பற்றிய மநஸ்கராய்க் கோபகந்நிகைகள் ஸம்மோஹம் அடைந்தனரோ, அவனுடைய அதராம்ருதத்தை அடிக்கடி அவர்கள் பாநம் செய்கின்றனரன்றோ? ஸத்கர்மாநுஷ்டாந மற்றதும், ஸதாசார வர்ஜிதமானதுமான ஸ்த்ரீ ஜந்மத்தையும், இந்த ஸ்ரீ க்ருஷ்ணபத்னீகள் மிகவும் சோபநமாகச் செய்தார்களன்றோ? ஏனென்றால், அந்த ஸ்த்ரீகள் க்ரஹங்களினின்று, அவர்கள் நாதனான புண்டரீகாக்ஷன், அவர்களுக்குப் பாரிஜாதம் முதலான ப்ரிய வஸ்துக்களைக் கொண்டு தந்து ஆநந்தத்தை யுண்டுபண்ணிக்கொண்டு, ஒருபோதும் வெளிப்படாமல் நிற்கின்றான்." இவ்விதம் சொல்லிக்கொண்டிருந்த ஹஸ்தினாபுர ஸ்த்ரீகளுடைய விசித்ர வார்த்தைகளைத் தனது புன்னகையுடன் கூடிய கடாக்ஷத்தால் அநுக்ரஹித்துக்கொண்டு ஸ்ரீஹரி: புறப்பட்டுப் போனார். இவ்விதமாகத் தேவாதிராஜனை, மத்துறு மிகுத்த தயிர் மொய்த்தவெண்ணெய்வைத் ததுணுமத்தனென்று, ஜநகநந்தினி அநுஸந்தித்துக் கொண்டிருக்கையில் பெருமாள் எழுந்தருளிவிட்டார். ஜநகநந்தினியும் தன் தாயுடன் இல்லத்துக்குள் சென்று உரிய தொழில்களைச் செய்துகொண்டிருந்தாள்.

அவளை அன்று கண்டு பேசிய ஸ்ரீநிவாஸன் எனும் சிறுவன் சென்னைமாநகரத்தில் கலாஸங்க மத்யம பரிக்ஷையில் தேறி, பி. ஏ. எனப்பட்ட உத்தம பரிக்ஷைக்காகக் கலாசாலை யொன்றில் படித்துக் கொண்டிருந்தான். அவன் நடாதூர் அம்மாள் திருவம்சத்தில் பிறந்து, வைதிகர் எனப்பட்ட மாதாபிதாக்களை அடைந்தவன். அவன் தாய், கேசவாசார்யர் ஸஹோதரியானபடியால், பந்துத்வ ப்ரயுக்தமான பரிசயத்துடன் ஜநகநந்தினியுடன் ஸம்பாஷித்தனன். அப்பாத்ருசமான அவளுடைய புத்தியாலும், அவளுடைய ஸௌந்தர விக்ரஹத்தாலும் ஆகர்ஷிக்கப்பட்ட சித்

தத்துடன் கூடினவனாய், அவனுடைய தாய்தந்தையர் அவன் விவாஹத்தைப்பற்றி அய்யத்ர எவ்விடத்தில் யோசித்தபோதி லும், அந்த யோசனைக்குக் கொஞ்சமும் இடம் கொடாமல்; தன் மநோபாவத்தையும் அன்று வரையில் அவர்க்கும் தெரி விக்காமல் இருந்தான். அநுராகத்தால் தன் மாதுலன் மகளை அன்று தர்சிக்க வந்தவன், நன்றாக யோசிக்காமல் அவள் மந ஸுக்குத் தாபத்தை யீந்த நிமித்தம் வருத்தப்பட்டான். இனித் தனது மனோரதத்தை வெளிவிடாவிட்டால், அது கார்யத்தில் முடியமாட்டாதென்று நிச்சயித்துத், தன் மாதாபிதாக்களுடன் அதைப்பற்றிப்ரஸ்தாபிக்கக் கருதினான். தன் மாதுலனிடம் தான் வைத்த கௌரவத்தால், அந்த ப்ரஸ்தாபத்தைத் தானே யவ ரிடம் செய்தானில்லை. அவரை விட்டுத் தனதில்லம் சென்றவு டன் தன் தாயான கநகவல்லியைக் கண்டு, "அம்மா! நீண்ட காலமாய் என் மநம் கொண்ட ரஹஸ்யத்தை உன்னிடம் சொல்லு கின்றேன். அப்பாவுடன் யோசித்து அதை நிறைவேற்றத் தக்க ப்ரயத்நத்தை நீ செய்தல் நலம். இவ்வாறன்றி, நீங்கள் எனக்கு விவாஹமென்றொன்றை முடித்தல் முடியமாட்டாது. எந்தப் பெண்ணைப்பற்றி நீங்கள் என்னிடம் சொன்னாலும் பயனில்லை. எனக்கு மனையாள் வேண்டுமென்று நீங்கள் நினைத்தீராகில், ஜநக நந்தினியை அதனிமித்தம் கொள்ளல் வேண்டும். அது உங் கட்கு ஸாத்யமாகாவிட்டால் உங்களுடைய வம்சம் என்னால் வ்ருத்தியாகாதென்பதை அறிந்து கொள்வீர்கள்" என்று சொல் லிவிட்டு வெளியே போய்விட்டான். பெருமாள் எழுந்தருளி விட்டபடியால், அவன் பிதா வரதாசார்யரும் வேதபாராயண கைங்கர்யம் செய்ய ஸந்நிதிக்குப் போய்விட்டார். கனகவல்லி யும் தான் கொஞ்சமும் எதிர்பார்க்காத வண்ணம் புத்ரனு டைய வார்த்தைகளைக் கேட்டுத் திடுக்கிட்டாள். தன்னுடைய தமையன் அதற்கிணங்கமாட்டாரென்று பயந்தாள். அவரிணங்கா விட்டால், தன் புத்ரனுடைய பிடிவாதத்தை நினைக்கவும் பயந் தாள். நின்றவிடத்திலே நின்று, சிறிது காலம் யோசனையில் ஆழ் ந்து இருந்தாள். பிறகு தன்புருஷனுடன் விஷயத்தை ப்ரஸ் தாபிக்க நிஸ்சயித்துக்கொண்டு, வீட்டுவேலைகளைப் பார்க்கச் சென்றனள்.

அன்றிரவு உத்ஸவாநந்தரம் வரதாசார்யர் அகத்துக்கு வந்து சேர்ந்தனர். அப்போது அவர் பார்யை தன்னுடைய மகன் சொன்ன விஷயத்தை அவரிடம் மொழிந்தனள். அதைக்கேட்டு வரதாசார்யர் ஸந்தோஷித்தாரில்லை, "அது ஸாத்ய விஷயமன்றே. ஸாதாரண ஜநங்கள் அந்த ரூபமான ஸம்பந்தங்கள் செய்துகொள்கின்றார்கள். வ்யபதிஷ்டர்கள் அவ்வண்ணம் செய்யமாட்டார்களே. பையனே பிடிவாதம் செய்கின்றனே. நாளைக்குக் காலையில் நாமிருவம் உன் தமயனைப் போய்ப் பார்ப்போம். பகவத் ஸங்கல்பம் இந்த ப்ரயத்நத்துக்கு அநுகூலமாக விருக்குமென்று தோன்றவில்லை" என்று அவர் சொன்னர்.

## மூன்றாவது அதிகாரம்.

திருவஷ்டாக்ஷர த்யாநஸ்லோகத்தின் அர்த்தத்தை ஹ்ருதய கமலத்தில் ஸாக்ஷாத்கரிக்க அநுக்தரான பல முமுக்ஷுக்களிடம் க்ருபை கொண்டு, பேரருளாளன், அந்த ஸ்லோகார்த்தம் மூர்த்தீகரித்ததென, நாலாம் திருநாள் காலை உத்ஸவத்தில் ஸேவை ஸாதிக்கின்றான். நித்யவிபூதியிலன்றி அந்தஸேவை அவ்வண்ணமே அந்யத்ர இவ்வுலகில் கிடைப்பதரிது. அதற்குக் காரணம், முமுக்ஷுக்களும், க்ருதக்ருத்யர்களும், அந்தத் திவ்யதேசத்தை யொத்து, அந்ய ஸ்தலங்களில் அவ்வளவாகக் கூடுதலில்லை. ஆனாலும், நித்ய ஸூரிகள் தர்சிக்கத் தகுந்த தனது ரூபத்தை ஸர்வ பாமரர்களும் தர்சிக்கத் தகாது எனும் திருவுள்ளத்தால் தானே, அர்ச்சகர்களுக்குக் கஷ்டம் கொடாமல், அந்தத் திவ்யரூபத்தைத் தரிக்கின்றானில்லையோ? தன் பரம்பாவத்தை அறியாத பூஜகர்கள், தமக்கு ப்ராயேண ஒரு பலத்தையும் கருதாமலும், அடையாமலும், பரர் தங்களை மெச்சவேண்டுமென்று செய்யும் ப்ரயத்நத்தை உகந்தருளானாலும், அவர்கள் ஸ்ரமப்படுகின்றாரென க்ருபாவசனாகித் தாமஸித்து அந்த ஸேவையை அங்கீகரிக்கின்றானே? அந்த விஷயம் மந்தமதிகளான எமக்கு வெளிப்பட்டிலது. எவ்விதமாயோ, ஸேஷவாஹநத்தில் பெருமாள் எழுந்தருளத் தாமஸிக்கவே, வரதாசார்யரும் அவர் பார்ணியயும் கேசவாசார்யர் நிவாஸத்துக்குச் சென்றார்கள்.

நடையில் உட்கார்ந்து புஸ்தகம் பார்த்துக்கொண்டிருந்த கேசவாசார்யர், வரதாசார்யரைக் கண்டவுடன், "எழுந்தருளவேண்

டும்", என்று சொல்லிக்கொண்டு எழுந்துவிட்டார். உடனே தம்முடைய ஸஹோதரியையும் பார்த்து, "அம்மா! வா, ஏது ஸபத்நீகராய் எழுந்தருளியது? ஏதோ விசேஷம் இருக்கவேண்டுமென்று ஊகிக்கின்றேன். என்ன திருவுள்ளம்?" என்று மொழிந்தார்.

"விசேஷமிருக்கின்றது. வெளியிடவும் கஷ்டமாயிருக்கின்றது. அவள் சொல்லுவள், திருச்செவி சாற்றவும்" என்றனர் வரதாசார்யர்.

"கனகவல்லி! உன் பர்த்தா ஆஜ்ஞாபிக்கின்றார். எந்த அபிப்ராயத்தால் வந்தனை?" என்றனர் கேசவாசார்யர்.

"என்னவென்று சொல்லுவேன்? நேற்று அஸ்தமந ஸமயத்தில் ஸ்ரீநிவாஸன் என்னிடம் வந்தான். தான் விவாஹம் செய்துகொள்ளும் பக்ஷத்தில், ஜநகநந்தினியைத் தவிர்த்து மற்றொரு பெண்ணையும் கல்யாணம் செய்துகொள்ள மாட்டேனென்று என்னுடன் சொல்லிவிட்டுப் போய்விட்டான். ராத்ரி உங்கள் ஜாமாதாவுடன் அதை விஜ்ஞாபித்தேன். அவர் ஆஜ்ஞாபித்தபடி அவருடன் இவ்விடம் வந்திருக்கின்றேன்" என்று கநகவல்லி சொன்னாள்.

உடனே வரதாசார்யரும், "இன்று காலை அடியேன் பையனைப் பார்த்து வார்த்தை சொன்னேன். அவன் அந்த விஷயத்தில் ஒரே பிடிவாதமாக இருக்கின்றான். அவன் க்ஷேமம் தேவரீரையும் பொறுத்ததன்றோ? ஆகலால் அதைத் தேவரீருடன் ப்ரஸ்தாபிக்க வேண்டுமென்று வந்திருக்கின்றோம்" என்று சொன்னார்.

"ப்ரஸ்தாபிக்க வெண்ணிய விஷயத்தின் யுக்தாயுக்த விசாரம் செய்ததா?" என்றார் கேசவாசார்யர்.

"செய்துதான் இவ்விடம் வந்தோம். பையன் நிச்சயத்தை ஸம்சயமின்றி அறிந்த பிறகு, அவன் க்ஷேமத்தை உத்தேசிப்பதன்றோ யுக்தம்? அவன் இஷ்டத்தை நாங்கள் நிறைவேற்றாவிட்டால், அவனுக்கு க்ஷேமம் உண்டாகாது. ஆகலால் அந்த விஷயத்தில் தேவரீரும் அநுகூல யோசனையைப் பண்ணவேண்டுமென்பது அடியேனுடைய ப்ரார்த்தனை" என்று சொன்னார் வரதாசார்யர்.

"பந்துப்ரியர், பந்துக்கள் இஷ்டத்தைச் செய்யவேண்டியதே. தர்மத்தைக் காப்பாற்ற எண்ணுபவர், அக்ருத்யகரணத்தையும் ஆசரிக்கக் கூடாது. ஶாஸ்த்ரம் நிஷேதிக்கும் ஸம்பந்தத்தை எவ்விதம் நான் அங்கீகரிக்கக் கூடும்?" என்று சொன்னர் கேசவாசார்யர்.

"தக்ஷிண தேசத்தில் இப்படிப்பட்ட ஸம்பந்தங்கள் அநுஷ்டாநத்தில வந்துகொண்டிருக்கின்றனவே" என்றனர் வரதாசார்யர்.

"அபிஜாதர்க்குள் ஶிஷ்டாசாரத்தை மதிப்பவர் இப்படி எங்கேயாவது ஸம்பந்தம் செய்துகொண்டதைத் தேவரீர் காட்டக்கூடுமோ? அப்படி யடியேன் செய்துவிட்டால் அடியேனுக்கு க்யாதி விரோதம் வாராதோ? "ஸம்ஸ ஷேர் ணம் க ா ரா செ ரு ஜெர்க்ஷ ரு நிவ த-ெத" எனும் பகவத் வசநத்தை மறந்ததோ?" என்றனர் கேசவாசார்யர்.

"ஆனல் அடியேனுக்கு என்னகதி?" என்றார் வரதாசார்யர்.

"யசோ-ராண ஷேதி தவ்யம்" என்று ஶ்ருதி சொன்னபடியால் ஶிஷ்டாசாரமெனப்பட்ட தர்மத்தை அடியேன் த்யஜிக்கமாட்டேன். ஹிதவசநத்தால் ஸ்ரீநிவாஸன் புத்தியை மாற்றவேண்டும். அந்த ப்ரயத்நத்தைத் தேவரீர் வஹிக்கவேண்டும். அடியேனும் அவனைப் பார்த்தால் சொல்லுகின்றேன்" என்று சொன்னர் கேசவாசார்யர்.

"அடியேன் அந்த ப்ரபத்நத்தைச் செய்தேன். அது பயன்பட வில்லே. தேவரீர் ப்ரபத்நத்தின் ப்ரயோஜநத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றேன். அடியேன் இவ்வண்ணம் தேவரீரிடம் வந்ததை க்ஷமிக்க ப்ரார்த்திக்கிறேன்" என்று சொல்லி எழுந்து விட்டார் வரதாசார்யர். உடனே அவரும் அவர் பத்நீயும் ஸ்வக்ரஹம் சென்றனர்.

உள்ளே யிருந்த ஹரிப்ரியையும் ஜநகநந்தினியும், அவஶமாய் அந்த ஸம்பாஷணையைக் கேட்டார்கள். அவர்கள் இருவரும் கேசவாசார்யரைக் குறித்து மிகவும் பரதந்த்ரர்கள். அந்தப் பாரதந்த்ர

யம் அவர்க்கு அத்யந்தம் இஷ்டமாயிருந்தபடியால், ப்ரஸ்தாப விவாஹ விஷயத்தில் அவர் ஸரியாக நடப்பர் எனும் விஸ்வாஸம் அவர்க்குள் த்ருடமாய் நிலைத்திருந்தது. ஸ்ரீநிவாஸன் தன்னைப் பார்யார்த்தம் அபேக்ஷிக்கின்றான் எனும் விஷயம் அன்று தான் ஜநகநந்தினிக்குத் தெரியும். முதல்நாள் ஸாயங்காலம் அவன் தன்னுடன் ஸம்பாஷிக்கையில், முடிவாகச் சொன்ன சொற்களின் தாத்பர்யத்தை ஜநகநந்தினி கிஞ்சித் யோசித்தாள். பகுநாள் பழக்கத்தால் ஸ்ரீநிவாஸனிடம் அவளுக்கு அபிப்ராயமும், ஓர் உத்தேசத்தைக் குறிக்காமல், அநுகூலமாகவே யிருந்தது. ஆனால் அவனுக்கும் தனக்கும் விவாஹத்தை ஶாஸ்த்ரம் ஸம்மதிக்கமாட்டாது, என்பதையும் யோசித்தாள். தன்னுடைய பிதா தனக்குப் பதியாக யாரை வரித்தபோதிலும், அந்தப் புருஷன் தான் தனக்கேற்ற புருஷனாகத் தக்கவன் என்றும் நிச்சயம் செய்தனள். ஆனால் பிதாவின் நிச்சயத்திற்குத் தான் ஸ்ரீநிவாஸனைப்பற்றி யவருடன் சொன்ன சொற்கள் எம்மட்டும் ஸஹாயம் செய்தனவோ என்பதை எண்ணினளில்லை.

இதற்குள் பெருமாள் ஸந்நிதி வீதியில் எழுந்தருளும் வேளை கிட்டியது. கேசவாசார்யர் வரதாசார்யர் முதலானவர்கள் கைங்கர்யார்த்தம் ஸந்நிதிக்குப் போய்விட்டார்கள். ஜநகநந்தினியும் ஹஸ்திகிரீசனுடைய வீதி ஶோதந கைங்கர்யத்தை ஶ்ரத்தையுடன் முடித்தனள். முன் விவரித்தவண்ணம் உத்ஸவ விபவத்தைத் தர்ஶித்து ஆநந்தம் கொண்டனள். வைகுண்டநாதன் அவன் தான், ஜத்காரணன் அவன்தான், முக்திப்ரதன் அவன்தான் என்று, ஸர்வ ஸம்ஶயங்களும் அறுத்தொழிந்தவண்ணம் தேவாதிராஜன் ஸேவை ஸாதிக்க, ஆஸ்திகர் யார்தான் கண்ணாரக் கண்டுகக்காது நிற்பர்? ஸத்ஸங்கத்தின் பலத்தைப் பூர்ணமாய் அடைந்து அநுபவித்த நம் கதாநாயகி, புளகாங்கிதையாய் எம்பெருமான் ஸௌந்தர்யத்தி லீடுபட்டனள் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இவ்வண்ணம் அவள் திருவடி ஸந்நிதியின் அருகில் நிறுத்தப்பட்ட பரமனை உள்ளடக்கி, வெளிமறந்து, அநுபவிக்குங்கால், சடபட என்றொரு சப்தம் அவள் காதில் விழுந்து அவள் த்யாநத்தைக் கெடுத்துவிட்டது. உடனே மேற்புறம் திரும்பி நோக்கினாள்; போலீஸார் இரண்டு ஸ்ரீவைஷ்ணவச் சிறுவர்களின் கையைப்

பிடித் தழைத்துப் போவதைப் பார்த்தாள். பெருமாள்கோவிலில் பிறந்த பெண்பிள்ளைக்கு அது அத்பாபக ஸம்ப்ரமமென்று ஒருவர் சொல்லவும் வேண்டுமோ? உத்ஸவத்துக்கே அது ஓர் அங்கமாயிருக்கின்றது. ஆதலால், உடனே பெருமாள் அவ்விடத்தினின்று எழுந்தருளிவிட்டார். ஜநகநந்தினி மாதாவைத் தொடர்ந்து இல்லத்துக்குள் சென்றனள்.

பெருமாள் ஸந்நிதிக்குத் திரும்பி எழுந்தருளின பிறகு வேதபாராயண கைங்கர்யத்தை முடித்துவிட்டுக் கேசவாசார்யருங் வரதாசார்யரும் இல்லங்கட்கு வரும்போது, ஸ்வக்ரஹத்தின் வாசலில் ஸ்ரீநிவாஸன் உட்கார்ந்திருந்ததைப் பார்த்து, இருவரும் அவனிடம் சென்றனர். அவர் வருவதைக் கண்டு ஸ்ரீநிவாஸன் எழுந்து நின்றான். கேசவாசார்யரும் வரதாசார்யரும் திண்ணை மீது உட்கார்ந்தனர்.

கேசவாசார்யர், "ஸ்ரீநிவாஸா! நீ ஜநகத்தைப் பார்யார்த்தம் அபேக்ஷித்ததாக உன்னுடைய மாதாபிதாக்கள் சொன்னார்கள்" என்றனர். ஸ்ரீநிவாஸன் "ஆம் அபேக்ஷித்தேன்," என்று விடை தந்தனன்.

பிள்ளாய்! அது ஶாஸ்த்ரநிஷித்தமான ஸம்பந்தம். அதை என்போன்றவர் ஸம்மதிக்க ஏற்கமாட்டாது. நீ படித்தவன்; புத்திசாலி. இப்படிப்பட்ட யோசனை உனக்கு உதிக்கலாமோ? லோகத்தில் பெண்களா கிடையாது? எங்கேயாவது தகுந்ததோர் கந்நிகையைப் பற்றி உன் அபிஸந்தியைத் தெரிவித்தாயாகில், அந்த விஷயத்தில் நாங்கள் ப்ரத்யநபரர் ஆகின்றோம். அக்ருத்யகரணத்தில் நீ பிடிவாதம் செய்யத்தகாது" என்று சொன்னார் கேசவாசார்யர்.

"தேவரீர் ஏன் வீண் ஶ்ரமம் கொள்ளவேண்டும்? 'ஸதாம் ஹி ஸந்தேஹபதேஷு வஸ்துஷு ப்ரமாணம் அந்த:கரணப்ரவ்ருத்தய:' என்று வசநமில்லையா? '[illegible] ஜநா:' தேவரீர் ஸமாதாநம் சொல்லி அதன் ப்ரவ்ருத்தி மாறமாட்டாது. அடியேனுக்கு ஜநகம் கிடைக்காவிட்டால் அடியேனுடைய விவா

ஹத்தைப் பற்றிய ப்ரஸ்தாபம் வேண்டியதில்லை" என்றனன் ஸ்ரீநிவாஸன்.

"ஸம்ஸ்க்ருதம் படித்தது வீண்போகவில்லை. மநஸ் ப்ராயேண இந்த்ரியவஶ்யமா யிருக்கும். அதை யுக்தாயுக்த விசார ஸமர்த்தமான புத்தியால் ஜயிக்கவேண்டும். அப்படிப்பட்ட விசாரத்துக்குப் பெரியவர்களுடைய வார்த்தை அநுகூலம் செய்யும். நீ மநஸ் எனப்பட்ட பேய்க் குரங்குக்கு இடம் கொடுத்து, அது போனவழியை ப்ரமாணமாகக் கொண்டாயாகில் உன் விஷயத்தில் நாங்கள் செய்யக்கூடிய நன்மை யாதொன்றுமில்லை." 'காஜீஷ்வதாம வஶ்ருதி' என்று சொல்லிவிட்டுக் கேசவாசார்யர் எழுந்துவிட்டார். வரதாசார்யரும் எழுந்தார். கேசவாசார்யர் தம்முடைய இல்லம் சென்றனர்.

அதன் பிறகு ஸ்ரீநிவாஸன் யாருடனும் சொல்லாமல் கச்சிநகரை விட்டொழிந்தனன். சென்னையில் அவன் படிக்கும் கலாசாலை மூடிநின்றது. அங்கே அவனுக்கு அப்போது வ்யாபாரம் இல்லை. அவன் போன இடம் அவனுடைய தாய்தந்தையர்க்குத் தெரியவில்லை. அவன் நிமித்தமாக அவர் துக்கத்தி லாழ்ந்தனர்.

ஸ்ரீநிவாஸன் இவ்வண்ணம் போய்விட்டதைக் கேள்வியுற்றுக் கேசவாசார்யரும் வருந்தினர். அதன்மேல் அவர் செய்யத்தக்கதொன்றுமில்லை. ஜநகநந்தினிக்கு ஸ்ரீநிவாஸன் செயல் ஸாதாரணமான வருத்தத்தை யுண்டுபண்ணியது என்றால், உண்மை விளங்காது. தனது விவாஹம் தன் இச்சையால் முடியத் தக்கதன்று என்பது அவளுக்குத் தெரியும். அவளுடைய விவாஹபரம் அவள் பிதாவைச் சேர்ந்தது. அவளுக்காகப் புருஷனை அவர்தான் வரிக்கத் தக்கவர். ஆனபோதிலும், தன்னுடைய அத்தான் தன்னைப் பார்யார்த்தம் விரும்பினதும், அந்த விருப்பம் ஈடேறாத துக்கத்தால் அவன் மறைந்து போனானென்பதும், அவள் மனத்தில் சில கலக்கத்தை விளைவித்தன.

உத்ஸவம் யதாபூர்வம் நடந்தது. பேரருளாளன் சந்த்ரப்ரபையில் அன்றிரவு ஸேவை ஸாதித்தனர். பகவானுடைய திவ்யரூபத்தைத் தர்சித்து அதில் ஈடுபட்டனள் ஜநகநந்தினி. ஆனாலும்

அவள் முகமாகிய சந்த்ரன் ஈஷத் வைகுண்யம் அடைந்திருந்ததை ஹரிப்ரியை கண்டனள்.

"ஜநகம்! என்ன உன் முகம் நித்தம்போல் இல்லையே. கொஞ்சம் வ்யஸநக்குறி தென்படுகின்றதே" என்றனள் ஹரிப்ரியை.

அம்மா! எனக்குத் தெரிந்ததோர் காரணமில்லை. ஸ்ரீநிவாஸன் யாருடனும் சொல்லாமல் எங்கேயோ போய்விட்டானும். அதனால் அக்கையும் அவள்புருஷனும் மிகவும் துக்கப்படுகின்றனராம். அதைக் கேள்வியுற்றேன். அது என் மநத்தில் கொஞ்சம் கலக்கம் உண்டாக்கியது. அக்கலக்கம் முகத்தில் ப்ரதிபலித்திருக்கலாம்" என்று சொன்னாள் ஜநகநந்தினீ.

"என் ஸ்ரீநிவாஸன் அப்படிச் செய்தான்?" என்றனள்தாய்.

"அம்மா! அவர் க்ரஹம் சென்று அதை நீ விசாரிக்கக் கூடாதா? போய் விசாரித்துவா", என்று சொன்னாள் ஜநகநந்தினீ. இதற்குள் பெருமாள் செட்டிவீதி கடந்தார். வேதபாராயண கோஷ்டிகள் நெருங்கவே, அந்த ஸப்த ப்ரஹ்மாநுபவம் செய்துவிட்டு ஹரிப்ரியையும் அவள் மகளும் உள்ளே சென்றனர்.

அன்றையதினம் பூர்ணசந்த்ரன் வானம் நிறைந்து ப்ரகாசித்தனன். சந்த்ரிகையைத் தாங்கிய பதார்த்தங்கள் யாவும் புது நிறம் கொண்டு விளங்கின. உத்ஸவம் பகவானுடையதென் றெண்ணாமல், தங்களுடையதென்று மோஹங்கொண்ட மூடஜநங்கள் களித்து விளையாடினர்கள். புருவ விகாரங்களறியாது, லோக ரீதியை அதிக்ரமிக்காத ப்ரீதியால் புருஷரிடம் ஸ்நேஹம் பாராட்டும் கிராமப்பெண்கள், மல்லிகை மலர்ச்சரங்களை நிரவதிகமாக வாங்கி, அவற்றின் சுமை தாங்காதவண்ணம் தங்கள் கூந்தலின் பின்னல்கட்டுகளைச் சுற்றிச்சுற்றி யணிந்ததுமன்றித் தமது க்ரஹாதிபர்க்கும் குடுமி மயிரெல்லாம் மறையும்படிச் சுற்றினர்கள். வாய் சிவக்க வெற்றிலை பாக்குகளை மூன்றுவதுடன் முழுவாயிலடக்கிக் கொண்டு, புருஷர்க்கும் போதுமான அளவு மெல்லக் கொடுத்துக் கங்கைகொண்டான் மண்டபம் போய்த் திரும்புமளவும் வெண்டிய தாம்பூலத்ரவ்யங்களைக் கைப்பற்றினர்கள். உபபத்திக்குக் குறைவால் வண்டிகளின் மீதேறிமண்டபம்செல்லவழி

யற்ற தம்பதிகள், வேதபாராயண கோஷ்டிகளின் முன்னும் பின்னுமாகச் சிரித்துப் பேசிக்கொண்டு, சீக்கிரமாய் நடந்தனர். க்ருஷியில் பலத்தவர், தமது உழவுமாடுகளையோ கலப்பை மாடுகளையோ கூண்டுவண்டிகளில் கட்டிக்கொண்டு ஸ்வசாக உத்ஸவம் காண ஊரினின்று வந்தவர், மண்டபம் போக வண்டிகளைக் கட்டிக்கொண்டு, ஆறு பெயர் உட்காரத்தக்க விடத்தில் பதினைந்துபேர் ஏறிக்கொண்டு, ஸந்தோஷம் தாங்காமல் ஸவாரி விட்டு வீதியைக் கடந்தனர். நகரப் பெண்களோ காணயம்பெற்ற ஆடைகளைக் கோணுமல் தரிக்கப் பலதரம் உடுத்திக் களைந்து, முடிவான உடை ஸரியாயிருக்கின்றதோவென, முன்னே பலதரம் குனிந்தும் பக்கங்களில் திரும்பியும் பார்த்துவிட்டுக், கண்ணாடிகளைக் கைக்கொண்டு, காதணிகள் அமையவைத்தும், கழுத்தணிகள் விளங்கவைத்தும், அளக ஸம்யமநத்தை ஆதரத்துடன் திருத்தி, முகத்தில் கோணல்கள் முழுதும் நீங்கினதாய் நினைத்துக்கொண்டு, மெல்லியதோர் முல்லைச்சரத்தைக் கூந்தல் கட்டின்மீது வைத்துக், கொஞ்சமாய்த் தாம்பூலமருந்தித், தமது நாகரிகம் நடைபெறவே, மண்டபம் போக நினைத்து வீட்டு வாசல்களில் நின்றனர். இவர்க்குள் சிலரைப் புருஷர் வாடகை வண்டிகள் பேசி ஏற்றிக்கொண்டு மண்டபம் சென்றனர். மற்றோர்க்குப் புருஷர் வண்டிகள் பேசிக்கொண்டுவிட்டு, மண்டபம் நடந்தார்கள். சிலர்க்குப் புருஷர் வண்டிகள் அமைத்துத் தந்துவிட்டு, அவரைக் காட்டிலும் ரஸம் தந்த அந்ய ஸ்த்ரீகள் நிமித்தமாக அந்யத்ர சென்றனர். சிலர் புருஷர் மதிப்புக்கு லக்ஷ்யமானாரில்லை. இவர் தாமே வண்டிகள் அமைத்துக்கொண்டனர். புருஷர் கூடவராத ஸ்த்ரீகளுக்குப் பந்துக்களான இதர புருஷர் மண்டபம் செல்லத் துணையாயினர். சிலர்க்கு ஸ்வபுருஷர்களைக் காட்டிலும் அந்யரே ஸ்நிக்தரா யிருந்தபடியால், அவருடன் கூடி அவர்கள் போயினர். இவ்வண்ணம் பௌர்ணமிதினம் உத்ஸவம், கச்சிமாநகரத்தில் கூடிய ஜனங்களுக்கு உத்ஸாஹ விஷயமாயிற்று. சந்த்ரன் அறியாமல் அவனுக்குள் நின்று, அவனை ஸ்வ ஶரீரமாகக்கொண்டு நியமநம் செய்யும் பரமன் அவ்வுண்மைகளை யாவர்க்கும் தெரிவிக்கத் திருவுள்ளங்கொண்டு, அர்ச்சா ரூபியாய், சந்த்ரபிம்பம் போன்றதொரு வாஹனத்தில் தர்சநம் தந்து, உபநிஷத் கூறிய வண்ணம் "நான் தான்

உமது ஆத்மாவும் அந்தர்யாமியும் ஆகின்றேன். உமது சரீரத்திலிருந்த போதிலும்நான் அம்ருதன்'' என்றுவற்புறுத்தியும்,அவனிடம் புத்தி லயிக்காமல், அவனை வ்யாஜமாகக்கொண்டு,வஸந்தருது, சந்த்ரன், ஸாய்ங்காலம், சந்தநம், புஷ்பம், தாம்பூலம், ஸ்ருங்காரம், இவற்றுள் சிக்கிக்கொண்டு, உத்ஸவம் தமதென்றெண்ணி விளையாடிய ஜநங்களைப்பற்றி என் சொல்வோம்?

இவர்கள் விளையாட்டை வெறுத்த ஹிரண்யன், இவர்களைச் சிக்ஷிக்கக் கருதினன் போலும். வரதாசார்யரும் அவர் பார்யையும் ஸ்ரீநிவாஸன் போனதை நினைத்து வருந்தி வீட்டின்கண்ணே நின்றுவிட்டனர். ஹரிப்ரியையும் ஜநகநந்தினியும் ஸந்தர்ப்பக் குறைவினால் மண்டபம் என்றும் போவதில்லை. ஸ்ரீநிவாஸனைப் பற்றிய யாவும் ஹரிப்ரியை தெரிந்துகொண்டனள். ஆதலால், அவளும்ஜநகமும் கிஞ்சித் வ்யஸநத்துடன் அன்றிரவைப் போக்கினர். இப்படித் தன்னடியாள் முகங்குன்றியதைப் பேரருளாளன் சுளித்தானில்லைபோலும். கச்சி வீதியில் அவன்எழுந்தருளினவுடன், ஆகாசம் மேகங்களால் மூடப்பட்டது. உத்சவம் த்வரிதமாக நடந்து, பெருமாள் கங்கை கொண்டான் மண்டபம் நெருங்குமுன் சிறு தூறல் ஆரம்பித்து விட்டது.பெருமாள் மண்டபத்தில் நுழைந்தார். பெருமழையாய்ப் பரிணமித்தது. வேடிக்கை காணவும், விளையாடவும் வந்த ஜனங்கள் சிதறிப்போயினர். மழையிலடிபட்டு ஒழுகும் வண்டிகளிலேறிக் கஷ்டத்துடன் வீடுகளைப் போய்ச் சேர்ந்தனர். அர்த்த ராத்ரியில் மழை நின்ற பிறகு, பகவான் திரும்பி ஸந்நிதிக்குப் போய்ச் சேர்ந்தனர்.

## நாலாவது அதிகாரம்.

மறுநாள் காலை ஒருசாமப்பொழுதில், பெருமாள் நாச்சியார் திருக்கோலம் தரித்துக்கொண்டவராய்த் திருத்தண்காவில் வேதாந்ததேசிகன் ஸந்நிதியில் எழுந்தருளியிருந்தார். வேதபாராயண கோஷ்டியில் கேசவாசார்யரும், மாதவாசார்யரும், பத்மநாபாசார்யரும் ஒரேஸ்தலத்தில் உட்கார்ந்திருந்தனர். அப்போது பத்மநாபாசார்யர் கேசவாசார்யரைப் பார்த்து, "ஸ்வாமிந்! வரதாசார்யர் தம் குமாரர்க்காகத் தேவரீருடைய கந்நிகையை அபேக்ஷித்ததாகவும், அதற்குத்தேவரீர் ஸம்மதிக்காதபடியால் வரதாசார்யருடைய புதரன் ஊரை விட்டுப் போய்விட்டதாகவும், வரதா

சார்யர் அதனிமித்தம் கைங்கர்யத்துக்கும் எழுந்தருளாமல் மோகாதுரராக இருப்பதாகவும் செவியுற்றேன். விஷயமென்ன?" என்று சொன்னார்.

"விஷயம் தேவரீர் ஸ்ரவணத்துக்கு வந்திருக்க, அதைப் பற்றி அடியேனைக் கேட்பானேன்?" என்றனர் கேசவாசார்யர்.

"அப்படிக்கன்று, ஸ்ருதமான விஷயம் வாஸ்தவமாவென்று கேட்டபடி" என்றார் மாதவாசார்யர்.

"அடியேன் உக்தியால் அதன் வாஸ்தவம் ஏற்படவில்லையா?" என்றார் கேசவாசார்யர்.

"அந்த ஸம்பந்தத்தில் ஏன் திருவுள்ளக்குறைவு?" என்றனர் பத்மநாபாசார்யர்.

"அது அஸங்கதமாயிருந்தால், வரதாசார்யர் அதைப்பற்றித் தேவரீரிடம் ப்ரார்த்தித்திருக்கமாட்டாரே" என்றனர் மாதவாசார்யர்.

"ஆனால் தாத்ருஸ ஸம்பந்தத்தைத் தேவரீர்கள் அப்யுபகமம் செய்கின்றாற்போலிருக்கின்றதே" என்றார் கேசவாசார்யர்.

"வரதாசார்யருடைய புத்ரன் தேவரீர் புத்ரியைத்தவிர மற்றொரு கந்நிகையை மணப்பதில்லையென்று அத்யவஸித்திருக்கின்றானாம். அவனைப் பெற்றவர் புத்ரப்ரேமையினால் அவ்வித ஸம்பந்தத்தை அபேக்ஷிக்கின்றார்கள். த்ராவிடதேசத்தில் அது ஆசாரத்திலிருக்கின்றது. ஆனபடியால் தேவரீர் ஸஹோதரி புத்ரன் விஷயத்தில் ஈஷத் க்ருபை பண்ணக்கூடாதா?" என்றார் பத்மநாபாசார்யர்.

"ஆனால் தேவரீர்கள் இந்த ரூபமான விவாஹ விஷயத்தில் யுக்தாயுக்தவிசாரம் செய்து நிர்த்தாரணம் செய்துவிட்டதாக யோசிக்கின்றேன்" என்று சொன்னார் கேசவாசார்யர்.

"அவர்கள் கஷ்டப்படுகிறார்களென்றும், விவாஹம் நடந்தால் மிகுந்த வித்யாஸம் தென்படவில்லையென்றும், யோசித்தோம். தர்மசாஸ்த்ர நிஷேதத்துக்குத் தேசாசாரம் பரிஹாரமெனவும் நினைத்தோம்" என்று சொன்னார் பத்மநாபாசார்யர்.

"ஸஹோதரி கஷ்டம் அடியேனுக்குத் தெரியாதா? அவளும் வரதாசார்யரும் வருந்தினால், தேவரீர்கள் வருந்திய அளவு

அடியேன் வருந்தமாட்டேனே? சாஸ்த்ர நிஷேதத்தை ஒப்புக்கொண்டதே தஸாஙு ஶாஸ்த்ரம் புராணம் சு காய-ாகாய-வ்யவஸ்திதௌ। ஜ்ஞாத்வா ஶாஸ்த்ரவிதாநோக்தம் கர்ம கர்துமிஹாஹஸி" எனும் பகவத்வசனத்தை ஸ்மரித்ததோ? தேசாசாரமென்று சொன்னது ஶிஷ்டாசாரமெனத் தக்கதோ? ஶிஷ்டாசாரம் இதை ஸம்மதித்தது எங்கேயாவது தேவரீர்கள் கண்டதுண்டோ? அடியேன் தேசாசாரமென்பதை அநுஷ்டித்துவிட்டால், ஶிஷ்டரெனப் பெயர்கொண்டவர்கள் ஶாஸ்த்ரவிபஸ்சித்வத்தை ஸ்வவிஷயத்தில் கொண்டாடுகின்றதில்லையென்று தேவரீர்களே சொல்ல நேரிடாதோ?" என்று சொன்னார் கேசவாசார்யர்.

"தேவரீர் கந்நிகைக்கு விவாஹம் விளம்பிக்கின்றதே. அதைப்பற்றித் தேவரீர் யோசித்துத்தானிருக்கவேண்டும். வரதாசார்யர் குமாரர்க்கும் கொடுக்கத் தேவரீர் ஸம்மதிக்கவில்லையே. குழந்தையை எவ்விடம் தானம் செய்ய எண்ணியிருக்கின்றது?" என்று சொன்னார் மாதவாசார்யர்.

"தானம் செய்ய அடியேன் ஸித்தமாயிருக்கின்றேன். ப்ரதிக்ரஹீதாவைத் தான் காணவில்லை. அடியேனுக்கும் அதனிமித்தமாகத் தேசாடநம் செய்யச் சக்தியில்லை. அடியேனைக்காட்டிலும் ஸமர்த்தர்களாயிருக்கும் தேவரீர்கள் அடியேனுக்கு ஸஹாயம் செய்யக்கூடாதோ?" என்றனர் கேசவாசார்யர்.

"அடியோங்கள் விசாரிக்கின்றோம்." என்றனர் பத்மநாபாசார்யர். இதற்குள் திருச்சிந்நம் ஊதிவிட்டார்கள். வரதன் தேசிகன் ஸந்நிதியை விட்டு எழுந்தருளிவிட்டார். மேல்விவரித்தபடி ஸம்பாஷித்த மூவரும் கைங்கர்யார்த்தம் வேதகோஷ்டியை அலங்கரித்தனர்.

"ஜயதி தைவிகம் ஜநநாவ்ருஜம் ஶ்ருயத ஜம்ஞிஶா ஶஸ்வஙுத்ருஷி" - இந்த ஶ்லோகார்த்தம் ஆறாவது திருநாள் காலையில் எவனுக்கு மனம்படாதோ, அவன் ஜந்மம் வ்ருதா. பெருமாளை ஸேவித்துவிட்டு அவன் தான் இவன் என்றெண்ணுதக் கன்னெஞ்சும் இருக்குமோ? இப்போது. 'யதோவா ஜநோநி ஹமேதாநி ஜாயம்

தே" எனும் ஶ்ருத்யர்த்தம் இவனிடந்தான் பொருந்தும் என்று யோசிக்க வேண்டாம்; 'ஸத்யம் ஜ்ஞாநமநந்தம்' எனும் தர்மங்களால் நிருபிக்கப்பட்ட ஸ்வரூபவான் இவன் தானென்றும் எண்ணவேண்டாம்; 'யதோ வாசோ நிவர்த்தந்தே' என்று அவனைப்பற்றி நினைத்துப் பயம் கொள்ளவேண்டாம்; அவன் வைபவம் அஸ்மதாதிகளுக்கு எப்படித் தெரியுமென்று வ்யஸநப்படவும் வேண்டாம். ஒவ்வொருவரும் யாவர் கண்கட்கு மிலக்கான வெம்பெருமானைத் தயிதனென்றல்லோ அப்போது கொள்ள வேண்டும். இப்போது நம்முன் ஸேவை ஸாதிக்கும் ஸுந்தர விக்ரஹத்தை ப்ருந்தாவநத்தில் தர்ஶித்த வ்ரஜாங்கனைகள் அவ்வண்ண மன்றோ ஸம்புத்தி செய்தார்கள். விஷ்ணுராதனும் ஸ்ரீ ஶுகரைப்பார்த்து, 'க்ருஷ்ணம் விது: பரம் காந்தம் ந து ப்ரஹ்மதயா முநே' என்று சொன்னானன்றோ? அவனைக் கேவலம் காந்தனை யெண்ணினார்கள். ஏன் அவர் ப்ரஹ்மமென்று எண்ண வேண்டும்? ப்ரஹ்மம் யாதென்றால், 'யதோ வா இமாநி' என்றாரம்பித்து, 'தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்மேதி' என்று முடியும் ஶ்ருத்யர்த்தம் விசாரித்தன்றோ அது ஏற்படும்? அதற்காக 'ஜந்மாத்யஸ்ய யத:' என்கிற ஸூத்ர பாஷ்யமும் காலக்ஷேபம் செய்ய வேண்டு மன்றோ? இப்படி ஜகத்காரணனென்றும், அந்தர்யாமியென்றும், அம்ருதப்ரதனென்றும், பரமம் மஹேஶ்வரமென்றும், பரப்ரஹ்மமென்றும் அறியவல்லவர் அறியட்டும். கோபீஜநவல்லபன் தன்னைக் காந்தனாய் வரித்தவர்க்கு அந்தக் கஷ்டமெல்லாம் வேண்டாவாம். அவனைத் தயிதனென்றும் காந்தனென்றும் அடைந்தவர்க்குத் 'தய்' எனும் தாதுவின் அர்த்தத்தால் ஸித்தித்த் பரமக்ருபையை அவனே பண்ணக் காத்திருக்கின்றான். இவ்வண்ணம் பகவான் ஸந்நிதிவீதியி லெழுந்தருளவே, "அவன்தான் இக்கச்சியூரில் அவதரித்தான். அதனால் அவ்வூர் உயர்ந்தது. மஹாலக்ஷ்மியும் அந்தக் காரணத்தால் அந்நகரத்தை விடாமல அலங்கரித்து நிற்கின்றாள்" என்றல்லவோ அவனழகில் ஈடுபட்ட

ஜநங்கள் சிந்திக்க வேண்டும் 'ந்ருணாம் நிஶ்ஶ்ரேயஸார்த்தாய வ்யக்திர்பகவதோ ந்ருப' எனும் வண்ணம், தர்சிக்கப்பட்டவர்க்குப் பரமபுருஷார்த்தப்ரதனை கோபாலனைய் வரதன் ஸேவை ஸாதிக்கின்றான்.

" நீரகத்தாய் நெடுவரையி னுச்சிமேலாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய் நிறைந்தகச்சி
ஊரகத்தாய் ஒண்துறைநீர் வெஃகாவுள்ளாய்
உள்ளுவா ருள்ளத்தாய் உலகமேத்தும்
காரகத்தாய் கார்வானத் துள்ளாய்கள்வா
காமருபூங் காவிரியின் தென்பால்மன்னு
பேரகத்தாய் பேராதென் னெஞ்சினுள்ளாய்
பெருமானுன் திருவடியே பேணினேனே".

எனும் வண்ணம் நெடுவரையின் உச்சி மேலோன் கச்சியில் பலவுருவாய் நிறைந்து நின்று, பின் உள்ளுவார் உள்ளத்தானாகி, அங்கும் பேராதிருக்கும் திருவுருவைக் கொள்ளக் கண்ட ஜனங்கள் கோபிஜநபாவத்தை மநஸ்ஸால் அடைந்து,

கல்லெடுத்துக் கன்மாரி காத்தாயென்றும்
காமருபூஞ் சச்சியூ ரகத்தாயென்றும்
வில்லிறுத்து மெல்லியள்தோள் தோய்ந்தாயென்றும்
வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தேயென்றும்
மல்லடர்த்து மல்லரையன் றட்டாயென்றும்
மாகீண்ட கைதலத்தென் மைந்தாவென்றும்
சொல்லெடுத்துத் தன்கிளியைச் சொல்லேயென்று
துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின்றாளே.

எனும் வண்ணம் மனமுருகப்போகாதோ? மற்றவர் அநுபவம் எங்ஙனமாகிலு மிருக்கட்டும். ஜநகநந்திநி இவ்வண்ணமெல்லாம் பகவானைக்கண்டு சிந்தித்தாள்; உட்கொண்டாள்; அவ்விடம் விட்டுப் போமனை யநுபவித்தாள். 'ஸ்திதே நிஷண்ணே யஸ்மிந் க்ருஷ்ண: ஸஹஸஹாயவாந் விராஜதே' என்று தேசிகன் ஸாதித்தது அவளுக்குப் பலித்தது. 'யதா ஹி தவாரா வம்ஶநாஶா

ஃகூ-டாயுஂஷி ஃய-ஒுஷவிஂஊஃரேயுாஃ। ஊுஸிநீயுஸியாவிஹஂஓநீயுாஃ வ்ருதிஹாஸுஂதஃ ஃஃரோஂதிஃவ்யாணெ।' என்று கோபால விம்சதி ஸ்லோகத்தை அநுஸந்தித்தனள்,

பெருமாள் மண்டபமேற எழுந்தருளித் திரும்புங்கால், மீளவும் ஸன்னிதி வீதி யலங்கரித்தபோது மலர்வர்க்கம் வாடி நீண்ட மென்மாலைத் தோளசையவும், ஸ்ரீபாதம் தாங்கியவர் அடிவைப்பால் கிளம்பியுயர்ந்த வீதியின் ரேணுக்களால் மலினமடைந்த கொண்டையும் திருமேனியும் ஸேவிப்பவர்களுடைய த்ருஷ்டிகளையும் உள்ளங்களையும் கவரவும், எம்பெருமான் வேகமே நடப்பதை நோக்கி, நம் கதாநாயகி "இந்தப் பாக்யம் எனக்கருளிய லோகநாதன் இதன் மேல் என்ன பாக்யம் தான் தரப்போகின்ருன்" எனச் சிந்தித்து நின்றனள்.

அவள் சிந்தித்தவண்ணம், அவளுக்கு அநுக்ரஹிக்க ஸங்கல்பித்த மஹாதயாநிதி ஸ்ரீ அயோத்யா ஜநங்கள் 'ஊஹாரொோஹி ஃஹாவாஹுஂ ஈவ-ஃவீஈஂ ஃஹாவயுஂ। ஓஜெநஃஹூதா யாஂதஂ ஈாஃஂ ஊதூாவ்ருதாநநஂ।' என ப்ரார்த்தித்துப் பெறுத பாக்யத்தை அவளுக்குத் தரக் கருதினன். அவ்வண்ணம் பெருமாளை அன்று ஸாயங்காலம் ஸந்நிதி வீதியில் ஜநகநந்தினி தர்ஸித்தனள். நாற்புறமும் சூழ்ந்து நடந்த ஜநக்கூட்டமாகின்ற ஸமுத்ரத்தின்மீது, ஜலத்தின் மேல் நிஸ்சலமாய் ஸஞ்சரிக்கும் நாவமெனக் கஜேந்த்ரன் நிஸ்சலமாய் வஹிக்கப்பட்டானுதலால், பெருமாள்ஸேவை யாவர்க்கும் த்ருப்தியாய் லபித்தது.

ஸாயங்காலம் ஸந்நிதிக்குச் செல்வதற்கு முன், கேசவாசார்யர் ஜநகநந்தினியை அழைத்து, "குழந்தாய்! உனக்கு விவாஹோசிதகாலம் கடக்கின்றது. காலதேச வைகுண்யத்தால் தக்க வரன் கிடைப்பது கஷ்டமாயிருக்கின்றது. உனக்குப் பன்னிரண்டு பிராயம் முடியப்போகின்றது. உனக்கு ஐஹிக விஷயங்களிலும் ஸாமாந்யமான பெண்களைக்காட்டிலும் ஜ்ஞாநம் விசேஷித்திருக்கின்றது. என்னுடைய ப்ரயத்நம் உன்னுடைய க்ஷேமத்தை முக்ய லக்ஷ்யமாயுடையது. ஆதலால் உனது பாலம் இருக்

கின்றபடியைச் சொன்னாயானால், அதற்கு அநுகூலமாக நானும் ப்ரயத்நம் செய்கின்றேன்" என்று சொன்னார்.

இதைக்கேட்டு ஜநகநந்தினியும் "அப்பா! அடியேனை இப்படித் தேவரீர் கேட்கலாமோ? அடியேன் ப்ரஹ்மகுலத்தில் ஜநித்தேன்; அதிலும் தேவரீர் புத்ரியாகப் பிறந்தேன். அடியேனுக்கு அபாந்தவ க்ருதமான ஸ்நேஹப்ரவ்ருத்தி யுண்டாகமாட்டாதே. அடியேனுக்கு விவாஹப்ரயுக்தமாக யாதொரு வ்யக்தி விசேஷத்திலும் பாவம் உதிக்கவில்லை. அது தேவரீருடைய திருவுள்ளத்தை அநுஸரித்துப் பின்னால் ஏற்படும்" என்றுசொன்னாள்.

"குழந்தாய்! ஸ்ரீநிவாசன் உன்னையே விவாஹம் செய்துகொள்வதாக நிச்சயம் செய்துகொண்டு, அதற்கு நான் ஸம்மதிக்காத காரணத்தினால், இந்த ஊரைவிட்டு எங்கேயோ போய்விட்டானாம். அதனிமித்தம் உன் அத்தையும் அவள் பர்த்தாவும் வ்யஸநத்தில், மூழ்கியிருக்கின்றார்கள். எனக்கும் அதைப்பற்றி வருத்தமாயிருக்கின்றது. அவனுக்கு உன்னைத் தாநம் செய்வதில் ஶாஸ்த்ரம் நிஷேதிக்கின்றது எனக்கும் ஜ்யாதிவிரோதம் உண்டாகும். ஆனாலும் உனக்கு அவனைப் பர்த்தாவாக அடைய விருப்பம் உண்டானால் சொல். உன் க்ஷேமத்தின் பொருட்டு மேற்சொன்ன ப்ரதிபந்தங்களை நான் பாராட்டாமல் விடுகின்றேன்" என்று சொன்னார் கேசவாசார்யர்.

"அப்பா! பந்துத்வப்ரயுக்தமான பரிசயம் தவிர வேறு விதமான விருப்பம் அவனிடம் அடியேனுக்கில்லை. ஆதலால் தேவரீர் வேறு யோசனை செய்து ஶாஸ்த்ரத்தையும் திரஸ்கரிக்க வேண்டாம்; ஜ்யாதிவிரோதமும் ஸம்பாதிக்கவேண்டாம். தேவரீர் எந்தவரனைப்பார்த்து அடியேனைத் தாநம் செய்தாலும் ஸரியே; அந்தப் புருஷனையே அடியேன் பர்த்தாவாக விஶ்வஸித்துப் பூஜிக்க ஸித்தமாயிருக்கின்றேன்" என்று ஜநகநந்தினி மொழிந்தாள். கேசவாசார்யர் உடனே ஸந்நிதிக்குச் சென்றார்.

வைசாக உத்ஸவத்தின் விபவம், யானை வாஹநத்தின்மீது வரதன் முரங்கன்வீதி எழுந்தருளிக் கச்சிவீதியில் திரும்பிக் கச்சீஶ்வரன் கோவில் முன்பாகப் பூப்பந்தலின் கீழ் அமர்ந்தகாலையில் ப்ரகாசிப்பது போல், வேறு அவஸரங்களில் ப்ரகாசிக்கமாட்

டாது. அன்றும், பெருமாள் அந்த ராஜவீதியை மெள்ளமெள்ளக் கடந்து, மண்டபத்தின் கீழ்ப்புறமாக ஏகாம்ரேசன் ஆலயத்தின்முன் சென்றபோதன்றே அவ்விபவத்தின் பரமாவதி ஏற்படுகின்றது. அங்கே நடப்பதை ஏசலென்பார். யாரைப் பார்த்துப் பகவான் ஏசவேண்டும்? ஏகாம்ரநாதனை நோக்கி "என்னைப் பார், என்னழகைப்பார்; உன்னைப்பார், உன்னுருவைப்பார்" என்று சொல்லவா தேவாதிராஜன் அங்கு சென்றனன்? இரண்டு நாள் அவன் அங்கேகிச் சங்கரனை ஏசவும், ஒருநாள் அவனை ஏசச் சங்கரன் பரிவாரத்துடன் விஷ்ணுகாஞ்சிக்குச் செல்லவும், யார் ஏற்பாடு செய்தார்களோ தெரியோம். மந்தமதிகள் களித்துத் தமக்கு உள்ள அறிவையும் இழந்து, பித்தம் தலைக்கேற இவை ஸமயமாகின்றன. ஸ்தலபுராண ப்ரகாரம், தன் அநுக்ரஹத்தையடைந்த பார்வதிக்கும், அவள் தவம் முடிவுபெற்ற பலனாக வந்து அவளை மணம்புரிந்த த்ரிலோசநனுக்கும், வருஷத்துக்கொருதரம் ஸேவை ஸாதிக்க எழுந்தருளினனென்றால் பொருந்தும். மற்றவையெல்லாம் மநுஷ்யக்ருதம். 'ப்ரஹ்மவிஷ்ணுஶிவாக்யாம் ஸஸஂஜ்ஞாம் யாதி பகவாநேக ஏவ ஜநார்தநஃ", என்றும், "ப்ரஹ்மத்வே ஸ்ருஜதே ஸர்வம் ஸ்திதௌ பாலயதே புநஃ । ருத்ரரூபாய கல்பாந்தே' என்றும், "ஸ்ருஷ்டிஸ்திதிவிநாஶாநாம்ஶ்ச பகவாந் மதுஸூதநஃ। தைஸ்தைரூபைரசிந்த்யாத்மா கரோதி," என்றும், ஸ்ரீ விஷ்ணுபுராண வசநங்களை ஆதரித்துத் தேவாதிராஜன் தானே சங்கரனாக, அவதரித்த உண்மையை அது தெரியாதவர்க்கு உணர்த்தும்படி ஏகாம்ரநாதன் கோவில்முன் சென்று காட்டுகின்றானெனக்கூடும். இந்த விஷயம் எங்ஙனமாகிலும், ஒரு மாவின் கீழமர்ந்த தேவன்கோவில் உருவமைந்த மண்டபத்தினுள்ளே நிற்கும், கரிமாவின் மேலிருந்த கடவுள் தன்னைக் கண்ணாரக் கண்டுகக்கும் காதல்தன்னால், அத்தெருமாண்ட கூட்டத்தையும், தீவட்டி வெளிச்சத்தையும, மத்தாப்பூவின் மிகுந்த ப்ரகாசத்தையும், மற்ற ஸந்நிவேதத்தையும் ஒருதரம் கண்டவர், வாழ்நாள் முழுவதும் அவற்றை மறக்க முடியாது.

இப்படி ஏசல் என்பது முடிந்தது. பெருமாளும் கங்கைகொண்டான் மண்டபத்தில் எழுந்தருளினார்.

மங்களத்தீர்த்தக் கரையில் கேசவாசார்யர் போய் உட்கார்ந்தனர். உடனே பத்மநாபாசார்யரும் அதே ஸ்தலத்தில் வந்து உட்கார்ந்தார். அவர் கேசவாசார்யரைப் பார்த்து, "ஸ்வாமிந்! நாவல்பாக்கம் ராமாநுஜாசார்யர் உத்ஸவத்திற்கு எழுந்தருளியிருக்கிறார். அவருடைய ஜேஷ்டகுமாரன் வீரராகவனும் வந்திருக்கின்றான். அவன் மைஸூர் பாடசாலையில் தர்க்கம் வ்யாகாரணம் இரண்டிலும் நல்ல பாண்டித்யத்தை ஸம்பாதித்துக்கொண்டு இவ்விடம் வந்திருக்கின்றான். தேவரீருடைய கந்நிகைக்குத் தக்கவனாக அடியேனுக்குத் தோற்றுகின்றது" என்று சொன்னார்.

"பிள்ளையைக் கடாக்ஷித்ததோ?" என்றார் கேசவாசார்யர்.

"பிள்ளையைப் பார்த்தேன். அவனுக்கு இருபது இருபத்திரண்டு வயஸ் இருக்கும். பார்வைக்கு விலக்ஷணமாயும் இருக்கின்றான்" என்று சொன்னார் பத்மநாபாசார்யர்.

"தேவரீருடைய உக்திகள் திருப்தியாயிருக்கின்றன. அந்த ஸ்வாமியோடு இந்த விஷயத்தைப் பற்றி யாதேனும் ப்ரஸ்தாபித்ததுண்டோ?" என்று கேட்டார் கேசவாசார்யர்.

"ஸாக்ஷாத்தாக ப்ரஸ்தாபிக்கவில்லை. பிள்ளையினுடைய யோக்யதையைப் பற்றி ஸம்பாஷிக்கையில், அவனுக்கு க்ரஹஸ்தாஸ்ரமத்தை ஸம்பாதித்துக்கொள்ள யுக்த வயஸ் வந்துவிட்டதாகவும், தகுந்த கந்நிகை நேரிட்டால் விவாஹம் செய்துவிடலாமென்றும் அந்த ஸ்வாமி அபிப்ராயப்படுகின்றார்" என்றனர் பத்மநாபாசார்யர்.

"நாளை மத்யாஹ்நம், அடியேனுடைய க்ரஹத்துக்கு க்ருபைசெய்து எழுந்தருளினால், இரண்டுபேரும் அந்த ஸ்வாமியைப் போய்த் தண்டன் ஸமர்ப்பித்து விஷயத்தைப் ப்ரஸ்தாபிப்போம்" என்று சொல்லி முடித்தார் கேசவாசார்யர்.

## ஐந்தாவது அதிகாரம்.

ஆறும் திருநாள் அர்த்தராத்ரியில் பகவான் ஸந்நிதிக்குத் திரும்பினார். ஸந்நிதி கிங்கரர்க்கு நித்ரைபோவதற்கு அவகாஶமில்லை. வேதபாராயணம் செய்பவரும் நேரிட்டவிடங்களில் சிறிதுகாலம் ஶயநித்துக்கொண்டனர். உத்ஸவ விபவங்களால் ஆகர்ஷிக்கப்பட்ட மநஸுடன் கூடினவர்க்கு நித்ரையென்பது நிலைத்துவராதென்பது அநுபவஸித்தம். அதுவுமன்றிப் பகவான்

ரதாரோஹணத்துக்காக எழுந்தருளப்போகின்றான் என்பதை நக ரத்தில் யாவரும் அறியவேண்டி, வெடிமருந்தின் வ்ரயத்தை மிகு தியாக அன்றிரவு செய்துகொண்டிருந்தனர். மூன்றாவது யாமம் முடிவுறுமெல்லை அடுக்குப்பட்ரை போட்டுவிட்டார்கள். உடனே துயிலெழுந்து நின்ற யாவரும் ஸந்நிதிக்குள் வெள்ளை வெளிச்சத் தைக் கண்டனர்; மணியோசையும் கேட்டனர்; க்ஷணத்துக் குள்ளாக அத்புதமான ஸேவையுடன் வரதனும் ஸேவைஸாதித்த னன். பெருமாள் தர்சநபதமாயினர் என்று சிந்திப்பதற்குள், சிந் தித்தவர் நிற்குமிடத்தைக் கடந்து எழுந்தருளிவிட்டார். பின் தொடர்வதற்கும், தக்க வலியற்றவர் பகவானைப் பின்தொடர ஸமர்த்தராகவில்லை. எவரும் அவனுடைய திருக்கோலத்தைக் கண்டு மகிழக் காலம் நேரவில்லை. பின்னிருந்தவர் முன்போட யத்தநித்து, ஒருவரை யொருவர் தள்ளிக்கொண்டுபோய் முன்னே நிற்கவும், கண்ணில்பட்ட எம்பெருமான், மேகத்தின்கண் ஓடு கின்ற மின்னலையொத்துக் கண்பட்டும், படாமல் எழுந்தருளிவிட் டான். பெருமாள் முன் சென்றவர்கட்கு வேகமாய்நடக்க அமை ந்ததேயன்றித் திரும்பிப் பெருமானைத் தர்சிக்க அமைந்திலது. இப்படி ஆதுரப்பட்ட ஜநங்களிடம் க்ருபைகொண்ட ஸர்வேஸ் வரன், அவர்கள் அநுக்ரஹ நிமித்தமாக அங்கங்கு சிறிது நின்று நின்று போயினன்.

இவ்வேகமேன்? இந்த அவஸரம் எதற்கு? இப்படிக் கேட்ட ஜநங்கட்கு ரதாரோஹணத்திற்கு லக்நம் தவறக்கூடாதெனப் பக வான் வேகமே எழுந்தருளலாயிற்றென்பர் ஸந்நிதிகிங்கரர். அங் ஙனமாகில், சற்றுமுன்னாகவே எழுந்தருளத்தகாதோ வென்றால், "ஆறுந்திருநாள் உத்ஸவம் முடிய ஸாவகாசமாயிற்று; உடனே பெருமாள் ரதோத்ஸவத்திற்கு எழுந்தருள வேண்டும்; யார் தூங்கினார்கள்? எங்களுடைய கஷ்டத்தை யார் மதிக்கின்றார்கள்?" என்பார் கிங்கரர். இதெல்லாம் லோகத்ருஷ்டி., அர்ச்சாரூபியாக ஸேவைஸாதிக்கும் பரமாத்மா, அவனது கிங்கரரெனப்பட்டவ ருடைய இஷ்டங்கட்குப் வ்யாபாரங்கட்கும் அடங்கினவன் ஆகின் றான். விபவாவதாரங்களில் ஸாது பரித்ராணாய அவ தரிப்பதுபோல், அர்ச்சைகளில் அவன் அவதரணம் செய்கின்றா னில்லை. அர்ச்சாவதாரங்களைக்கொண்டு பகவான் யாதொரு

ஸாதுபரித்ராண துஷ்டநிக்ரஹரூபமான வ்யாபாரங்கள் செய்கின்றானில்லை. தனது ஸர்வஶக்திவிஶிஷ்ட ஸ்வரூப ப்ரகடநமும் பண்ணுகிறானில்லை. ஆக, விபவாவதாரங்களுக்கும், இவற்றுக்கும் ஸமாநமான அம்ஸம் யாதெனில், அகர்மவஶ்யத்வமும், ஜகத்தின் உபகாரமும் தான். அங்கே, லோகஹிதம் அவனுக்கே உரியதான ரக்ஷண வ்யாபாரத்தில் அந்தர்கதங்களான ஸாது பரித்ராணம், துஷ்டநிக்ரஹம், தர்மஸ்தாபநம் இத்யாதிகளாய் ப்ரகாசிக்கின்றது. இங்கே, அது அவனுடைய பக்தர் தர்சித்து அநுபவிக்க யோக்யமாவதும், தர்சிக்காத காலத்தில் த்யாநவிஷயமாவதும், உசிதமான கைங்கர்யங்கள் செய்ய இடங்கொடுப்பதும், ஆகிய இந்த ரூபங்களுடன் அமைகின்றது. ஆதலால், அடியார் ரஸித்தபடி அநுபவம் செய்வதாகின்ற ஹிதம் ஒன்றை உத்தேஶித்து, 'பிம்பாக்ருத்யா து நா பிம்பே ஸோமத்யாவதிஷ்டதி' என்னும்படி, அர்ச்சையைப்போன்ற அப்ராக்ருதரூபத்தைத் தரித்தவனைக்கொண்டு, அர்ச்சையில் ஸாந்நித்யம் செய்கின்றான். இந்த உண்மையைக் கோவில் பரிஜநங்கள் ப்ராபேண பராமர்சிப்பதில்லை. பராமர்சிப்பவர்க்குத் தத்காலம் எம்பெருமானைத் தர்சித்து ஸ்புரிக்கும் யோசனைகளை இவ்விடம் விவரிக்கிறோம்?

பாணன் முதலானவர்களுடன் யுத்தம் செய்யப் போனபோதும், ருக்மிணியின் ப்ரார்த்தனைக்கு இணங்கி அவளை ரக்ஷிக்கச் சென்றபோதும், பகவான் ரதமேறிச் சென்றனர். அந்த அவஸரங்களில், அநிருத்தனைப் பாணன் வஸத்தினின்று மீட்பதற்கும், சேதிக்கோனையும் அவன் மித்ரர்களையும் நிராகரித்து ருக்மிணியை அழைத்துக்கொண்டு போவதற்கும், பரமனுக்கு த்வரையுடன் ரதாரோஹணம் செய்ய நேர்ந்ததென்றால், அத்தகைய த்வரை இப்போதுண்டாவானேன்?

உபநிஷத்தில், சரீரத்தை ரதமாகவும், ஆத்மாவை ரதியாகவும், புத்தியை ஸாரதியாகவும், மநஸ்ஸைக் கடிவாளமாகவும், குதிரைகளை இந்த்ரியங்களாகவும், விஷயங்களை மார்க்கங்களாகவும் வர்ணித்து, ஸாரதிரூபமான புத்தியைக்கொண்டு மநஸ்ஸை ஸ்வாதீநத்தில் வைத்துக்கொள்பவனுக்கு, இந்த்ரியங்களை அடக்கியாளப் பொருந்துமென்றும், அவன்தான் ஸம்ஸாரசக்ரத்தைத் தாண்டி முமுக்ஷுக்களால் ப்ராப்யமான விஷ்ணுவின் பரமபதத்

தை அடைகின்றுனென்றும் சொல்லியிருக்கின்றது. அர்ஜுநரதத்தில் பகவான் ஸாரதியாய் எழுந்தருளியிருந்து, அவனுக்கு ஜ்ஞானோபதேசம் செய்ததும், காயத்ரீ மஹாமந்ரப்படி, யாவர்க்கும் புத்திப்ரேரகனுப் அவன் இருப்பதையிட்டு ஒருவாறுகப்பொருந்தலாம். ஆனுல் புத்திக்கு அபிமாநி தேவதையான ப்ரஹ்மா ஸாரதியாகவும், மநஸ்ஸின் ஏகதேசமான அஹங்காராபிமாநிதேவதையான ருத்ரன் கடிவாளமாகவும், இந்த்ரியாபிமாநிதேவதைகளான இதர தேவர் குதிரைகளாகவும், ப்ரபஞ்சமே விஷயமாகவும், அமைந்த ரதத்தில் பரதேவதையான வரதன் எழுந்தருள த்வரைகொண்டதென்னே?

கலிகாலத்தில் லோகம் மிகவும் விஷயாஸக்தமாகவும், வித்தார்ஜந வ்யாபாரத்தில் ஸர்வ பாபக்ரியைகளிலும் ப்ரவ்ருத்தமாயும், கெட்டுப்போனதைக் கடாக்ஷித்துத் தன்னை ரதஸ்தனுகத் தர்சித்தமாத்ரத்தால் முமுக்ஷுத்வ ஸம்பாதநத்துக்கு யோக்யதையைத் தரவல்ல ஸுக்ருதம் எளிதில் ஜநங்கள் ஸம்பாதித்துக் கொள்ளக்கூடும் என்று திருவுள்ளம்பற்றி, த்வரைகொண்டு, அந்நகர்கண் வந்து சேர்ந்த யாவர்க்கும் ரதஸ்தனுன தனது தர்ஸநத்தைத் தருவதற்காக இவ்வண்ணம் எழுந்தருளுகின்றுனே? ‘ரதஸ்தம் கேஶவம் த்ருஷ்ட்வா புநர்ஜந்ம ந வித்யதே’, என்று வசமிருக்கின்றதன்றே?

“யஸ்யாங்க்ரி பங்கஜரஜஸ்ஸ்நபநம் மஹாந்த: வாஞ்ச்சந்த்யுமாபதிரிவாத்மதமோபஹத்யை । யர்ஹ்யம்புஜாக்ஷ ந லபேய பவத்ப்ரஸாதம் ஜஹ்யாமஸூந் வ்ரதக்ருஶாந் ஶதஜந்மபிஸ்ஸ்யாத் ॥”

என்று ஸ்ரீபாகவதத்தில் ஸமரித்தவண்ணம், “ஓ! தாமரைக்கண்ணு! யாதொரு உன்னுடைய திருவடித்தாமரைகளின் ரஜஸ்ஸுக்களால் ப்ரோக்ஷணத்தை உமாபதியைப்போன்ற மஹான்கள் தமது அஜ்ஞாநநிவ்ருத்தியின் பொருட்டுவேண்டுகின்றனரோ, அப்படிப்பட்ட உனது க்ருபையை நான் அடையாமற் போனுல், உபவாஸாதிகளால் க்ருஶமாய்ப்போன எனது ப்ராணன்களை த்யஜிக்கின்றேன். இப்படி அடிக்கடி நான் ப்ராணத்யாகம் செய்து பஹு ஜந்மாந்தரமாவது உன் ப்ரஸாதத்தை அடைவேன்” என்று ருக்மிணியின் ஸந்தேஶத்தைக் கேட்டமாத்திரத்தில்,

'ஸ்யஸ்ஸம்யுஜ்ய தாஸோஸ்ய ஊாஸகெதூாஹஸாரயிம்' என்று த்வரையுடன் ஸாரதியை அழைத்து ரதத்தை ஸித்தம் செய்யப் பகவான் ஆக்ஞாபித்தனன். அக்காலம் த்வரைக்குக் காரணம் விளங்குகின்றது. உத்ஸவகாலத்தில் யார்தான் பகவான் த்வரையுடன் ரதமேறும்படி அபேக்ஷித்தார்களோ?

யாரும் அபேக்ஷித்தாரில்லை. அநிருத்த த்ராணத்தில் நேர்ந்த த்வரை இப்போது பகவானுக்குண்டாயது என்று சொல்லவொண்ணுமோ? பகவானுடைய பௌத்ரனும், அம்சபூதனும், பகவானுடன் நித்யம் த்வாரவதியில் வஸித்துக்கொண்டிருக்கையில், அவன் ப்ரக்ருதியின் குணங்களாலும், ப்ராக்ருத விகாரங்களாலும் தளையப்படாதவன் என்றும், அகர்மவஸ்யன் எனவும் சொல்லவொண்ணும். அவனும் சித்ரலேகையினுடைய யோகபலமெனும் மாயாசக்தியில் சிக்கினவனாய்க்கொண்டு, சரீரமெனத்தகும் ஸோணிதபுரத்தில் உஷையெனும் பாணபுத்ரியின் அநுபவத்தால் அபஹரிக்கப்பட்ட ஸர்வேந்த்ரியோபேதனாய் தன் காலம் போவதையும் நினைத்தானில்லையென்று, 'நாஹமஹ்ணாநுஸஸ்ஸாயெ ஹூஷயாவஹூதெசஷிரயஃ', எனும் ஸ்ரீபாகவத வாக்யத்தால் ஸ்மரிக்கப்பட்டது. அவனிருப்பிடத்தை நாரதரால் தெரிந்துகொண்டு ஸ்ரீக்ருஷ்ணன் வ்ருஷ்ணிகுல வீரருடன் சென்று, பாணனை ஜெயித்து அவனை மீட்டனர். அவ்வண்ணமே கர்மவஸ்யராய் ப்ரக்ருதியின் சுழலில் சிக்கி விஷயாஸக்த சேதஸராய்ப் போந்த பாமரஜநங்களுடைய ரக்ஷணார்த்தம், பகவான் த்வரைக்கொண்டனன் எனத்தகாதோ? அவர்க்குப் பகவானிடம் பக்தியில்லாமலும், சிலகாலம் அவனிடம் அவர் த்வேஷம் பாராட்டியுமிருந்தாலும், 'க்ஷஂஜெஹஂஜெ', எனும் ஸ்லோக தாத்பர்யப்படி, ஸரண்யன் தன்னுடைய அம்சபூதரான ப்ரஜைகளை ரக்ஷிக்கும் நிமித்தம், தத்காலம் ஸந்நிதியைவிட்டு, விபுதவைரிகளை விரட்டியோடச்செய்யும் கண்டாநாதத்துடன், ரதாரோஹணத்துக்காக எழுந்தருளுகின்றான் எனத்தகும்.

இவ்விதமாய் ஸேவைஸாதித்த எம்பெருமானை ஜநகநந்திநி தர்சித்தனள். அவள் பிதா பெருமாளுடன் கைங்கர்யநிமித்தமாகச்சென்றனர். தன்னுடன் கைங்கர்யம் செய்துகொண்டு வந்த

பத்மநாபாசார்யரையும் தூரத்தினின்று கண்டனர். பகவான் ரதத்தின் மீது எழுந்தருளின பிறகு இருவரும் ஒருவரோடொருவர் ஸம்பாஷித்துக்கொண்டு க்ரஹங்களுக்குத் திரும்பினர்கள். முடிவாகப் பத்மநாபாசார்யரை மத்யாஹ்நத்தின்மேல் தனது இல்லம் வரும்படி ப்ரார்த்தித்துவிட்டுக் கேசவாசார்யர் அவரை விட்டுப் பிரிந்தனர்.

அன்று மத்யாஹ்நம், ஆனைக்கட்டிவீதியில், நாவல்பாக்கம் ராமாநுஜாசார்யர் இறங்கியிருந்த வீட்டின் வீதித் திண்ணையின் மேல், அந்த ஸ்வாமியும், கேசவாசார்யரும், பத்மநாபாசார்யரும் உட்கார்ந்திருந்தனர். இதர விஷயமான வார்த்தைகள் சிலகாலம் நடந்தபின், பத்மநாபாசார்யர் ராமாநுஜாசார்யரைப் பார்த்து, "ஸ்வாமிந் ! கேசவாசார்யர் தேவரீரிடம் ஒரு கார்யத்தை உத்தேசித்து எழுந்தருளியிருக்கின்றார்" என்றனர்.

"ஸாதிக்கவேணும். ஏன் இவ்வளவு யோசனை? என்ன திருவுள்ளம்?", என்று சொன்னர் ராமாநுஜாசார்யர்.

"கேசவாசார்யருக்கு ஒரு கந்நிகை இருக்கின்றாள். அவளுக்கு ப்ராசீந ஸுக்ருதத்தாலும், பிதாவின் அநுக்ரஹத்தாலும் ஸம்ஸ்க்ருத பாஷையில் வ்யுத்பத்தி நன்றாக உண்டாயிருக்கின்றது. ஸதா ஸத்துக்களுடைய ஸஹவாஸத்தால் ஸம்ப்ரதாய ஜ்ஞாநமும் யதோசிதம் அவளுக்கு உண்டு. இப்படிப்பட்ட ஸுதையைத் தக்க வரனைத் தேடித் தாநம்செய்ய அபேக்ஷிக்கின்றார். தேவரீர்கள் குமாரருடைய ஜ்ஞாநத்தையும் ஸௌஷ்டயத்தையும் பற்றி மிகவும் கேள்விப்பட்டு அவரை ஜாமாதாவாக அடைய விரும்புகின்றார்.", என்று பத்மநாபாசார்யர்.

'ஸ்வாமியினுடைய ஸம்பந்தம் ஸர்வதா ப்ரார்த்திக்கத்தக்கது. அது கிடைத்தால் அது அடியேனுடைய பாக்கியவிசேஷமன்றோ? குமாரன் யுக்தவயஸ் வந்தவனாதலால், அவனுடன் ப்ரஸ்தாபிக்காமல் ப்ரத்யுத்தரம் சொல்வது உசிதமன்று. அந்த விஷயம் தேவரீரும் ஒப்புக்கொள்ளத்தக்கதே. இன்றைக்கோ, நாளைக்கோ, அவனுடன் வார்த்தைசொல்லி, அடியேனே ஸ்வாமியின் திருமாளிகையில், ஸ்வாமியை வந்து தண்டன் ஸமர்ப்பித்துக்கொள்கின்றேன்' என்றுரைத்தார் ராமாநுஜாசார்யர். இன்னும் இதர விஷ

யங்களைப்பற்றிக் கிஞ்சித் ஸம்பாஷித்துவிட்டு அவர்கள் பிரிந்தார்கள். திரும்புங்கால் பத்மநாபாசார்யர் கேசவாசார்யரைப் பார்த்து "அந்தஸ்வாமியினுடைய அபிப்ராயம் எப்படியிருக்குமோ? ஒன்றும் பிடிகொடுத்து அவர் வார்த்தை சொல்லவில்லையே", என்று சொன்னார்.

"அந்த ஸ்வாமியின் பரிசயம் அடியேனுக்கு விசேஷமாகக் கிடையாது. அவருடைய உக்திகளால் அநுமிக்கக் கூடியதற்கு மேல், அடியேனுக்கு யாதொன்றும் தோன்றவில்லை", என்று சொன்னார்.

"ஆனால் எவ்வண்ணம் அந்த வார்த்தைகளைத் தேவரீர் க்ரஹித்தது?", என்றார் பத்மநாபாசார்யர்.

"அவருடைய குமாரர் தேசாந்தரம் சென்று ஶாஸ்த்ரஜ்ஞானம் ஸம்பாதித்துக்கொண்டு வந்திருக்கின்றார். யுக்தவயஸ்ஸுடன் விஷய விமர்சநம் செய்யத்தக்கவராக ஏற்படுகின்றது. அவருடைய அபிப்ராயங்களைத் தெரிந்து கொள்ளாமல் நமக்கு அந்த ஸ்வாமி யாது விடை தரக்கூடும்? ஆதலால் அந்த ஸ்வாமியின் வார்த்தைகளில் அடியேன் யாதொரு வித்யாஸத்தையும் கண்டிலேன்" என்று சொன்னார் கேசவாசார்யர்.

"கந்யாவித்ரூகவம் ஊர்வேங்யாய", எனும் வசநம் பூர்வமேயுள்ளது. தத்காலத்தில் பிள்ளைகளைப் பெற்றவர்கள் ஸம்பந்திகளிடம் த்ரவ்யத்தையும் அபேக்ஷிக்கின்றனர். அந்த ரூபமான யோசனை அந்த ஸ்வாமிக்குண்டாயிருக்குமோ வென்று ஸந்தேஹிக்கின்றேன்", என்றுரைத்தார் பத்மநாபாசார்யர்.

"அந்த ஸந்தேஹம் ஸர்வத்ர ஜநிக்கலாம். ஆனால் அர்த்த த்ருஷ்ணை பாஷாந்தரம் கற்ற பிள்ளைகள் விஷயத்தில்தான் உண்டாவதாகத் தெரிகின்றது. வைதிகர் குமாரர் வைதிகராகவும் உபபத்பற்றவராகவு மிருந்தால் அர்த்தத்ருஷ்ணை யுண்டாக வேண்டிய சங்கை உதிப்பானேன்?", என்றனர் கேசவாசார்யர்.

"ப்ராஹ்மணர்க்குள் ஆபிஜாத்யம் பரம்பரையாக ஜ்ஞாநம், வைராக்யம், ஸத்கர்மாநுஷ்டாநம் இவற்றால் விசேஷித்தவர்க்குத்தான் ஏற்பட்டது. அபிஜாதர், ப்ராயேண தநவந்தராயிருக்க அவகாசமில்லை. ஆத்மஸம்ஸ்காரத்தைப் பரோபகாரமாகச் செய்வதா

லும், ஸந்யாஸம் பூண்டதாக யெண்பித்து ப்ராஹ்மண்யம், ஸந்யாஸம் இவற்றைப் பழிக்கச் செய்துகொண்டு, ஆர்ஜித்த த்ரவ்யத்தைக் கூச்சமின்றிப் பூர்வாஸ்ரமிகளுக்கு உதவுவதாலும், சில வைதிகரெனப்படுவோர் குடும்பங்கள் தநவந்தர் குடும்பங்களெனத் தோற்றுகின்றன. அந்யர் லௌகிகவ்ருத்தியை மேற்கொண்டு பணக்காரர் ஆகின்றார்கள். அவர்களுடைய பிள்ளைகளை அபேக்ஷிப்பவர் தகுந்தபடி அப்பிள்ளைகளுக்கு மரியாதையாக அர்த்தத்ரவ்யம் செய்யவேண்டியிருக்கின்றது. வைதிக வ்ருத்தியைத் தவறாத பிள்ளைகட்குப் பெண்களைக் கொடுக்க இசையாமல், பணக்காரப்பிள்ளைகள் வேண்டுமென்று கொண்டு, பணம் கேட்கின்றாரென்று வருத்தப்படுவது மூடத்தனம். அந்தக் குற்றம் தேவரீரிடம் இல்லை. நாவல்பாக்கம் ஸ்வாமி அர்த்தத்ருஷ்ணை கொள்ள ந்யாயமில்லை. அந்த ஸ்வாமி வார்த்தைகளால் தாத்ருஸ அபிப்ராயம் அவர் சித்தத்தில் குடிகொண்டதோ வென்று ஸந்தேஹித்தேன். இரண்டு நாட்குள் எல்லாம் விஸதமாய் ஏற்பட்டுவிடும்", என்று சொன்னார் பத்மநாபாசார்யர்.

இதற்குள் கேசவாசார்யர் க்ரஹம் ஸமீபித்துவிட்டது. பத்மநாபாசார்யரிடம் விடைபெற்றுக்கொண்டு கேசவாசார்யர் இல்லம் சென்றனர். வழக்கப்ரகாரம் ஸாயங்கால வேளையில் நகரத்தவர்களும், உத்ஸவார்த்தம் வந்தவர்களும், பெரிய காஞ்சீபுரம் ராஜவீதியில பகவான் ரதத்தின்மீது எழுந்தருளுவதைத் தர்ஸிக்க வந்துகூடினர். அங்கு கேசவாசார்யரும், பத்மநாபாசார்யரும், மாதவாசார்யரும், வேதபாராயண கோஷ்டியில் இருந்தனர். அந்த ஸமயத்தில் நாவல்பாக்கம் ராமாநுஜாசார்யரும் அவர் குமாரரும் அந்தப் பக்கமாக வரவே, பத்மநாபாசார்யர் அந்தப் பிள்ளையைக் கேசவாசார்யருக்குக் காட்டினார். பிள்ளை இருபத்திரண்டு பிராயங் கடந்தவனானபோதிலும் ப்ரஹ்மதேஜஸ் ப்ரகாசிக்க விளங்கினான். கேசவாசார்யர் அவனைப் பார்த்து அவன் தன் புத்திரிக்குத் தக்க புருஷன் என்று த்ருப்தராயினர். கைங்கர்யத்தை விட்டுப் பிள்ளையைப் பார்த்துக்கொண்டுபோக அவர் எண்ணினாரில்லை. ஆனால் பத்மநாபாசார்யர் தனது ப்ரஸ்தாபத்தின்பேரில் உண்டான ப்ரயத்நம் ஸபலமாகவேண்டுமெனும் இச்சையால் கோஷ்டியைவிட்டு ராமாநுஜாசார்யர் இருந்தவிடம் சென்றனர்.

பத்மநாபாசார்யரைப் பார்த்து ராமாநுஜாசார்யர், "எழுந்தருளவும். இதோ தாஸன் இருக்கின்றான். க்ரஹஸ்தாஸ்ரமத்தில் ப்ரவேஸிக்க அதிக விருப்பத்தை அவன் காட்டவில்லை" என்று சொன்னார்.

"ஏன் அப்படி யோசிக்கவேண்டும்? இந்தக் காலத்தில் இவ்வளவு வயஸு பர்யந்தம் ப்ரஹ்மசர்ய வ்ருதத்தைக் காப்பாற்றுபவர் இல்லையே" என்று சொன்னார் பத்மநாபாசார்யர்.

"அடியேன் ஸாமாந்ய ஸாஸ்த்ரஜ்ஞாநம் ஸம்பாதித்தேன். இன்னும் மீமாம்ஸையை முடித்துவிட்டு ஸ்ரீபாஷ்யம் காலக்ஷேபம் செய்யவேண்டும். விவாஹம் அடியேனுடைய இஷ்டப்ராப்திககு விக்நம் செய்யாதா?" என்று சொன்னான் வீரராகவன்.

"தத்காலவிவாஹம் எப்படி விக்நம் செய்யும்? பெண் உம்மிடம் உடனே வரப்போகின்றாளா? விவாஹாநந்தரம் மூன்று நான்கு ஸம்வத்ஸரம் வரையில் வித்யாவ்ருத்தியை நீர் செய்துகொண்டிருக்கலாமே. நீர் இவ்வளவு ஜ்ஞாதாவாய் இருக்க, ஜ்ஞாதாவெனத் தகும் அபூர்வமான கந்நிகை உமக்குக் கிடைக்கும்போது நீர் விரோதம் செய்யலாமோ? உம்மிடம் அவள் வருங்காலத்தில் யாஜ்யவல்க்யரிடம் மைத்ரேயி வந்தவண்ணம் வருவளே" என்று சொன்னார் பத்மநாபாசார்யர்.

"என்ன ஸ்வாமிந்! வித்யாகர்வம் கொண்ட பெண்ணை மணந்தால் விபரீதத்தில் பர்யவஸிக்கும்" என்றனன் வீரராகவன்.

"கேசவாசார்யர் பெண்விஷயமாய் இப்படி யாரும் சங்கிக்கமாட்டார். ஸ்வலாபஸந்துஷ்டரும், ஸாந்தரும், பரமஸாதுவுமான அந்த ஸ்வாமியுடன் ஸஹவாஸம் ஸர்வ தௌராத்ம்யத்தையும் நிவர்த்திக்குமே அவருடைய குழந்தையைப்பற்றி இப்படி எண்ணலாமோ?" என்றார் பத்மநாபாசார்யர்.

"பத்மநாபாசார்யா! க்ஷமித்தருள. அடியேன் தாஸனுடன் வார்த்தைசொல்லி அவனை இணங்கச்செய்கின்றேன். ஏடுகளைப் பார்த்தமாத்ரத்தினால் லோகாநுபவம் உண்டாய்விடுமோ? அடியேனுக்கு இந்த ஸம்பந்தத்தில் மிகவும் திருப்தியுண்டாயிருக்கின்றது. பெருமாள் திருமபி ஸந்நிதிக்கு எழுந்தருளினபிறகு அடியேன்

அந்த ஸ்வாமியை வந்து தண்டன் ஸமர்ப்பித்துக்கொள்கின்றேன். தேவரீரை முன்கொண்டே அப்படிச் செய்கின்றேன்'', என்று சொன்னார் ராமாநுஜாசார்யர்.

பகவான் ரதத்தின்மேல் மூன்று நாள் எழுந்தருளியிருந்தார். மூன்றுநாள் ராத்ரி ஸந்நிதிக்குத் திரும்பினார்.

## ஆறாவது அதிகாரம்.

பெருமாள் ஸந்நிதிக்கு எழுந்தருளின பிறகு, உத்ஸவம் ஆரம்பித்துப் பத்தாவது திநத்தில் எட்டாவது திருநாள் ஸம்பந்தமான உத்ஸவம் நடந்தது. அன்று மத்யாஹ்நம் நாவல்பாக்கம் ஸ்வாமி பத்மநாபாசார்யருடன் கேசவாசார்யர் க்ரஹத்தை நோக்கி நடந்தார். ''பத்மநாபாசார்ய! பிள்ளையாண்டான் கல்யாணத்தில் மிகுந்த குதூஹலத்தைக் காட்டுகின்றானில்லை. ஆனாலும் அவனுக்கு வயஸ் இருபத்திரண்டு ஆய்விட்டது. அவனுடைய விவாஹம் இனி விளம்பிக்கத் தகாது. ஆதலால் அடியேன் வார்த்தையை அவன் கேட்க இசைந்திருக்கின்றான். அபிஜாதரும், ஜ்ஞாதாவும், பரமைகாந்தியுமா யிருக்கப்பட்ட கேசவாசார்யர் ஸம்பந்தம் விசேஷமாகக் கொண்டாடத்தக்கது. பெண்ணினுடைய யோக்யதையைப்பற்றியும், சீலத்தைப் பற்றியும் தேவரீரும் த்ருப்தியாய்ச் சொல்லுகின்றபடியால், ஸக்ருத் அவலோகந மாத்ரத்தால் அடியேனும் அதைத் தெரிந்துக்கொள்ளுகிறேன். என்ன ஸாதிக்கின்றது?'' என்று ராமாநுஜாசார்யர் சொன்னார்.

''இப்படித் தேவரீர்க்கு ஸ்நுஷை கிடைப்பது அஷ்டம். பெண்ணைப்பார்த்தவுடன் தேவரீர் ஸந்துஷ்டராகுமென்பதில் அடியேனுக்கு ஸம்சயம் இல்லை. ஆனால் தேவரீர் குமாரர் ஸ்வ விவாஹ விஷயத்தில் உதாஸீநரா யிருக்கின்றாரென்பது ஈஷத் சகித ஹேதுவாகின்றது'' என்றார் பத்மநாபாசார்யர்.

''தேவரீர் சகிதப்படுவானேன்? வாசித்துப் புத்திமானாயிருக்கின்ற பிள்ளை கல்யாணமென்றால் வெளிப்படையாக ஸந்தோஷப் படுவனோ? அப்படிச் செய்வதில் அவனுக்கு லஜ்ஜை யுண்டாகாதோ? அவன் மநஸில் கொண்ட எண்ணத்தை ஆவிஷ்கரிப்பனோ? அவன் நடத்தை லோகத்தோடு ஒத்து இருக்கின்றது. அப்படித்தான் புத்திமான்கள் இருப்பார்கள். பிதாவினிடம் மர்யாதை யுள்ள புத்ரர்கள் ஸ்வவிவாஹ விஷயத்தில் பிதாவின்

அபிப்ராயத்தையே அநுஸரித்து நடப்பர். 'ப்ரியாது ஸீதா ராமஸ்யதாராஃ பித்ருக்ருதா இதி' என்று சக்ரவர்த்தித் திருமகனுடைய சரித்ரத்தில் ஏற்படவில்லையா ?" என்றார் ராமாநுஜாசார்யர்.

"தேவரீர் குமாரர் சக்ரவர்த்தித் திருமகனை அநுஸரித்து நடந்தால் போதுமானது. இன்னும் தேவரீர் ஸாதித்த ஸ்லோகத்தின் உத்தரார்த்தத்தை யோசிக்கவும். 'குணாத் ரூபகுணாச்சாபி ப்ரீதிர்பூயோ (அ)பிவர்த்ததே', என்று, ஸீதையின் ஸௌந்தர்யத்தாலும் கல்யாணகுணங்களாலும் ராமனுக்கு அவளிடம் ப்ரீதி மேன்மேலும் வ்ருத்தியடைந்ததென்று தெரிகின்றதே. கேசவாசார்யர் கந்நிகையினிடம் தேவரீர் குமாரர்க்கு ப்ரீதி வளரும்படி ரூபமும் குணமும் ஏற்பட்டேயிருக்கின்றது" என்றார் பத்மநாபாசார்யர்.

இப்படி ஸம்பாஷித்துக் கொண்டே போய்க் கேசவாசார்யர் இல்லம் வந்து சேர்ந்தார்கள். அங்கே நடைத்திண்ணைமேல் உட்கார்ந்திருந்த கேசவாசார்யர் இவர்களைப் பார்த்தவுடன் எழுந்திருந்து 'எழுந்தருளவேண்டும்' என்று சொன்னார். மூவரும் திண்ணையில் உட்கார்ந்தனர். "அன்று ஸாதித்தவண்ணம் ஸ்வாமி எழுந்தருளிவிட்டார்," என்று பத்மநாபாசார்யர் சொல்லிவிட்டு உள்ளே சென்று ஒரு தட்டு வாங்கிக்கொண்டு வந்தார். அதில், ராமாநுஜாசார்யர் கொண்டுவந்த வெற்றிலை, பாக்கு, மஞ்சள், புஷ்பம், பழம், வஸ்த்ரம் இவற்றையெல்லாம் வைத்தனர்.

"பகவான் ஜலக்ரீடைக்கு ஸந்நாஹமாய் எழுந்தருளியிருக்கின்றான். தேவிகளுடன் அவன் மஞ்சனமாடிக் களித்ததும், விசேஷித்து அவர் திருவடிகள் ஸம்பந்தத்தால் பாவநதமமாகப் பண்ணப்பட்டதுமான தீர்த்தத்தை அபேக்ஷித்து ஸந்நிதிக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் கூட்டம் கூட்டமாகச் செல்கின்றார்கள். தேவரீர் குழந்தை சற்று இங்கே வருவளோ? அவள் கையில் ஒரு தாம்பூலம் கொடுத்துவிட்டு ஸந்நிதிக்குப் போவோம்" என்று சொன்னார் ராமாநுஜாசார்யர்.

"பாக்யம்" என்று சொல்லிவிட்டுக் கேசவாசார்யர் எழுந்து உள்ளே நடந்தார். ராமாநுஜாசார்யார் வரப்போகின்றார் என்று கேசவாசார்யர் எதிர்பார்த்த போதிலும், அவர் வந்த ப்ரகாரத்தையும், ஸமயத்தையும் அவர் எதிர்பார்த்தாரில்லை. ஆதலால் அன்றையதினம் வெள்ளிக்கிழமை யென்று ஜநகநந்திநி ஸ்நாநம் செய்தவண்ணம் க்ரஹவ்யாபாரங்களில் வ்யாஸக்த மனத்தினளாய் இருந்தாள். பிதாவால் அழைக்கப்பட்டபோது, தன் தேஹத்தை விசேஷமாக அலங்கரிக்க அவகாஸமற்று நின்றாள்.

‘𑌶𑍍𑌰𑌮𑌾𑌮𑍍𑌬𑍁 𑌶𑌿𑌶𑌿𑌰𑍀 𑌭𑌵𑌤𑍍 𑌪𑍍𑌰 𑌸𑍃𑌤𑌮𑌨𑍍𑌦𑌮𑌨𑍍𑌦𑌾𑌕𑌿𑌨𑍀
𑌮𑌰𑍁𑌤𑍍 𑌤𑌰𑌲𑌿𑌤𑌾𑌲𑌕𑌾 𑌕𑍁𑌲𑌲𑌲𑌾𑌟 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌦𑍍𑌯𑍁𑌤𑌿 ।
𑌅𑌕𑍁𑌙𑍍𑌕𑍁𑌮𑌕𑌲𑌙𑍍𑌕𑌿𑌤𑍋 𑌜𑍍𑌜𑍍𑌵𑌲𑌕𑌪𑍋𑌲 𑌮𑍁𑌤𑍍𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇
• 𑌨𑌿𑌰𑌾𑌭𑌰𑌣 𑌸𑍁𑌨𑍍𑌦𑌰𑌶𑍍𑌰𑌵𑌣𑌪𑌾𑌶 𑌸𑍁𑌭𑍍𑌰𑍂𑌰𑍍𑌮𑍁𑌖𑌮𑍍’ ।

"ஶ்ரமப்பட்டதால் உத்பந்நமான வேர்வை ஜலத்தால் குளிர்ச்சியை அடைவிக்கப்பட்டதும், மந்தாகிநியின்று உண்டாகி மந்தமா யடிக்கின்ற காற்றினால் நாற்புறமும் சலிக்கின்ற முன்னெற்றி மயிர்களால் ஈஷத் மறைக்கப்பட்டதுமான நெற்றிக்கட்டாகின்ற சந்த்ரனுடைய காந்தியுடன் கூடினதும், குங்குமப்பூவின் பூசுதலால் உண்டாகும் களங்கமற்று ப்ரகாசிப்பதுமான கபோலத்துடன் கூடியதும், ஆபரணமற்றிருந்தும் ஸுந்தரமான செவிகளுடன் கூடிக் கண்களுக்கு ரம்யமானதுமான முகமானது காணப்பட்டது" என்று ரகுவீரன் ஸீதையை ஸ்மரித்துச் சொன்னதாக மஹாகவி வாக்ய மிருக்கின்றபடித் தன்புத்ரி தோன்றின, ‘𑌕𑌿𑌮𑌿𑌵𑌹𑌿 𑌮𑌧𑍁𑌰𑌾𑌣𑌾𑌂 𑌮𑌣𑍍𑌡𑌨𑌂 𑌨𑌾𑌕𑍃𑌤𑍀𑌨𑌾𑌂’ "மதுரமான ஆகாரங்களுக்கு எதுதான் அலங்காரமாகாது?" என்றும், ‘𑌆𑌭𑌰𑌣𑌸𑍍𑌯𑌾𑌭𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌸𑌾𑌧𑌨𑌵𑌿𑌧𑍇𑌃 𑌪𑍍𑌰𑌸𑌾𑌧𑌨𑌵𑌿𑌶𑍇𑌷𑌃’, "ஆபரணத்துக்கும் அவள் ஆபரணமாயிருக்கின்றாள் அலங்கார வ்யாபாரத்துக்கும் அவள் அலங்காரமாயிருக்கின்றாள்" என்றும், காளிதாஸன் வர்ணித்தபடியே, மற்றோரணி வேண்டாமல் மதுரமான தோற்றமுடைய தன் குமாரியை, அலங்கார விதாநாபேக்ஷயின்றித் தன்னகத்து நடைக்குக் கேசவாசார்யர் அழைத்துக்கொண்டு போனார். "ஸ்வாமிக்குத் தண்டன் ஸமர்ப்பி" என்று அவர் சொல்

வதற்குள், ராமாநுஜாசார்யரையும் பத்மநாபசார்யரையும் தனித்த னியே ஜநகநந்தினி ஸேவித்தனள்.

இப்படி வணங்கிநின்ற கன்னிகையை ராமாநுஜாசார்யர் பார்த்தார். வானமும் சசியும் வளம் நீங்கவே, வாய்ந்த கூந்தலில் வைத்த முகத்தினலும், கானவர்படை கண்டதோர் மானெனக் காட்சி தந்திடும் கண்ணினலுமான அப்பெண்மணியை நோக்கவும், விஸ்மயமும் ஸந்தோஷமும் ஒன்றுகூடி மனம் நிறைந்து வெளிப்பட்ட வதனத்துடன் கூடினவராய், மந்தஸ்மிதராய்ச் சிறிதுகாலம் பார்த்துவிட்டு, "பேரருளாளன் உனக்கு ஸர்வமங்களமும் உண்டாக்கட்டும்", என்று சொல்லி, மேலேகுறித்த பல புஷ்பாதிகளடங்கிய தாம்பூலத் தட்டை அவளிடம் கொடுத்தனர். ஜநகநந்தினியும் அதைக் கைநீட்டி வாங்கிக்கொண்டு உள்ளே சென்று ஹரிப்ரியையினிடம் கொடுத்தாள்.

"கேசவாசார்ய! அடியேனுக்கு மிகவும் த்ருப்தியாயிருக்கின்றது. இது எதிர்ப்பார்த்த விஷயமே. அடியேனுடைய மநஸ் மிகவும் ஸந்துஷ்டமா யிருக்கின்றது. தேவரீர் குமாரத்தியின் நக்ஷத்ரமென்ன?" என்று சொன்னர்.

அதற்குக் கேசவாசார்யர், "அவள் நக்ஷத்ரம் உத்ர பல்குநீ" என்றனர்.

பிள்ளையாண்டான் நக்ஷத்திரம் ஶ்ரவணம். நல்ல பொருத்தமாய் அமைந்திருக்கின்றது. வேறென்றும் விசாரிக்க வேண்டியதில்லை. தேவரீர் முகூர்த்தத்தை நிச்சயித்து முகூர்த்த பத்ரிகை அனுப்பிவிடலாம்", என்று சொல்லிவிட்டு ராமாநுஜாசார்யர் எழுந்தார். மற்றவர்களும் எழுந்துவிட்டார்கள். "ஸந்நிதிக்கு எழுந்தருளவில்லையா?" என்று கேசவாசார்யரைப் பத்மநாபாசார்யர் கேட்டனர்.

"முன்னே ஸ்வாமிகள் எழுந்தருளினல், இதோ பின்னே வந்துகொண்டே இருக்கிறேன்" என்று சொல்லிவிட்டுக் கேசவாசார்யர் உள்ளே சென்றனர். மற்றவர்கள் ஆலயத்துக்குச் சென்றார்கள்.

"ஜநகம்! அந்த ஸ்வாமியின் குமாரருக்கு உன்னைத் தாநம் செய்ய நிச்சயித்திருக்கின்றேன். உனக்கு ஏதாவது சொல்லவேண்டுமோ? இருந்தால் சொல்" என்றனர் கேசவாசார்யர்.

"அப்பா! தேவரீர் திருவுள்ளப்படி நடப்பதுதான் அடியேன் ஸ்வரூபம். அதுதான் அடியேனுக்கு ஸந்தோஷம் தரக்கூடியது. தேவரீர் செய்வதில் அடியேன் யுக்தாயுக்த விசாரம் செய்யத்தகுமா? தேவரீர் அடியேனுக்காக வரித்த புருஷனைப் பர்த்தாவாகப் பகுமானித்து, த்ருப்தியோடு ஶுஶ்ரூஷை செய்வேன். தேவரீர் அந்த விஷயத்தில் கிஞ்சித்தேனும் ஸம்ஶயப் படவேண்டாம்" என்று சொன்னாள் ஜநகநந்திநீ.

பிறகு கேசவாசார்யர் கோவிலுக்குச் சென்றார். அன்று மத்யாஹ்நம் வரதன் திருப்பாய்ந்தாடித் திருமஞ்சநம் கண்டருளுகின்றான் என்பார். அது ஸேவார்த்திகள் முன் நடப்பதன்று. அவர் அது பகவான் நடத்தியதாகப் பாவிக்கமாத்ரம் அதிகாரிகள். பாய்ந்தாடும் மஞ்சனம் ஜலக்ரீடை. இதையமுனைத்துறைவன் யமுனையாற்றிலே கோபஸ்திரீகள் களிக்க அவர்களுடன் சேர்ந்து நடத்தினனென்று ஸ்ரீபாகவதம் சொல்லும். வஶீக்ருத ஸ்வ மாயையை அதிஷ்டிதனாய்க் கொண்டு, அம்மாயையால் ஸர்வபூதங்களையும் ப்ரமிக்கச்செய்யும் பரமேஸ்வரன், ராஸக்ரீடை, ஜலக்ரீடை முதலான திருவிளையாட்டுகளை நிஜமாகச் செய்தருளினனோ, அவ்வண்ணம் கோபஸ்த்ரீகளுக்குக் காட்டியருளினனோ, இரண்டுமின்றி அக்கதை, தன்னை ஆஸ்ரயித்துப் பரவப் பார்த்துக் களிக்கின்றானோ, யாமறியோம். அவாப்த ஸமஸ்த காமனுக்கு ராஸக்ரீடாதிகளால் என்ன அபூர்வமான ஆநந்தம் உதிக்கப்போகின்றது? "𑌅𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌾𑌯 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌦𑍇𑌹𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 । 𑌭𑌜𑌤𑍇 𑌤𑌾𑌦𑍃𑌶𑍀𑌃 𑌕𑍍𑌰𑍀𑌡𑌾 𑌯𑌾 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍍𑌪𑌰𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍" என்கிறபடி, லோகாநுக்ரஹார்த்தமாக, மர்த்யர்க்குள் அவதாரம் செய்த ஶரண்யன், மேலேசொன்ன க்ரீடைகளில் அந்வயித்தவனெனத் தன்னைக் காட்டினான்; ஏனென்றால், அந்தக் கதைகளைக் கேட்டாவது, மர்த்யர் தன்னடியை ஆஸ்ரயிக்கவேண்டும் என்று திருவுள்ளம் பற்றினான் ஸர்வேஸ்வரன். வ்ரஜக்ரஹங்களில் வஸித்த புருஷரனைவரும், ஸ்வக்ரஹங்களில் ஸ்வஸ்த்ரீகளெல்லாரும், அவ்வவர்க்குரிய வ்யாபாரங்களில் ப்ரவ்ருத்தராய் நிற்கக் கண்டுகொண்டிருக்கையில், அந்த ஸ்திரீகளே தனது ஸாமீப்யத்தை அடைந்தவர்களாய் நினைத்துக் கொள்ளும்படி விளையா

டும் லோகநாதன் செயலே யார்தான் இப்படியென்று அறியக்கூடும்? இந்த விளையாட்டில் அங்வயிக்கத் தன்னிருபுறமும் நின்ற தேவி மார்களுக்கு இடமற்றுப்போக, அவர்க்கும் அரியதோர் க்ரீடார ஸத்தை ஸர்வஸங்க பரித்யாக பூர்வமாகத் தன்னையடைந்த வ்ரஜா ங்கனைகட்குத் தந்தருளிய பெருமானைத் தமக்கும் அதைத்தர, அவர் வேண்டத் தந்தருளுகின்றானோ அறியோம். அவனுடைய ஸர்வேஸ்வரத்வம் நிஸ்ஸம்ஸயமாக விளங்க, "ஹ்ரீஸ்ச தேலக்ஷ்மீஸ்ச பத்ந்யௌ" என்று ஸ்ருதி சொல்லிற்று. ஸந்தர்ப்பமறியாத குத்ருஷ்டிகள் ஹ்ரீசப்தத்தை லஜ்ஜாபிமாநி தேவதை யென்று பொருள் படுத்துவர். லஜ்ஜைக்கும் அபிமாநிதேவதையொன்றை அவர்வேண்டுவார் போலும். தே எனும் சப்தம், தவ என்று ஸ்ப ஷ்டமாய் விளங்க, அதற்கு அபார்த்தம் சொல்லுவர். ஆதலால் பத்நீசப்தத்திற்கும் அபார்த்தம் பண்ணுவர். "எனது அபரை யான ஜடப்ரக்ருதியை அறி. ஜீவரூபையான எனது ப்ராப்ரக்ரு தியையும் அறி" என்று கீதையில் கண்ணனால் உரைக்கப்பட்ட டும், "ஸர்வபூதங்களிடமும் உள்ள த்ரிகுணாஸ்ரயையான உனது அபரையான ஶக்திக்கும், இந்த்ரியங்களுக்கும், வாக்குக்கும், மந ஸுக்கும் எட்டாதவளும், ஜ்ஞாதாக்களா லறியத்தக்கவளுமான ஜீவாபிமாநியான பரமேஸ்வரியையும் நமஸ்கரிக்கின்றேன்," என்று புராணரத்நத்தில் ப்ரஹ்லாத ஸ்துதியில் வர்ணிக்கப்பட்டு மிரு க்கும், சித், அசித், இரண்டுக்கும் அபிமாநி தேவதைகளான ஸ்ரீ தேவியையும் பூதேவியையும் என்றும் தன்னிருபுறமும்கொண்டு, தன் பாரமைஸ்வர்யத்தை ப்ரகடநம் செய்யும் பேரருளாளன், அந்தத் தேவிகளுடன் அன்று ஜலத்தில் பாய்ந்தாடினன் போ லும். அப்படித் தன்னுடையவும் தன் தேவிமார்களுடையவும் திருமேனி ஸம்பந்த மடைந்த திவ்யதீர்த்தத்தை ஸேவார்த்திக ளுக்கு அநுக்ரஹித்துத் தந்தனன்.

அவ்வநுக்ரஹமும் விபலமாகும்படி ஸ்ரீ வைஷ்ணவரென்று பெயர்வஹித்த பலர், கோஷ்டியாக நின்றுப் பகவத்கிங்கரர் ஒவ் வொருவரிடமும் சென்று தீர்த்தம் ஸாதக்குமட்டும் பொறுமை யற்றவராய், ஒருவர்மேல் ஒருவர் விழுந்து தீர்த்தம் ஸாதிப்பவ ரைக் கஷ்டப்படுத்தித் தீர்த்தம் தமக்குமின்றி, அயலார்க்கும்

இல்லாமல் போகும்படி செய்கின்றார்கள். ஸத்வ ப்ரதாநராகப் பிறந்தவர், ப்ராஹ்மணரெனும் க்யாதியை நியமேந ஏடுத்தாரா கில், அவர் ஜந்மத்தைப் பற்றிச் சங்கிக்கவும் நேரிடும்.

ஸந்நிதியினின்று ஸ்ரீவைஷ்ணவர் திரும்புங்கால், மாதவாசார்யர் கேசவாசார்யரைப் பார்த்து, "கேசவாசார்ய! குழந்தைக்கு விவாஹம் நிச்சயமானதாகக் கேள்விப்பட்டேன். 'ஸுஷீநாம ஸ்ரீதாமஹெஹெ' தேவரீர் கந்நிகை வாழ்க்கைப்படப் போகின்றாளென்று விசேஷேண ஸந்தோஷமா யிருக்கின்றது" என்று சொன்னார்.

"எல்லாம், ஶரண்யன் க்ருபையை அநுஸரித்த அவனுடைய ஸங்கல்பாதீநமாக நடக்கின்றது," என்றனர் கேசவாசார்யர். இதற்குள் இவர்கள் நின்றவிடம் தேடி, ராமாநுஜாசார்யரும், பத்மநாபாசார்யரும் வந்து சேர்ந்தார்கள். "ஸ்வாமிந்! பெருமாள் அத்புதமாய் ஸேவை ஸாதிக்கின்றனர். கோபாலன் திருவிளையாட்டைப் பாகவதர்க்குக் காட்டும்போது, கோபாலனாக ஸேவை ஸாதிக்கின்றான். ஆனால் ஸேவார்த்திகள் யாவரும் த்ருப்தியாகத் தர்ஶிக்க அவகாசம் கொடுக்கவில்லை. அதற்குத் தக்க ஸௌகர்யத்தை ஸந்நிதி விசாரணைகர்த்தர்கள் பண்ணிக்கொடுக்க வேண்டும்," என்று சொன்னார் ராமாநுஜாசார்யர்.

இதற்குக் கேசவாசார்யர் ப்ரத்யுத்தரம் அளித்திலர். மாதவாசார்யர், "ஸந்நிதி தர்மரக்ஷகர்கள் என்ன செய்யலாம்? இந்த மூட ஜநங்களைக் கடாக்ஷிக்கவும். யாவருக்கும் கிடைக்க வேண்டியதும் கிடைக்கக்கூடியதுமான பகவத் ப்ரஸாதத்தை யாருக்கும் கிடைக்க வொட்டாமல் செய்கின்றனவே. இவர்களை அடிப்பதா, திட்டுவதா, என்ன செய்யலாம்? விசாலமான இந்த மண்டபத்தின்கண் எல்லாரும் வரிசையாக நின்றிருந்து, அவ்வவர் ஸ்தாநத்தினின்று பெருமாளை ஸேவிக்கவும், பெருமாள் தீர்த்தத்தை வாங்கிக் கொள்ளவும் கூடாதா? இவருடைய அஜ்ஞாநம் விசாரணைகர்த்தர்கள் அதிகாரத்துக்கும் அதிக்ரமித்த விஷயம்" என்று சொன்னார்.

அதன்பிறகு எல்லாரும் அவ்வவர் இல்லங்கட்குச் சென்றனர். அன்று அஸ்தமனத்திற்குப் பெருமாள் குதிரைவாகனத்தின்

6

மேல் ஸேவை ஸாதித்தனர். இந்த ஸேவை தேசிகனால் சொண்டாடப்பட்டது. வழியில் கலியனுக்குப் பகவதநுக்ரஹம் ப்ராப்தமானபடியை நம்மவர்க்குள் வழங்கும் கதையின் ப்ரகாரம் நடத்திக் காட்டுகின்றனர். திருமங்கைமன்னன் பாசுரங்களைப் படித்தபின், படித்தவர் சித்தங்களில் அந்த மஹானுடைய நற்குணங்கள் ஒருவாறு ப்ரதிபலிக்கின்றன. அவற்றைச் சிந்தித்துக் கதையையும் பராமர்சித்தால், அக்கதை அவர்க்குப் பொருந்துமாவென்று புத்திமான்கள் யோசிக்கத்தக்கதே. கதைகளுக்குக் காலில்லையென்பர். இராமாநுசன் அவதாரகாலத்தில் ஹிமாசலம் முதல் ஸேது பர்யந்தம், துலுக்கருடைய ஆளுகை முதலே இல்லையென்பது சரித்ரத்தால் ஸ்பஷ்டம். யதீந்த்ரன் நித்யவிபூதியை அலங்கரித்து 50, 60 ஸம்வத்ஸரம் ஆனபிறகன்றோ டில்லிநகராண்ட ப்ருத்விராஜனும், கந்யகுப்ஜாதிபனான ஜயசந்த்ரனும், மஹமத்கோரி யெனும் துலுக்க மன்னனால் கொல்லப்பட்டு, அவர் ராஜ்யங்கள் துலுக்கர் வசமாயின? ஆதலால், பாஷ்யகாரர் காலத்தில் துலுக்கர் நம்தேசம் வந்திலர். ஸம்பத்குமாரனை அவர் கொண்டு போயிலர். பெருமாளை மீட்டுக்கொண்டுவர, பாஷ்யகாரர் டில்லிக்குச் செல்ல ஸந்தர்ப்பம் நேரிட்டிலது. அவ்விடம் நின்று அவர் திரும்பினதாவது, திரும்புகால் அவர்க்கு யாதொரு பயஹேது உண்டானதாவது யோசனைக்குக் கிட்டவில்லை. வெள்ளை சாற்றுபடிக்கும் வ்யாஜம் உண்டானதில்லை, பஞ்சமர் சேரிக்குப் போகவும் அவஸரமில்லை. துலுக்கநாச்சியா ரொருத்தி யாதவாத்ரிக்கு அக்காலம் வரவும் வழி யேற்படவில்லை. பஞ்சமரைக் கோவிலுக்குள் விடக் காரணமும் உதிக்கவில்லை. காரணமின்றி மேலேவிவரித்தபடிக் கதையொன்று ஏற்படவில்லையா? அப்படியே திருமங்கைமன்னன் க்யாதிக்கு விரோதமாகக் கதையொன்று கட்டிவிட்டாரெனத் தகாதா? தன்னுடைய நைச்யாநுஸந்தாந விவரணமாகத் திருமங்கைமன்னன் பாசுரங்கள் பாடினராயின் அவரைத் தீவட்டிகொள்ளைக்காரனாக்கி விடவேண்டுமா? பண்டைநாள்களில் மதபேதம் த்வேஷகாரண மாயிற்றென்பது ஸித்தம். அத்யாபி அந்த மூடத்தனம் புத்திமந்தர் என்போர் பலரை விட்டதன்று. பராயேண மதப்ரவர்த்தகர் எனப்பட்ட பலரும் இந்த ரூபமான குற்றத்தை விலக்கினவர்களல்லர். ஆதலால்

மங்கையர்கோன், சமணர் சாக்கியர் முதலானோர் பொருள்களைப் பகவத் கைங்கர்யநிமித்தம் பலாத்காரமாகக் கொண்டாரெனும் கதையை ஒருவிதமாக ஒப்புக்கொண்டாலும், ஸ்வஜநங்கள் விஷயத்திலும் அப்படி நடந்தாரென்பதை யாம் எங்ஙனம் விச்வசிக்கக்கூடும்?

காளமேகனெனும் கவி, தேவாதிதேவன் திருக்கச்சியூருடையான் மாவேறி வீதிவரக் கண்டு, ஓர் பெண்மணிக்கு அரையிலுடுத்த வாடையானது பட்டுக், காலில் பாய்ந்ததென்று ஒரு வெண்பா பாடினன். இந்தயோசனை பெருமாளுடைய ஸௌந்தர்யாதிசயத்தைக் காட்டுகின்றது. இந்தத் தோற்றத்துடன் பரிமேலழகன் முரங்கன் வீதி போடிக் கச்சி வீதி யலங்கரித்து, ஒருமாவின் கீழ்க்குத் தர்சநம் தந்து, பிறகு மண்டபமேற வெழுந்தருளி, மீண்டும் அங்குநின்று புறப்பட்டுத் தன் திருக்கோவில் எழுந்தருளினன்.

## ஏழாம் அதிகாரம்.

ஜநகநந்தினிக்குக் கல்யாணம் முடிந்து நாலு ஸம்வத்ஸரம் ஆயிற்று. விவாஹாநந்தரம் அவளுடைய பிதா, ராமாநுஜாசார்யரைக்கொண்டு அவளுக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்கள் செய்வித்து வைத்தனர். ஸம்ப்ரதாய க்ரந்தங்களில் யதோசிதம் ஜ்ஞாநத்தை அவளுடைய பிதாவினிடமே ஸம்பாதித்துக்கொள்ளும்படியாக அந்த ஸ்வாமி அவளுக்கு ஆஜ்ஞாபித்தனர். இது ந்யாயமே. லோகவழக்கப்படிச் சிறு பெண்கள் மாமனார்களிடம் வித்யாக்ரஹண நிமித்தம் போவது அயுக்தமாயிருக்கும். குருவினிடம் போல் மாமனாரிடம் மர்யாதையுடன் வர்த்திப்பது ஸுலபமேயானாலும், தக்க அவஸரங்களில் ப்ரச்நைகள் மூலமாக விஷயங்களைக் கேட்டறிவதற்குத் தத்கால வழக்கப்படி மாமனார் உசிதமான ஆசார்யன் ஆகமாட்டார்.

ப்ரத்யங்க ஸௌஷ்டவம் கலந்தும் கலவாமலும் ஸமுதாய சோபை சில பெண்கட்குப் பொருந்தும்; கலவாத சோபை தூர தர்சநத்தில் மாத்ரம் ரமணீயமாய்த் தோன்றும். பல பெண்கட்கு ஸமுதாயசோபையுமிலது. அவர்க்கும் அநிர்வசநீயமாய் ஓர் ஆகர்ஷக சக்தியானது யௌவநாரம்பத்தில் ஸஹஜமாயுண்டாகின்

றது. ஆகலால், "விசேஷநிவேஸ்ய வசிகல்பித லக்ஷ்யோமா", எனும் வண்ணம், அவளுடைய சரீர நிர்மாண பூர்வமே, ப்ரத்யங்க ஸௌஷ்டவம் கொஞ்சமும் தவறாதபடி, அவைற்றைச் சித்ர மூலமாக த்ருப்தியாயமைத்துப் பின், அந்தச் சித்ரப்படிப்பிதா மகன் அவள் சரீரத்தை உண்டாக்கினு னென்னும்படித் தோற்று கின்ற ஜநகநந்தினியானவள், யௌவனாரம்பத்தில் எவ்வண்ணம் பிரகாசித்தாளென்பதைச் சொல்லவும் வேண்டுமோ. அவள் பிதாவின் ப்ரஹ்மதேஜஸ்ஸும் அவருடைய பாரமைகாந்த்யமும் அவளுடைய நன்னடத்தையும் பாமர த்ருஷ்டிபாதங்களினின்று அவளை ஸம்ரக்ஷித்தன.

பிதாவின் ஆஜ்ஞையை அநுஸரித்து முதலில் ஸ்ரீமத் ராமாயணம் அவரிடம் கேட்டாள். அதன் பிறகு பாஷ்யஸஹிதமாகக் கீதையைப் பாராயணம் செய்தனள். பின்பு பகவத் விஷயத்தை காலக்ஷேபம் செய்தாள். முடிவாக ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தை நியமத்துடன் பிதாவினிடம் கேட்டாள். இவற்றைக் கேட்டறிந்த தத்வஜ்ஞாநம் த்ருடப்படவேண்டிப் பிதாவின் நியமநத்தின் பேரில் அவரிடம் ஸ்ரீ பாகவதமும் ஸ்ரீ விஷ்ணுபுராணமும் ஸம்ஶயமறப் படித்தறிந்தனள்.

இப்படிப் ப்ரஹ்மவாதிநீ யெனத்தகுந்தவளாய் வளர்ந்த ஜநகநந்தினியை ஒரு நாள் காலையில், காலக்ஷேபாவஸரத்தில் கேசவாசார்யர் அழைத்துப் பின்வருகிறபடி உபதேசிக்கத் தொடங்கினார்:—

"ஜநகம்! கேசவாசார்யர்பெண் காலக்ஷேபம் செய்திருக்கின்றாள் என்று லோகத்தார் புகழ்வதால் உனக்காவது, எனக்காவது ப்ரயோஜநம் உண்டானதாய எண்ணாதே. படித்தவரெனக் க்யாதியடைந்த பெண்பாலர், ப்ராயேண, வயக்ரமத்தால் சரீரவிஸ்தாரத்தையடைவதுபோல், புத்தி விஸ்தாரத்தை அடைகின்றாரில்லை. அவர் கற்ற கல்வியெல்லாம் அவர்க்குக் கேவலம் அஹங்காரம் ஜ்வலிக்க உதவுகின்றதுமன்றி, அவருடைய ஸ்த்ரீ ப்ரஜ்ஞையைப் பழையபடியே நிலைக்கவும் செய்கின்றது. ஸ்த்ரீகள் அல்ப வ்யாஜங்களைக்கொண்டு பரர் தங்களை அநாதரனை செய்தனரென்றும், தங்கட்குத் தீங்குசெய்தனரென்றும் எண்ணுகின்றார்கள்; எண்ணத்த

காத அல்ப வ்யாபாரங்களைப் பெரிதாக்குகின்றனர்; போதுமான காரணமின்றிக் கோபமும் வ்யஸநமும் கொள்கின்றனர்; பராமர்ஸையின்றி வாக்வ்ரயம் செய்கின்றனர்; தமது குற்றங்களைச் சுட்டிக் காட்டுபவரிடம் த்வேஷம் பாராட்டுகின்றனர்; நஸ்வரங்களில் ஆசை கொள்கின்றனர்; ஸாஸ்வதமான நன்மைகளைத் தேடாது விடுகின்றனர். அநேகம் ஸ்த்ரீகள் அவர்களுடைய மௌட்யத்தால் பெரியோருடைய ஸஹவாஸார்ஹதையை அடைகின்றனரல்லர்.

"காமத்தால் பரஸ்பரம் ஆகர்ஷிக்கப்பட்ட ஸ்த்ரீ புமான்கள் ப்ராயேண, அவருடைய காமம் நிலைக்குமட்டும், தாங்கள் அநுரூப தம்பதிகளென மூடவிஸ்வாஸம் கொள்கின்றனர். அந்தக் காமத்தின் தீவ்ரம் அடங்கியபின் அவர் ஒருவரையொருவர் வெறுக்க ஆரம்பிக்கின்றனர். அப்போது, அவர் விஷயத்தில், "நல்லது கெட்டால் நாய்க்கும் வழங்காது" எனும் பழமொழி ஊர்ஜிதமாகின்றது. பத்து பெயர்க்குக் காமமும் ஸம்பந்த காரணமாகின்றதில்லை. அநுரூபதாம்பத்யம் தான் லோகத்தில் மிகுந்து நிற்கும். அநுரூபமாக அது ஏற்பட்டபோதிலும் ஒரு புருஷாயஸ்ஸினுடைய அல்பஸ்வபாவத்தை அறிந்துகொண்டு, தாம்பத்யத்தை ஜந்மபலமாக நினைக்காமல், ஜந்மத்தாலடையக்கூடிய புருஷார்த்தத்துக்கு அதை ஒரு ஸஹகாரியாக நமது ப்ராசீனர் நிர்த்தாரணம் செய்தனர். ஆதலால் கேவலகாமத்தால் அது புஷ்பிக்கும்படி அவர் அவகாசம் கொடுத்தாரில்லை.

"இப்போது ஆர்யாவர்த்தமெனப்பட்டது அநார்யவ்யாப்தமாய்விட்டது. காலதேச வைகுண்யங்கள் மிகுந்தன. ஒவ்வொரு ஜீவனும், அவ்வைகுண்யங்களால், விபரீத ஸம்ஸர்க்கங்களில் சிக்கித், தனது ஜந்மத்தின் உத்தேஸ்யமான பலத்தை இழந்து போகும்படி நேரிட்டிருக்கின்றது. உன்னுடைய ஜந்மத்துன் ப்ரயோஜநத்தை நீ யடையவேண்டுமென்று நினைத்து, அதற்கேற்றபடி உனக்கு நான் விவாஹம் முடித்தேன். பகவத் ஸங்கல்பம் எப்படி இருக்குமோ தெரியாது. நீ என்னிடம் அறிந்த விஷயங்களின் ஸாராம்ஸங்களை நமது ப்ரமாண க்ரந்தங்கள் காட்டினபடி உரைக்கின்றேன். கேள்.

"காலமும் தேசமும் அநாதியென்றும் அநந்தமென்றும் அறி. அவற்றுள் அந்தர்க்கதமாகும் சேதநாசேதந ரூபமான வஸ்துக்களின் மொத்தமும் எல்லையற்றதாகத் தெரிந்துகொள். இவற்றை ப்ரகாரமாயுடையவன் ஈஸ்வரன். இவற்றின் ஸங்கோச விகாஸங்களைத் தான் ப்ரளயமென்றும் ப்ரபஞ்சமென்றும் சொல்வர்.

"வஸ்துக்களில் பூர்வம் இல்லாததொன்று நடுவில் உண்டாவதில்லை. பூர்வம் இருந்ததொன்று பின்னால் நசிப்பதும் இல்லை. சேதநவஸ்து விகாராநர்ஹம். அசேதநம் ஸததவிகாரி. அதன் பரிணாமமான சரீராதிகள் ஸம்பந்தமடியாகச் சேதநனும் ஜந்மம் முதலான விகாரங்களை அடைவதாக வ்யவஹரிக்கப்படுகின்றான். அவற்றை அவன் அடைவதற்கு அவனுடைய ஸுக்ருத துஷ்க்ருதங்கள் காரணங்களாகின்றன. சேதநனுக்கும் அவன் கர்மங்களுக்கும் இப்படிப்பட்ட ஸம்பந்தங்களையும் ப்ரயோஜநங்களையும் விளைவிப்பது ஈஸ்வரனுடைய கர்மஶக்தி. அக்கர்மஶக்தியானது, தனது நிஸர்க்கமான தயையால் ப்ரேரிதனான ஈஸ்வரனால், ஜீவன்களுடைய ஹிதத்தை உத்தேசித்துக் கார்யகரமாகின்றது.

"பகவான் ஜீவன்களுக்குக் கரண களேபரங்களைத் தந்தது, ஜீவன்கள் புருஷார்த்தங்களை அவற்றைக்கொண்டு ஸாதித்துக்கொள்ள வேண்டுமென்பதற்கென்று அறி. ஜீவன்கள் கரண களேபரங்களை ஸத்விநியோகம் செய்வதற்கும் துர்விநியோகம் செய்வதற்கும் ஸ்வதந்த்ரர்கள்.

"ஜீவன்கட்கு ஸ்வரூப ப்ராப்தி தான் பரம புருஷார்த்தம். ஸ்வரூபத்தை அறிந்துகொண்டு, தத்ப்ராப்தி நிமித்தமாக விதிக்கப்பட்ட உபாயத்தைப்பற்றி நின்றானாகில் புருஷார்த்தம் தானே ப்ராப்தமாகின்றது.

" [illegible]
[illegible] " ॥

என்று உபநிஷத் சொல்லிற்று. உனது ஆத்மாவைப்பற்றி, நான் இப்படிப்பட்டவனாகின்றேன் என்று அதன் ஸ்வரூபத்தைத் தெரிந்துக் கொண்டாயாகில், லோகரீதியின்படி, உனக்காவது உனது சரீர ஸம்பந்திகள் இஷ்ட பூரணத்திற்காகவாவது, சரீர கஷ்டத்துடன் கூடிய ஒரு ப்ரவ்ருத்தியில் நீ இழியமாட்டாய்.

"ஜீவஸ்வரூபம் என்னெனில், தத்வமஸி, எனும் வாக்யத்தை யும் ப்ரணவத்தின் அக்ஷாத்ரயங்களையும் ஸமுதாயமாகயோசித்து அத்வைதிகள் ஜீவன்தான் ப்ரஹ்மம் என்கிறார்கள். திருவஷ்டா க்ஷரத்தையும் காயத்ரீ மஹாமந்த்ரத்தையும் யோசித்தால், ஜீவ ப்ரஹ்ம ஐக்யம் ஸித்திக்காது. அவர்க்குள் நிர்ஹேதுகமாக ஸித் தித்த ஸ்வாமித்வ தாஸத்வ ஸம்பந்தம் தான் நிலைக்கும். ப்ரணவ விவரணம்தான் அஷ்டாக்ஷரம், ஷடக்ஷரம், த்வாதசாக்ஷரம் முத லான மஹா மந்த்ரங்கள். இவையெல்லாம் நாலாம் வேற்றுமை யென்று தமிழில் சொல்லப்பட்ட சதுர்த்தியில் தான் முடிகின்றன. கீதையில் ஸர்வேஸ்வரனும் ஜீவனைத்தனது அம்சமூதமென்றான். முண்டகோபநிஷத்தும் அதை ஸ்பஷ்டமாய் விளக்குகின்றது.

"தான் பகவத்சேஷனென்று ஸ்வரூபத்தை அறிந்துகொண் டவன், அந்த சேஷவ்ருத்தியைத்தான் நியமேந அநுஷ்டிக்கத் தக் கவன். முக்ததசையில் பகவானுடைய திருவுள்ளத்தை ஸாக்ஷாத் தாக அறிந்து அதை நடத்துவன். பத்த தசையில் ஈஸ்வராஜ்ஞை ஸாஸ்த்ரைகவேத்யமாகையால், பகவானுடைய ஆஜ்ஞா கைங்கர் யங்களை ஸாஸ்த்ரத்தா லறிந்து செய்யக்கடவன்.

"ஜீவன்கள் பல விதமாயிருக்கின்ற பகு ஜந்மங்களெடுத்து முடிவில் மநுஷ்யராய்ப் பிறக்கின்றனர். ப்ரக்ருதியின் குணங்கள் ஸமமாய் ஸர்வ சரீரங்களிலும் ஏற்படமாட்டா. ஆதலால் அக் குணங்களின் தரதமபாவம் ப்ரதி சரீரமும் ஸித்தம். அவற்றைக் காரணமாகக் கொண்ட சேதநருடைய ப்ரவ்ருத்துகளும் ஏகரூப மாக அமைவதில்லை. இந்த வித்யாஸங்கள் சேதநர்களுடைய தத் கால ஜந்மங்களால் மாத்ரம் ஸித்திக்கவில்லை; அநேக ஜந்மபரம் பரைகளால் ஏற்பட்டன.

"குணகர்ம விபாகத்தால் மநுஷ்யர்க்குள் வர்ணபேதம் ஈஸ் வரக்ருதம். இந்த லோகத்தில் இப்போது வ்ருத்தியடைகின்ற மநுஷ்ய ஸ்ருஷ்ட்யாரம்பத்தில் வர்ணபேதம் உண்டாயிருக்கலாம். புராணங்கள் காட்டுகிறபடி முதலில் உண்டாயிருந்த ஆர்யரு டைய ப்ரவ்ருத்தி பேதங்களால காலக்ரமத்தில் வர்ணபேதம் அவர்க்குள் உண்டாயிருக்கலாம. எப்படி உண்டாயிருந்தபோதி லும், ப்ராஹ்மணாதி ஜந்மங்கட்கு அர்ஹனான ஜீவந்தான் அந்த

ஜன்மங்களைக் கர்மாத்யக்ஷன் ஸங்கல்பத்தால் அடைகின்றான். மநுஷ்ய ப்ரயத்நத்தால் வர்ணபேதம் நசித்தால், அக்காலஸ்திதியை அநுஸரித்தே ஜீவன்கட்குப் புநர்ஜந்மம் நேரிடும்.

"வர்ணஸாங்கர்யம் மிகவும் உண்டாகின்ற தத்காலத்தில், வர்ணாந்தரங்களிலும் வர்ணபாஹ்யர்க்குள்ளும் ஜநிக்கத்தக்க ஸம்ஸ்காரமுடைய பலர், ப்ராஹ்மணரென ஜந்மத்தால் தோற்றி, அவ்வவருடைய ஸம்ஸ்காரோசிதமான வகுப்புகளை ஸம்ஸர்க்கங்களால் சேர்ந்துவிடுவர். "ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ணஸங்கர: ।" எனும் கீதாவாக்யம் ஆநுஶாஸநிக பர்வத்தில் மதங்கோபாக்யாநத்தைப் பார்த்தால் விளங்கும்.

"குணகர்மவிபாக க்ருதமான வர்ணங்கள் ரக்ஷிக்கப்பட்டால் பகு மநுஷ்யர் ஸ்வரூபப்ராப்தி யடைய ஸௌகர்யங்கள் உண்டு. ஜந்மத்தால் ப்ராஹ்மணனாய்ப் பிறப்பவனுக்கு ஸத்ஸங்கம், ஸதாசார்யப்ராப்தி, ஸத்கர்மம் முதலானவைகள் ஸித்திப்பதையொத்து மற்றவர்க்கு அமையமாட்டா. வர்ணபேத மற்றதாகில், ஸர்வஸமமான கூட்டமொன்றில், ப்ராஹ்மணர்க்குரிய குணகர்ம ஸம்பந்தம், யாரோ ஒருவர்க்குக் கஷ்டத்தால் ஸித்திக்கலாம். ஸம்ஸர்க்கத்தால் அதுகெட்டாலும் கெடலாம்.

"குணங்கள் சேதநனைக் கர்மங்களில் ஏவுகின்றன. ஸத்வகுண ப்ரதாநரான ப்ராஹ்மணரும், அவருடைய ஸம்ஸ்கார விசேஷங்களாலும், ஸம்ஸர்க்கங்களாலும் ப்ராயேண ஸத்கர்மங்களிலே அந்வயிக்கின்றனர். இவர்க்கேற்றபடி நம்முடைய பெரியோர், பகவத் ஸங்கல்பத்தை முன்னிட்டுக்கொண்டு, ஸத்வம் வ்ருத்தியாகும்படியாயும், சித்தம் சுத்தமாகும்படியாயும், ஜ்ஞாநம் த்ருடப்படும்படியாயும், ஸ்வரூப ப்ராப்தியுண்டாகும்படியாயும், தகுந்த கர்மங்களை விதித்திருக்கின்றனர். அப்படி வர்ணங்களையும் ஆஶ்ரமங்களையும் அநுஸரித்து ஏற்பட்ட ஸ்வகர்மத்தை மநுஷ்யன் பகவதாராதநமாகப் பண்ணிக்கொண்டு, சித்தசுத்தியை ஸம்பாதித்து, ஶாஸ்த்ரத்தால் பகவத் ஸ்வரூபத்தையும் தன் ஸ்வரூபத்தையும் தனக்கு ஹிதமாயுள்ள உபாயஸ்வரூபத்தையும் புருஷார்த்த ஸ்வரூபத்தையும் அறிந்து, ஸம்ஸார சக்ரத்தைத்

தாண்டுகின்றான். ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில், "𑌈𑌯𑌾𑌜 𑌸𑍋𑌽𑌪𑌿 𑌸𑍁𑌬𑌹𑍂𑌨𑍍 𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍍𑌯𑌪𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 𑌤𑌰𑍍𑌤𑍁𑌂 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 ॥" எனும் ஸ்லோகத்தைச் சிந்திப்பாய். மஹா ப்ரஹ்மவித்தான கேசித்வஜ ராஜனைப்பற்றி இந்த ஸ்லோகம் பிறந்தது. ஜ்ஞாநவ்யபாஸ்ரயன் என்பதால் ஆத்ம ஜ்ஞாநத்தை அந்த ராஜா நன்றாகப் பொருந்தினவன் என்று ஏற்பட்டது. '𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯' என்பதால் பக்தியோக நிஷ்டன் என்று அர்த்தமாகின்றது. அவன் ராஜாவானபடியால் பகு யஜ்யங்கள் செய்தான். பக்தியோக ப்ரதிபந்தகங்களாய் நிற்கும் கர்மரூபமான பாபங்களை நிவர்த்திக்கும் பொருட்டு அப்படிச் செய்தான். ஸம்ஸார ஹேதுவாகின்ற கர்மங்கள் ம்ருத்யு சப்தத்தால் வ்யவஹரிக்கப்படுகின்றன. இவற்றை அவித்யை எனப்பட்ட ஸ்வகர்மத்தால் தாண்டவேண்டும். இந்தக் கர்மம், அதற்கு உரிய பலத்தை விளைவிக்காதபடிப் பகவதாராதந ரூபமாகப் பண்ணப்பட்டதாகில், பக்தியோகத்திற்கு ஸஹகாரியாகின்றது.

"அப்படியே ஒவ்வொரு ஜ்ஞாதாவும், பகவத்ப்ராப்தி நிமித்தமாக ஓர் உபாயத்தில் அந்வயித்தவனுய்க்கொண்டு தனக்கென்று ஏற்பட்ட ஸங்கிஹித கர்மங்களைப் பகவதாராதநமாய்ச் செய்யவேண்டுமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. உனக்காக ஏற்பட்ட கர்மம் பர்த்தாவின் ஸேவை. அதில் நீ ஜாகரூகையாய் இருக்கவேண்டும். அந்த வ்யாபாரத்தையே நீ பகவதாராதநமாகக் கொள்ளவேண்டும். ப்ராஹ்மணர் காமத்தின்பொருட்டு விவாஹம் செய்துகொள்ளார். தர்மத்தின் பொருட்டும் ப்ரஜையின் பொருட்டும் உன்னை உன் பர்த்தா மணந்தார். அவருடைய க்ரஹஸ்தாஸ்ரமதர்மம் உன்னையன்றி நிறைவேறமாட்டாது. உனக்கு அபேக்ஷையுண்டான காலத்தில், உன் பர்த்தாவின் அநுமதியின் பேரில் நீ விஸ்வஸித்த ஆசார்யன் க்ருபையை முன்னிட்டு ஓர் உபாயத்தில் அந்வயிப்பாய். பர்த்தாவின் உபாயாநுஷ்டாந காலத்தில் உனக்கும் உபாயாநுஷ்டாநம் ஸித்திக்கக்கூடும்.

"ஸர்வத்ர ஸமனுய், ஸர்வத்தின் ஹ்ருதயங்களிலும், ஸர்வத்தையும் வ்யாபித்து நிற்கும் வாஸுதேவனை நோக்கு. அவனுடைய அம்சபூதையான உன்னையும், அம்சபூதரான மற்ற யாவத் ஜீவரை

யும் சிந்திப்பாய். நஶ்வரமான உனது சரீரத்தையும், நஶ்வரங்களான மற்ற சேதநருடைய சரீரங்களையும், ஒரே ப்ரக்ருதியின் விகாரங்களென அறி. அந்த ப்ரக்ருதியும், அதற்குள் சிக்கிய எல்லா ஜீவன்களும் பகவானுடைய ப்ரகாரங்களென்று அறி: ஆதலால், யாவர்க்கும் அஹங்காரமமகாரங்கள் அஜ்ஞாநத்தால் உண்டாகின்றன. பார்வைக்குத் தோற்றும் பேதங்களை அநாதரித்து, ஸர்வத்ர பேதமின்றி நிற்கும் பரமனையே பஜிப்பாய். ஸர்வமும் அவனிடம் ஜநித்தன. அவனிடம் இப்போது உயிர்ப்பன, முடிவில் அவனிடமேலயிப்பன, ஆதலால் ஸர்வமும் அவனே. இப்படியறிந்து சித்தத்தில் சாந்தியை யடைந்து அவனையே உபாஸிப்பாய்.

"ஸர்வ த்வந்த்வ மோஹங்களையும் த்யாகம்செய். ஒன்றாலும் உன் மநஸ் கலங்கவேண்டாம். ஆசை, கோபம், துக்கம் முதலானவை உன் சித்தத்தை எப்போதும் கலக்கவேண்டாம். எல்லா அவஸரங்களிலும் உனது அந்தஃகரணம் ஒரே ப்ரகாரமாக இருக்கட்டும். அதினின்று ஸ்ரீக்ருஷ்ணன் எப்போதும் விலகாதபடி அதை வசப்படுத்தி வைத்துக்கொள்.

"எனை உனக்கு ஜ்ஞாநமளிக்க வேண்டிய ஆசார்யனாக வரித்தாய். உனக்குப் பிதாவென்றும், ஹிதனென்றும், ஆசார்யனென்றும் எண்ணி இவற்றை உனக்கு உரைத்தேன். நாராயணன் உனைக் காப்பாற்றட்டும்."

இப்படிக் காலக்ஷேபாவஸாநத்தில் ஆசார்யனுடைய அநுஶாஸநத்தை ஜநகநந்திநீ தன் பிதாவினிடம் அடைந்தாள். உடனே, "உஸா யொஸாய வாநஂவாநஂ ஹ்ணஶ்ரூ", எனும் வண்ணம் பிதாவைப் பலதரம் ஸேவித்து எழுந்து நின்றனள். "ஜநகம்! இன்னும் ஏதாவது கேட்க அபேக்ஷிக்கின்றையோ?" என்று கேசவாசார்யர் சொன்னார்.

"அப்பா! தேவரீருடைய அநுமதியாலும், அடியேனைப்பற்றித் தேவரீர் ஆவிஷ்கரிக்கின்ற ஸௌலப்யாதிஶயத்தாலும், தேவரீரிடம் சில ஸம்ஶயங்களை விஜ்ஞாபநம்செய்து அவற்றை நிவர்த்தித்துக்கொள்ள விரும்புகின்றேன். ஸ்ரீபகவானிடம் ஶேஷமறக் கேட்ட அர்ஜுநனுக்கும், 'தஸ்விஸி ஹ்ணிவாசெதந' எனும்

ஶ்லோகத்தினுல், தத்வதர்ஶிகளாய் நின்ற இதர ஜ்ஞாநிகளிடம் விஷயங்களை மறுபடியும் கேட்கும்படி, ஸ்ரீக்ருஷ்ணன் ஆஜ்ஞாபித்தனரன்றே? பெண்ணுகப் பிறந்த அடியேன் அங்யரிடம் கேட்பதெனும் ஸங்கர்ப்பம் நினைக்கத்தக்க தன்று. ஆதலால் தேவரீரே அடியேனுக்கு க்ருபைபாகத் தந்த ஜ்ஞாநதார்ட்யத்தின் பொருட்டும், அடியேன் சித்தத்தி லுதிக்கும் ஸம்ஶய நிவ்ருத்தியின் பொருட்டும், வேண்டியமட்டும் ஜ்ஞாநோபதேசம் அளிக்கவேண்டும்." என்று ஜநகநந்தினி மொழிந்தாள்.

அதற்கு கேசவாசார்யர், "குழந்தாய்! உன் வார்த்தைகளால் நான் மிகவும் ஸந்தோஷிக்கின்றேன். நான் சொன்னதைக் கேட்டுக்கொண்டு நீ புறப்பட்டுப் போய்விட்டால், உன் மநஸ்ஸில் ஜ்ஞாநம் ஸம்யக் அமைந்ததென எவ்வண்ணம் திருப்தனுவேன்? நீ ஸம்ஶயப்பட்டும் ஸ்தாநங்களைப்பற்றி ப்ரஶ்நம் பண்ணினுல் தான், நான் உன் விஷயமாகப் பட்ட ஶ்ரமம் ஸபலமாயிற்றென்று எனக்குத் தெரியக்கூடும். எவ்வளவு கேட்கவேண்டு மென்று விரும்புகின்றனையோ அவ்வளவையும் கேட்டுத் தெளிந்துகொள். அதினிமித்தம் நாளைக்கு நாம் இவ்விடம் கூடுவோம்" என்று விடை தந்தனர். ஜநகநந்தினி அகத்துக்குள்ளே சென்றனள். கேசவாசார்யரும் சிறிது காலம் க்ரந்தங்களைப் பார்த்துவிட்டு, மாத்யாஹ்நிக ஸ்நாநநிமித்தம் எழுந்து சென்றனர்.

## எட்டாவது அதிகாரம்.

மறுநாள்காலையில் வழக்கப்படி ரேழித்திண்ணைமீது உட்கார்ந்திருந்த பிதாவை நமஸ்கரித்து ஜநகநந்தினி வினவினள். "அப்பா! ஸ்த்ரீ ஶூத்ரர்களைச் சேர்த்துப் பகவான் கீதையில் 'பாபயோநிகள்' என்று திருவுள்ளம் பற்றுவானேன்? ப்ராஹ்மணரைப் புண்யரென்றும், ராஜர்ஷிகளைப்பக்தரென்றும் சொன்னது புருஷரை மாத்ரம் உத்தேசித்தன்றே? ப்ராஹ்மணுதி ஜந்மங்கள் ஸ்த்ரீகட்குக் கிடையாதா? மைத்ரேயி ப்ரஹ்மவாதிநியா யிருந்தாளென்றும், உபநிஷத் வித்யோபதேசத்தைத் தன் பர்த்தாவினிடம் பெற்றனளென்றும் உபநிஷத் கூறவில்லையா? கார்கிக்கு யாஜ்ஞவல்க்யரை ப்ரஶ்நம் செய்ய அர்ஹதை ஏற்படவில்லையா? அவளுடைய ப்ரஶ்நங்கட்கு ப்ரதிவசநங்கள் நமக்கு ஶ்ருதியாக விளங்க

வில்லையா? இன்னும் தேவரீர் பண்டிதர்களுடன் ஸம்பாஷிக்க, அடியேன் கேட்டபடிச் சொல்கின்றேன். அத்ரிகோத்ரோத்பந்நையான விஸ்வவாரா என்பவள், ருக்வேதம் 4-வது அஷ்டகத்தில் மந்த்ரத்ரஷ்டாவாக விளங்கவில்லையா? இன்னும், 7-வது அஷ்டகத்தில், வஸுக்ர ருஷி யஜ்ஞம் செய்கையில் ப்ரச்சந்நனாக ஸாந்நித்யம் செய்த இந்த்ரனை அவர் பத்நீ முதலில் அறிந்து ப்ரதம மந்த்ரத்தினால் ஸ்துதிக்கவில்லையா? இன்னும் ஊர்வஸீ, இந்த்ராணி, யமீ முதலான தேவஸ்த்ரீகள் மந்த்ரத்ரஷ்டாக்களாக அங்கீகரிக்கப்படவில்லையா? இப்படி ப்ராஹ்மணஸ்த்ரீகட்குப் புருஷர்க்குப்போல் ஏற்பட்ட ஏற்றமெல்லாம் போய்ப் பாபயோநித்வம் ஸம்பவித்ததேனோ? அடியேன் ஸ்த்ரீ ஜாதியான படியால் கேட்கின்றேன்: க்ஷமித்தருளவும்." என்று ஜநகநந்தினி மொழிந்தாள்.

இதைக்கேட்ட கேசவாசார்யர் ஈஷத் விஸ்மயத்துடன் சொல்ல ஆரம்பித்தனர். "குழந்தாய்! உனது ப்ரஸ்நங்கள் மிகுந்த யோசனைகட்கு இடந்தருகின்றன. பாஷாந்தர ஸம்ஸ்காரமுள்ளவர்கள் இத்தகைய யோசனைகள் செய்கின்றார்கள். பகவான் பாபயோநிகள் என்றது ஸ்த்ரீ புமாங்களுடைய ஜந்மக்ஷேத்ரங்களை உத்தேசித்தன்று; ஜந்மகாரணங்களாகும் ப்ராசீந கர்மங்களை உத்தேசித்து அவ்வண்ணம் ஸாதித்தருளினது. ஸ்ருதியும், "யதாகாரீ யதாசாரீ ததா பவதி, ஸாதுகாரீ ஸாதுர்பவதி பாபகாரீ பாபோ பவதி, புண்ய: புண்யேந கர்மணா பவதி பாப: பாபேந" என்று வெளியிட்டது. [அதாவது, எப்படிச் செய்ய, எப்படி ஆசரிக்க, ஒருவனுக்கு ஆபிமுக்யம் உளதோ, அவன் அதற்கேற்ற பலத்துடன் கூடினவனாகின்றான்: ஸத்கர்மம் செய்கின்றவன் ப்ராஹ்மணாதி சரீரயுக்தனாகின்றான். பாபம் செய்கின்றவன் சண்டாளாதி ஶரீரப்ராப்தி அடைகின்றான்] இந்தப் புண்யபாபகர்ம ஸம்பந்தமும் ப்ராசீந புண்யபாப ப்ரயுக்தம். ஆனால் ஸ்த்ரீகளையும் வைஸ்ய சூத்ரர்களையும், ப்ராசீந பாபகர்மத்தால் பிறந்தவரென அநுமிப்பதேனோ வென்று கேட்பாய். சொல்கின்றேன் கேள். ஜந்மப்ரயோஜநம் பரமபுருஷார்த்த ப்ராப்தியன்றோ? ஸ்த்ரீ சூத்ரர்களுடைய சரீரங்களும்,

வ்ருத்திகளும் அதனுடைய ப்ராப்திக்கு விரோதிகளாய் நிற்கின்றன. ஸ்த்ரீகளுக்கு க்ரஹவ்யாபாரங்கள், சிசுக்களுடைய ஸம்ரக்ஷணை, கர்ப்பம், ப்ரஸவம் முதலான துன்பங்கள், நஸ்வரங்களில் ஸ்ப்ருஹை, ஸ்வஸரீராதிகளுடைய அலங்காரத்தில் இச்சை, இவை ஸ்வபாவத்தால் ஸம்பந்திக்கின்றன. ஸ்த்ரீப்ரஜ்ஞை என்று அவர்களுடைய சித்தவ்ருத்தியும் ப்ரதக்ஷ ஏற்பட்டிருக்கின்றது. வைஸ்யன் த்விஜனுனபோதிலும், ஸதா அர்த்தார்ஜந பரனுகின்றபடியால், ரஜோகுண ப்ரசுரன். சூத்ராதிகள் தமோகுண ப்ராசுர்யத்தாலோ, சுத்த தமோகுணத்தாலோ மூடப்பட்டவர்கள். இவர்களுக்குப் பரகதியைப்பற்றி ப்ரவ்ருத்தி கஷ்டத்தால் உண்டாகத்தக்கது. ஆகலால் இவரைப் "பாபயோநிகள்" என்றுர். "கவிெவஜ ஸஉ஼உராவாஈ" என்று, புண்யஜந்மத்தை அடைந்தவனும், ஸம்ஸர்க்காதி தோஷங்களால் பாபங்களை ஆசரிப்பவனுவான் என்று திருவுள்ளம். இவர்கள் யாவரும் பகவானை ஆஸ்ரயித்த மாத்ரத்தால் பரமகதியை அடைவார்கள் என்று ஸாதிக்கும்படி யிருந்தது. கைமுதிக ந்யாயத்தினுல், ப்ராசீந ஸுக்ருதமடியாக ப்ராஹ்மண ஜந்மமடைந்து, புண்யகர்மங்களை யநுஷ்டிப்பவரும், அர்ஜுநனைப்போல் ராஜர்ஷிகளாய், பரமபக்தராய் நின்றவரும், பகவதாஸ்ரய பலமாகப் பரமபதத்தை அடைவார்கள் என்பது ஸித்தம். பகவானுடைய கர்மஶக்தியையும் ஜீவனுடைய ஜந்ம ஸந்ததியையும் ஒப்பாதவர்கள், மநுஷ்யர் யாவரும் ஸமாநமான சரீரசித்த ஸம்ஸ்காரங்களுடன் பிறக்கின்றுரென்பர். இது லோகாநுபவ விரோதம். நம்மிராஜாங்கத்தார் மதத்திலும், ஈஸ்வரன் ஒரு ஜாதியரைத் தனியாக நிறுத்தி அபிமாநித்தனனென்றும், அவர்பொருட்டு நிர்துஷ்டரான ஜாத்யந்தரர்களை நாசம்செய்தானென்றும் கதையுண்டு. இப்படி யபிமாநித்ததும் அவரைக்கொண்டு அந்யரைச் செம்மைப்படுத்த வென்பர். இந்த ஈஸ்வர ப்ரயத்நம் பலிக்கவுமில்லை யென்பர். இது ஈஸ்வரனுக்குத் தகாதசெயல். அதனுல் ஒருவர்க்கு நிர்ஹேதுக பக்ஷபாதமும், மற்றவரிடம் நிர்ஹேதுக நைர்க்ருண்யமும் ஈஸ்வரனுக்குநேரிடும். நம் ஸம்ப்ரதாயஸ்தர், ஈஸ்வரனுக்கு வைஷம்ய நைர்க்ருண்ய தோஷத்தை ஆரோபிக்கத் துணியமாட்டார். ஸர்வசேதநனும் அவ்வவனுடைய கர்மாயத்த சரீரஸ்திதி ப்ரவ்ருத்தியுடன் கூடி

னவன் ஆகின்றான். ஈஸ்வரன் கேவலம் கர்மாத்யக்ஷன். ஆக லால் ஸ்த்ரீ சூத்ரர்கள் ஸ்வகர்மங்களடியாகப் பாபயோநிகள் ஆனார்கள். ஆனால் சில ஸ்த்ரீகளுக்குச் சில ஏற்றம் ஏற்படுகின்ற தென்பாய். அது அபவாதத்தால் ஏற்பட்ட விஷயம். சில ஸ்த்ரீ கள் ஏற்றமடைந்தாரென்றால், ப்ராயேண ஸ்த்ரீகள் அப்படி யில்லையென்பது ஸித்தமன்றோ? மைத்ரேயீ ப்ரஹ்மவாதிநீயாய் இருந்தாளென்று சொன்ன ஸ்ருதியானது அநந்தரமேவ, யாஜ்ஞ வல்க்யரின் இதர பார்யையான காத்யாயநி ஸ்த்ரீப்ரஜ்ஞையுடன் கூடினவளே என்று சொல்லவில்லையா? ஆகலால் ஸ்த்ரீ ப்ரஜ் ஞை என்பது ப்ரஹ்மவாதித்வ விரோதியென்பது ஏற்படவில் லையா? ப்ராஹ்மணனாய்ப் பிறந்தவனெல்லாம் புண்ய வ்ருத்தியில் நிற்கின்றானா? சூத்ரனெல்லாம் பாபாத்மாவா? இந்த வகுப்புகள் யாவும் ப்ராசுர்ய பாவத்தையிட்டு ஏற்பட்டன. எல்லா ஏற்பாடு கட்கும் விலக்குண்டு. காலதேச வைகுண்யத்தால் ஸாங்கர்ய காலம் நெருங்கிவிட்ட இப்போது, ப்ராஹ்மணன் ப்ராயேண சூத்ரதுல்யனே. பல ப்ராஹ்மணர் சண்டாளத்வ ம்லேச்சத்வ க்யாதியையும் ஸம்பாதித்துக்கொண்டனர். அநார்யனான சூத்ர னுக்கு வேதாத்யயநத்தில் அதிகாரமில்லை யென்பது அபசூத் ராதிகரணத்தால் ஸ்தாபிக்கப்பட்டது. ஸ்த்ரீகளுக்குத் தாத்ருஶ நிஷேதம் ஸாக்ஷாத்தாக ஏற்படவில்லை. அவர்களுக்கு வேதாத் யயநம் முதலான வ்ருத்தி இல்லாமல் போனதற்குக் காரணம் அவர்களுக்கு ப்ரசுரமாய் ஏற்பட்ட ஸ்த்ரீ ப்ரஜ்ஞதை தான். ஆனா லும் மோக்ஷகாரணமாகும் பகவதாஶ்ரயணத்துக்கு அவர்களும் அதிகாரிகளே. அந்த அதிகாரத்தை அவர்கள் ஸ்வகர்மங்களைப் பகவதாராதநமாகச் செய்து, ஸத்ஸங்காதிகளால் ஸம்பாதித்துக் கொள்கின்றனர்.” என்று சொல்லி முடித்தனர்.

“குணங்களின் விபாகத்தாலும் அவற்றிற்குப் பொருந்திய கர்மங்களின் விபாகத்தாலும் பகவான் வர்ணங்களை உண்டாக்கிய தாகச் சொன்னார். தத்கால ஸ்திதியில் வர்ணஸாங்கர்யம் வ்ருத்தி யடைகின்றதே.” என்றாள் ஜநகநந்தினீ.

“ஆனால் என்ன? வர்ணம் நஶித்துப்போய், ஜநங்கள் யாவ ரும் ராஜ்யலோபத்தாலும், தநத்தில் ஆசையாலும், போகத்தில் இச்சையாலும், அவற்றிற்கு ஏற்றபடி ப்ரவ்ருத்திகளில் ப்ரவிஷ்

டர்களானால், கேவல ஸத்வகுணத்தை உகந்த ஜீவன்கள் மிகுதியாக ஜந்மம் எடுக்கமாட்டா. லோகாதீதராயும், ஜந்மாபிமுகராயும் அப்படிப்பட்ட சேதநர் உண்டேயாகில், அவர் விஷயத்தில், ஈஸ்வரஸக்தியின் ப்ரவ்ருத்தியை நம் தேசத்தில் ம்லேச்சப்ராயராய்ப் பரிணமிக்கும் மநுஷ்யர் தடுத்து விடுவார்களா என்ன? கர்மாத்யக்ஷன் அவர்க்குத் தக்க ஜந்மங்களை, இந்த லோகத்தில் இல்லாவிட்டால் லோகாந்தரங்களில் தரமாட்டானோ? ஜநகம்! உனது ப்ரஸ்நைகள் நாஸ்திக வாதங்களைப்போல் தோன்றுகின்றன." என்று சொன்னார் கேசவாசார்யர்.

"தேவரீர்க்கு அப்படி தோன்றுவது ந்யாயமே. தேவரீருடைய க்ருபையால் அடியேனுக்குக் குறையொன்று மில்லை. ஆனாலும் ஸ்நாந நிமித்தமாகக் குளங்கட்குப் போகின்றேன். பகவத்ஸேவையை உத்தேசித்து ஸந்நிதிக்குச் செல்கின்றேன். அக்காலங்களிலும், காலாந்தரங்களிலும் நம்மவரெனப்படும் ஸ்த்ரீகள் அடியேனுடன் சேர்கின்றார்கள். அடியேனுடைய ப்ரயத்நமின்றி அவர்கள் ஸம்பாஷிக்க அடியேன் கேட்க நேரிடுகின்றது. அவர்கள் ஸம்பாஷணையால் ஜநித்த ஸம்ஸயங்களைப்பற்றிக் கேட்கின்றேன். அவற்றிற்குத்தக்க ஸமாதானங்கள் தேவரீரைப்போல் அடியேன் யோசிக்கச் சக்தியற்றவள். திருவுள்ளம் இசைந்தால் கேட்கின்றேன்." என்று மொழிந்தாள் ஜநகநந்திநி.

"குழந்தாய்! கேள். நிவ்ருத்திக்கப்படாத ஸம்ஸயங்கள், மூலத்தில்வைக்கப்பட்ட கோடாலிபோல், நான் உன் விஷயமாக பட்ட கஷ்டங்களை யெல்லாம் நாசம் பண்ணிவிடும். காலவைகுண்யம் யாரைத்தான் தாக்கவில்லை? உன் ஸம்ஸயங்களைச் சொல்" என்றனர் கேசாவாசார்யர்.

"ஸ்த்ரீகள் ஸமாஜங்களாய்ச் சேர்கின்றனர். ஒருவர் யோசனைகளைப் பிறர்க்குச் சொல்கின்றார்கள். ஸ்த்ரீகளுக்கு ஸ்வதந்த்ர்யம் உண்டாம். அவர்களைப் புருஷர் இஷ்டப்படி விநியோகம் செய்ய யோக்யரல்லராம். புருஷர் பலதரம் விவாஹம் செய்து கொள்கின்றனராம். ஸ்த்ரீகட்கு ஏகவிவாஹாநந்தரம் விவாஹ நிஷேதம் ந்யாய விரோதமாம். சரீரப்ரக்ருதிகள் இருவர்க்கும் ஸமாநமாம். ஸ்த்ரீகட்குப் பால்யவிவாஹம் சரீரதௌர்பல்யத்தை உண்டாக்குகின்றதாம். சிசுக்களும் துர்பலத்துடன் பிறக்கின்றனவாம்,

புருஷர்களைப்போல் ஸ்த்ரீகளும் பாஷாந்தரம் படித்து, அவ
களுக்குத் தோன்றியபடி விவாஹாதிகள் பண்ணிக் கொள்ளப் போகின்றனராம். இந்த யோசனைகட்கெல்லாம் ஶிஷ்டர்களுடைய ஸமாதாநம் என்னே?” என்றனள் ஜநகநந்தினி.

“இப்படி யோசிக்கும் ஸ்த்ரீகள் ஸமாதாநத்தையா அபேக்ஷிக்கின்றனர்? அதை அபேக்ஷிக்கும் உனக்கு அதைச் சொல்கின்றேன். ஸ்த்ரீகளென்றும், புருஷரென்றும், ஜாதிபேதம் உண்டா? ஒரே மாதாபிதாக்கட்கே, ஸ்த்ரீப்ரஜைகளும், புருஷப்ரஜைகளும் ஸந்ததிகளாகின்றன. ஒவ்வொரு புருஷனும் பெற்ற தாயையும், உடன்பிறந்த ஸஹோதரிகளையும், கொண்ட மனைவியையும், பிறந்த பெண்களையும் விஶ்வஸித்து, அவ்வவர்க்குரிய ஹிதங்களைச் செய்யவேண்டியவனன்றோ? ஸ்த்ரீகளென்று அவரைக் குளத்திலா தள்ளுகின்றான். அப்படியே ஒவ்வொரு பெண்ணும், தகப்பனையும், புருஷனையும், ஸஹோதரர்களையும், குமாரர்களையும் விஶ்வஸிப்பதில்லையோ? ப்ரஜாவ்ருத்திக்கு ஸ்த்ரீகள் முக்ய காரணமாய் நிற்க, ப்ரஜைகளை கர்ப்பத்தில் ரக்ஷிக்குமவர், புருஷரால் ரக்ஷிக்கத்தக்கவ ராகின்றார். க்ரஹஸ்ததையானது, அதை நடத்திவர வெளியில் சென்று ஆர்ஜிக்கும் புருஷரை அபேக்ஷிக்கின்றது; அதற்குரிய க்ரஹவ்யாபாரங்களைச் செய்யும் பெண்களையும் அபேக்ஷிக்கின்றது. இருவருடைய பிந்ந ப்ரவ்ருத்திகளும் கலந்து இல்லறம் நடக்கின்றது. இதில் வயஸ்ஸாலும், லோகாநுபவத்தாலும், யுக்தாயுக்த விவேகத்தாலும், ப்ராயேண சிறப்படைந்த புருஷன் க்ரஹஸ்வாமி யென்றும், அவனுடைய ஆஜ்ஞைக்குள்பட்டு க்ரஹவ்யாபாரத்தை நடத்திவரும் ஸ்த்ரீ க்ரஹிணி யென்றும், வ்யவஹரிக்கப்படுகின்றனர். இதில் ஸ்த்ரீகட்கு ஏற்படும் ஈஷத்பாரதந்த்ர்யம், அதிமநோஜ்ஞமான ஸ்வாதந்த்ரியம் எனத்தகும். பகவானின்பொருட்டு ப்ரஹ்லாதனுடைய நிருபாதிக பாரதந்த்ர்யம் ஸுகமா? அவன் பிதாவினுடைய மித்யாபூதமான ஸ்வாதந்த்ர்யம் ஸுகமா? ஸ்த்ரீகள் இஷ்டப்படி ஸ்வாதந்த்ர்யம் வஹித்தால் தடுப்பவரார்? யோக்யரான புருஷர் அவருடன் வாழமாட்டார். அதற்குமேல் ஆகப்போகின்ற தொன்றில்லை. இப்போது ஸ்த்ரீகளும் அவர்க்குண்டாயிருக்கும் நூதந ஸ்நேஹிதரான புருஷர்களும், தூஷிக்கும் தர்மஶாஸ்த்ரங்கள் ஶிஷ்

டாசாரங்களை அநுஸரித்து ஏற்பட்டன. ஶிஷ்டரென்றால் ஶிஷ்டரென ஸம்மதித்து பஹுமாநிக்கப்பட்டவர்கள். அவர்கள் ப்ராஹ்மணர்க்குக் காமப்ரேரிதமான விவாஹத்தைச் சிந்தித்தாரில்லை. விவாஹத்தை ஒரு ஸம்ஸ்காரமாக விதித்தனர். ஸ்த்ரீகளுடைய மநோவாக்காயங்கள் காமதூஷிதங்கள் ஆகாதிருக்கும் ஸ்திதியில், அவற்றிற்கு உத்தேஶ்யனாகும்படியான பதியை மாதாபிதாக்கள் பெண்களைக் குறித்து வரிக்கத்தக்கவர். இப்படி ஸ்த்ரீகட்கு உத்தேஶ்யனான பதி ஏற்பட்ட பிறகு, பத்யந்தர சிந்தை ஸ்த்ரீகட்குக் காமத்தால்தான் உண்டாகவேண்டும். பெரியவர்கள் காமப்ரசாரத்துக்கு மார்க்கம் காட்டியிலர். அதை அடக்கத்தான் வழிகாட்டியுளர். ஆதலால் ஸ்த்ரீகட்கு ப்ரௌடாவிவாஹமும் புநர்விவாஹமும் நிஷேதிக்கப்பட்டன. புருஷர்க்கும் காமப்ரயுக்தமான விவாஹநிஷேதம் உண்டு. காமத்தால் கந்யைகளைப் புருஷர் மணக்கின்றாரெனத் தகுமோ? அவர் மணஞ்செய்துகொள்வதும் தர்மத்தின் பொருட்டும் ப்ரஜைகளின் பொருட்டும். ப்ரதமபத்நீ வியோகம் நேரிட்டால், அக்காரணங்களைக்கொண்டே புருஷர் புநர்விவாஹம் செய்துகொள்கின்றனர். ப்ரஜைகள் உண்டாயிருந்தால் தர்மார்த்தம் செய்துகொள்கின்றனர். ஸந்யாஸம் பண்ணிக்கொள்ளத்தக்க வைராக்யம் இல்லாதிருந்தால், நிராஶ்ரமிகளாய் இருக்கக்கூடாதாகையால், புநர்விவாஹம் செய்துகொள்கின்றனர். இவையாவும் ஶாஸ்த்ரப்படி இப்போது நடக்கின்றனவா? எனக் கேட்கலாம். காலவைகுண்யத்தால் நடவாது நிற்கலாம். அநேகமாக ஶாஸ்த்ராநுகரணம்தான் மிகுதியாய் நிற்கலாம். ஆனால், லோகமறிய ஶாஸ்த்ராதிலங்கநம் செய்பவர் செய்யட்டும். காமப்ரேரிதராய்த் தர்மவிரோதிகளாய் ப்ரவ்ருத்திக்கின்றவர்கள், தாங்கள் இன்னும் ப்ராஹ்மணர் என்று அபிமாநத்தை வஹிப்பானேன்? மற்றோர்க்குப் பால்யவிவாஹ நிஷேதமில்லையே? ப்ராஹ்மணரைப்போல் மற்றோர் நடந்தாராகில், அவரிடம் பஹுமாநத்தால் நடக்கின்றனர். பஹுமாநம் நீங்கியதாகில், அவர் செயல்களைத் தடுப்பவரார்? ஜாதிக்குரிய வழக்கங்களை அதிக்ரமித்துவிட்டு, ஜாதியைவிடமாட்டேனென்பவர் யோக்யரா? அவரைச் சேர்த்துக்கொள்ளாத ஜாதியார் அயோக்யரா? ஐஹிகத்தில் ஸுகமாக விருப்பதை யாவரும் காலக்ரமத்தில் தேடிக்கொள்வர். ஶாஸ்த்ர மர்யாதையும் காலக்ரமேண குன்றும்,

ஆனால் ஸ்த்ரீகளுடைய ஸ்வாதந்த்ரியம் ப்ரௌடாவிவாஹத்தாலும், விதவா விவாகத்தாலும் மாத்ரம் ஏற்படாது. காமத்தாலோ, காரணாந்தரத்தாலோ விவாஹம் செய்துகொள்பவரில், ஒருவர்க்கோ, இருவர்க்குமோ, மற்றவரைப்பற்றிக் காமம் நீங்கியோ, அந்யத்ர காமம் உண்டாகியோ, ஸௌஜந்யம் போனதாகில், அவர்க்குள் விவாஹ நிவ்ருத்தியும், பிறகு ஒவ்வொருவரும் அந்யத்ர இஷ்டப்படி விவாஹம் செய்து கொள்வதும் ஏற்பட்டால் தான் ஸ்வாதந்த்ர்ய பூர்த்தியுண்டாகும். பிரிந்தவரின் ப்ரஜைகளையும், புநர் விவாஹம் செய்துகொண்ட ஸ்த்ரீகளின் ப்ரஜைகளையும் ராஜாங்கத்தார் காப்பாற்றவேண்டும்.

பாஷாந்தராப்யாஸம் ப்ராயேண நம்முடைய மதத்துக்கு விரோதியே. வித்யை பாஷாந்தரமாத்ர நிஷ்டமன்று. வ்ருத்தி நிமித்தமாக நம்மவர்கள் பிள்ளைகட்குப் பாஷாந்தராப்யாஸம் பண்ணிவைக்கின்றனர். அது வ்ருத்தியை மாத்ரம் ஸாதித்துக் கொடுக்கவில்லை. ஸ்வதர்மத்வேஷத்தையும் உண்டு பண்ணுகின்றது. நம்முடைய தர்மத்வேஷிகளும், மாதாந்தர நிஷ்டர்களும் வித்யாகுருவாகில் வேறு விளைவை உத்தேசிக்க வழியில்லை. ஸ்த்ரீகளுக்குப் பாஷாந்தரப் பயிற்சிசெய்ய நிர்ப்பந்தமில்லை. செய்தாராகில், அவரும் அப்பயிற்சியுடன் கூடிய புருஷரைப் போலாவார். ஸ்த்ரீகள் கெடாது நின்றால், ஜாதி தர்மம் அத்யந்தம் கெடாது. அவரும் செட்டால் வைதிகாசாரத்தை ஏட்டில்தான் பார்க்கவேண்டும். உன் ஸந்தேஹ நிவ்ருத்திக்காக இவ்வளவு தூரம் சொன்னேன். இதை நீ தெரிந்துகொண்டு ஸ்த்ரீ ஸமாஜங்களுக்கு உபதேசிக்கப்போனால் அது பயன்படாது. பள்ளிக்கூடம் போகும் பையன் ஸந்த்யாவந்தனத்தை விட்டானாகில், யுக்தாயுக்த விசாரம் செய்தா விடுகின்றான்? எச்சிலையும் திட்டையும் விசாரம் செய்தா மேற்கொள்ளுகின்றான்? விசாரம்செய்தா அபக்ஷ்யபக்ஷணமும், அக்ருத்யகரணமும் செய்கின்றான்? இவை பள்ளமடை. இழிவதற்கு எளிதாய் இருக்கின்றன ஸம்ஸர்க்கங்களால் உண்டாகின்றன. பள்ளிக்கூடம் போகும் பெண்களும் பள்ளிகளாய்த் தான் பரிணமிப்பர். ப்ராயேண நாஸ்திகரும் ஆய்விடுவர். உன் வார்த்தைகளைக்கேளார். ஸமாதாநம் உனக்கென்று சொன்

னேன். அவர்க்காகச் சொல்லவில்லை.” என்று கேசவாசார்யர் முடித்தனர்.

அதைக்கேட்ட ஜநகநந்தினி, “தேவரீர் ஸாதித்ததெல்லாம் நிஜமே. ஸம்ஸர்க்கங்களால் கெடுகின்றவர்கள் ஸதஸத்விவேவசநம் செய்யமாட்டார். முநிகள் வார்த்தைகளைக்கேட்ட கிளி, முநிகள் வசநங்களைச் சொல்லும். வேடர் சொற்களைக்கேட்டால் வேடரெனக் கூவும். இன்னுமொரு ப்ரஸ்நம் கேட்கின்றேன். இந்த லோகத்தில் கார்யாகார்ய நிர்ணயங்கட்கு ஶாஸ்த்ரம் ப்ரமாணமென்றான் ஈஶ்வரன். ஸ்ம்ருதிகர்த்தாக்கள் பிந்நாபிப்ராயங்களைக் கொள்கின்றார்களே. ப்ராசீநகாலங்களில் ப்ரௌடையான ஸ்த்ரீகள்விவாஹம் செய்துகொண்டனரே. ‘நஷ்டேம்ருதே ப்ரவ்ரஜிதே’ எனும் மநுவாதிகளுடைய வசநமும் உண்டே.” என்று சொன்னாள். “ஆசார்யர்களென ருஷிகளும் நமது பக்திக்கு அர்ஹர். அந்தந்த காலத்திய ஶிஷ்டாசாரங்களை உத்தேசித்து அவர் அபிப்ராயங்கள் பேதிக்கின்றன. ப்ரௌடையான பெண்கள் விவாஹமும், ‘நஷ்டேம்ருதே’ எனும் ஶ்லோகப்படி ஆசாரமும் க்வசித் க்வசித் யுகாந்தரங்களில் நடந்திருக்கலாம். அவை ஶிஷ்டாசாரமன்றென்று தான் த்யாகம் செய்யப்பட்டன.” என்று கேசவாசார்யர் சொல்ல, ஜநகநந்தினி, “அப்படியே தத்காலம் ப்ராசீந கால வழக்கங்களே ஸாதுவாகத் தோன்றககூடாதோ? பால்ய விவாஹத்தால், ஸ்த்ரீகட்கும், ஶிஶுக்களுக்கும் தௌர்பல்யம் உண்டாவதை யோசித்தும், வைதவ்ய மடைந்த அநேக சிறு பெண்கள் காமவஶராய்ப் போய் அதை அடக்கத் திறனிற்றிருப்பதை யோசித்தும், ப்ராசீந ஆசாரங்களை இப்போது அநுஸரிக்கத் தகாதா?” என்றனள்.

“குழந்தாய்! “யே தத்ர ப்ராஹ்மணாஸ்ஸம்மர்ஶிந:, யுக்தா ஆயுக்தா:, அலூக்ஷா தர்மகாமாஸ்ஸ்யு:” என்று ஆசாரங்களை மாற்றத்தகுந்த அதிகாரிகளை ஶ்ருதி விவரிக்கின்றது. அந்த அதிகாரம், ப்ரஷ்டர்கட்கும், பதிதர்க்கும், தத்துல்யராய் நம்மவரையும் பயரை த்யஜிக்காதவர்க்கும் உண்டாகாது. அதை அவரே அறிந்திருக்கின்றனர். ஆதலால் ஸமீபகாலத்தில் நம் ஸந்நிதியில் பண்டிதர்களை வரவழைத்துத் தாம் கொண்ட கருத்தை அவர்

கருத்தென்று லோகத்தார்க்கு எண்பிக்க ஆரம்பித்தனர். அது பயன்படவில்லை. ஸாதுக்களான ப்ராஹ்மணர் தர்ம காமர்களாய் ஆசாரங்களை மாற்ற வெண்ணினால் பழிக்கமாட்டோம். அது பர்யந்தம் ஆசாரத்திலிருக்கும் ஸ்ம்ருதிகள் பகவதாஜ்ஞையென ஆதரிக்கத்தக்கன. அப்போதும், காமத்தைக் காப்பாற்ற செய்யப்பட்ட ப்ரயத்நங்கள் ப்ராஹ்மணர்க்கு உதவா. பகவான் ஆசார்யர்கள் ஜிஹ்வையில் எழுந்தருளியிருக்கின்றான். அவ்வண்ணமே தர்மப்ரவர்த்தகர்களுடைய வசநங்களையும் ஆதரிக்கின்றான். தர்மமானது யுகங்களைப்பற்றியும், காலங்களைப்பற்றியும் பேதிக்கப் பொருந்தும். பகவான் மர்யாதைகளை ஸ்தாபிக்க அவதரிக்கின்றான் என்றால், வைதிகாசாரத்தை வேரில் வெட்டுகின்றவர் க்ரியைகளை உகப்பனோ? உகக்கமாட்டான்.'' என்று கேசவாசார்யர் சொல்லிமுடித்தார். ஜநகநந்தினியும் பிதாவைத் தண்டன் ஸமர்ப்பித்துவிட்டு உள்ளே சென்றனள்.

## ஒன்பதாவது அதிகாரம்.

இப்போது நம்முடைய கதாஸ்தாநம் மாறுகின்றது. நிரந்தரம் அநுபவிப்பதால், போதுமெனச் சித்தத்திற்கு த்ருப்தியைத் தராத திவ்யாம்ருதம் போன்று, க்ஷீராப்தி நிகேதநன் நித்யவாஸம் செய்வதற்கு உகந்தருளிய திருக்குடந்தையைச் சிந்திப்போம். தெளிந்த நீர் பெருகும் பொன்னியெனும் நங்கையானவள், பகவான் சயநித்த ஸ்தாநமெல்லாம் க்ஷீராப்தியெனக்கீர்த்தி கொள்ள வேண்டுமென்று இச்சை கொண்டவளாய்த் தானே இருபுறமும் வளைந்தோடின குடந்தையில மால்வண்ணன் கிடந்தவாறு யார்க்குத் தெரியும்? அதை அவன்தான் சொல்லப் பொருந்தும். ஆதலின் பக்திஸாரன் ப்ரார்த்தித்துக் கேட்கவும், அவன் மறுமொழி அளித்தலன். திருவயோத்தியைத் துறந்து இலங்கைமாநகர் வரையில நடந்த கால்கள் நொந்தவோவென ஆழ்வார் வினவ, அஃது அங்ஙனம் இல்லாதபடியால் விடை அளித்திலன். ஏனமாய் ஞாலம் இடந்தபடியால் மெய் குலுங்கிப்படுத்தையோவென ஆழ்வார் வினவ, அதற்கும் விடையளித்திலன். ஏனென்றால், ஸகல ஜகந்நிர்மாண சதுரனுக்கு நோவேது? குலுக்கமேது? அவன் யோக நித்ராவஸ்மனைக கடக்கவேதான், அடியார் அவனை அநுபவிக்க அநுபவிக்க அபர்யாப்ததையே மிகுதியாய் நின்றது. இப்

படிப் பக்தர் பெருகி அநுபவிக்கப்பெற்ற ஸ்தலவிசேஷத்தில் பக்திஸாரன் ரமித்தனர்.

இத்தகைய அபர்யாப்தாம்ருதம் இன்னும் திருக்குடந்தையில் நிற்கும்போது, மர்த்யமாய் நிற்கும் சரீரங்களின்மேல் வஸ்து வொன்றை நினைக்காத பேர்கள், இப்போது, மர்த்யோப போக்யமான விஷயங்களில் தம் மாநஸங்களை ஸதா ப்ரவர்த்திப்பித்துக் கொண்டு காலம் கழிக்கின்றார்கள். பரமபுருஷார்த்தப்ரதன் பள்ளி கொண்டவிடத்தில் அநர்த்த ஹேதுவான கேவலம் அர்த்த சிந்தனையில் ஆழ்ந்தவர் அவனை மறந்து திரிகின்றனர். அவர்க்காக இக்காலம் காப்பி ஹோட்டல்களும் நாடகசாலைகளும் கணக்கற்றுப் பெருகி வளர்கின்றன. ஆதாயம் செலவென அநவரதம் சொல்லிக் கொண்டிருப்பார்க்கு ஆதாயம் ஓர் புறமும் செலவு மற்றோர் புறமும் கும்பகோணத்தில் அமைந்து நிற்கின்றன. அனைவரும் அந்நகரத்தின் ஈஸாந்ய பாகத்தில் கட்டியுயர்ந்த கட்டிடங்களில் காலங்கழித்துக் களிக்கின்றனர். அதனால் ஸர்க்காருக்கு லாபம்; வக்கீல்களுக்கு லாபம்; ஸாக்ஷி சொல்வோர்க்கு லாபம்; லாயர் குமாஸ்தாக்கட்கு லாபம்; வ்யவஹாரப் பயிர் வளர்ப்போர்க்கு லாபம். ஜயித்த கக்ஷிக்காரன் ஜயம் மிகுதிபட வீட்டிற்குப் போகின்றான். தோற்றவனோ தொலைந்து போகின்றான். இந்நகரத்தில் இப்போது ஈஸ்வரன் நிற்கின்றானென்பது ஸந்தேஹிக்க வேண்டியிருக்கின்றது. விக்ரஹ ரூபத்தைவிட்டு விபவ ரூபத்துடன் அவன் வந்தானாகிலும் அவனைக் கணிசிப்பவர் அங்கே ஏற்படுவது துர்லபம்.

ஜநகநந்தினி தனக்குக் கிடைக்கமாட்டாளெனும் உண்மையறிந்தபின் ஸ்ரீநிவாஸன் கச்சிநகரை விட்டொழிந்தானென்று முன்பே சொன்னோம். 'கிட்டாதாயின் வெட்டென மற' எனும் வசநம் அவனுக்குப் பயன்படவில்லை. நாடகங்களைப் படித்து, கண்டமாத்திரத்தில் கருத்தைக் கவர்கின்ற கண்மணிகளைப்பற்றி அவன் எண்ணத் தொடங்கினான். "ஸைஷா ஸ்ரேஷ்டா ஸ்த்ரீ ஸ்ருஷ்டிராத்யேவ தாது:" என்று காளிதாஸன் வர்ணித்தபடிகளை யோசித்துத் தனக்கும் வேண்டுமோர் ஹ்ருதய நாயகியைப்பற்றிச் சிந்தித்தவன், பார்த்தவுடன் பற்றளிக்கும் புதுப்பெண்களை நினைத்தானில்லை. சிரகால பரிசயத்தால் ஜநகம் அவன் மநஸ்ஸில்

குடிகொண்டாள். ரூபாதிஶயத்தால் அவள் அவன் மநஸ்ஸில் மற்றொரு பெண்ணினுருவம் குடிகொள்ள இடம் தந்தாளில்லை; குணாதிஶயத்தால், அவன் சித்தம் அந்யத்ர சலிக்க விட்டாளில்லை. ஜ்ஞாநாதிஶயத்தால் அவளைப்பற்றித் தன்னை அடிமையெனப் பாவித்தனன். யௌவநம் கொஞ்சமும் ஆரம்பிக்காதவளவில், வயஸ்ஸில் குன்றிய ஓர் பெண்ணினிடம் அபிலாஷை உதிப்பது ஸஹஜமன்று. ஆயினும் அவன் குலத்துக்கேற்ற மரியாதையானது, இப்படிப்பட்ட பெண்களிடமே விருப்பம் உதிக்க அவகாஶம் தருகின்றது. அவளை மணப்பதால் பிற்காலம் உண்டாகும் ஸுகாதிகளை ஸ்ரீநிவாஸன் யோசனையால் விஸ்தாரப் படுத்தினன். ஆயினும் அவன் மநோரதமெல்லாம் மநோரதமாகத் தான் முடிவுபெற்றது.

விவேகமுள்ளவர்க்கும் இவ்வித ஸந்தர்ப்பங்களில் விவேகம் பயன்படுவதில்லை. விவேகிகள் சொல்லும் ஹிதவசநங்களும் காமுகர்க்கு வீண் சொற்களாய்ப் போகின்றன. கச்சி நகரத்தை துறந்த பின்பு, ஸ்ரீநிவாஸன், தனக்குள்ள விவேகத்தையும் துறந்து சென்றனன். தத்காலத்திய பாஷாந்தர வித்யாப்ரகாரமானது படிக்கும் சிறுவர்க்குக் கடைச் சோற்றையும் கைகொடுத்துக் காக்கும் நண்பர்களையும் குறைவின்றி யளிக்கின்றது. ஸ்வயம் ஸம்பாத்ய ஸாமர்த்யமற்ற சிறுவர், பெற்றாரும் உற்றோரும் ப்ரீத்யாதிக்யத்தால் கொடுக்கும் பொருள்களைக் குன்றாமல் செலவு செய்கின்றார்கள். இதற்கென்றும் அதற்கென்றும், இங்கிலீஷ் படித்தோர்க்கும் இன்னதென்று தெரியக்கூடாத வண்ணம், உபாத்யாயர்கள்மீது பாரத்தைப் போட்டுப் பொருள் உதவும் உறவினரிடம் பொருள் பல வாங்கும் சிறுவர்க்குத் தாம் செலவுகளில் ஆழ்வதுடன், ஸ்நேஹிதர்க்கும் செலவுக்கு உதவ வழியுண்டாயிருக்கின்றது. இத்தகைய பிள்ளைகளைப் பெற்றுப் பராரியாய்ப் போந்த பெற்றவரும் உளர். ஆதலால் ஸ்ரீநிவாஸனுக்கு ஆஹார நிமித்தம் வருத்தம் தோன்றியிலது. உன்மத்தன்போல் அகப்பட்டவிடங்களில் உண்டி யருந்தி, நேர்ந்த விடங்களில் நித்திரை செய்து, படிப்பைவிட்டுக் காலம் போக்கினன்.

இவ்வண்ணம் பதினெட்டு மாதங்கள் கழிந்தன. அப்போதைக்கப்போது காஞ்சீபுரம் சென்று ஸ்ரீநிவாஸன் மாதாபிதாக்

களைப் பார்ப்பான். அவரிடம் கொஞ்சம் பொருள் பெற்றுக்கொண்டு மீளவும் போய்விடுவான். அவர் சொல்லும் மதிகள் அவன் காதுகளுக்குள் செல்லமாட்டா. அக்காலங்களில் ஜநகநந்தினியைத் தூர நின்று சற்று நோக்குவன். அவளை நெருங்கவும் அவன் பயப்படுவன். முடிவில் ஒரு தை மாஸத்தில் அவன் காஞ்சீபுரம் வந்திருக்கையில், அவனுடைய பெற்றோரும், அம்மானன கேசவாசார்யரும், அவனுக்கு விசேஷமாக நல்லவார்த்தைகள் சொல்லவும், அவன் அவற்றைக் கொஞ்சம் செவியுற்றுன். அவன் இஷ்டம் விபலமாய்ப்போன ஸமீப காலத்தில் அவ்வார்த்தைகள் குணம் செய்யாமற்போனாலும், அந்த வருத்தம் காலக்ரமத்தால் சிறிது குறையவும், ஹிதவசநங்களை அவன் நின்று கேட்டனன். அவற்றின் ப்ரயோஜநம் அவ்வளவோடு முடிந்தது. அது முதல் அடுத்த வைஸாகமாஸ பர்யந்தம் அவன் பிதாவின் க்ரஹத்தில் வஸித்தான்.

மீண்டும் வைசாக உத்ஸவம் வந்தது. ஜநகநந்தினி இரண்டு வேளைகளிலும் வீதியலங்காரம் செய்தனள். அவ்வவஸர மொன்றில் தற்செயலால் ஸ்ரீநிவாஸன் ஜநகநந்தினியை நெருங்க நேர்ந்தது. அவளும் முகம திரும்பி அவனைப் பார்த்தனள். அந்தக் காட்சியை விட்டகல அவனுக்குச் சக்தியில்லை. "ஜநகம்! ஸுகமாயிருக்கின்றையோ?" என்றனன்.

"ஸ்ரீநிவாஸா! உன்னைக் காண விரும்பினேன். உனக்கு ஹிதம் சொல்ல வேண்டினேன். உனக்கு வயதாகவில்லையா! நீ படிக்கவில்லையா? உன் புத்தியை யெல்லாம் நீ காற்றில் பறக்கவிட்டையே! நீ கெடுவதுமன்றி என்னையும் வீண் வார்த்தைகளுக்கு விஷயமாக்கிவிட்டையே! எல்லோரும் என்ன வம்பளக்கின்றுர்கள்? அது உனக்குத் தெரியாதா? 'ஜநகத்தை ஸ்ரீநிவாஸன் கல்யாணம் செய்துகொள்ள இச்சித்தானும். அவள் பிதா அதற்கு ஸம்மதிக்கவில்லையாம். அதனிமித்தம் அவன் ஊரையும் நாட்டையும் படிப்பையும் விட்டுப் பராரியாய்ப் போய்விட்டானும்?' என்று உன்னையும் என்னையும் சேர்த்து ஊரார் பேசும்படி பண்ணிவிட்டையே! நீ தான் ஊரையும் உறவினரையும் விட்டுவிட்டாய். ஜனங்கள் பேசுவது உனக்குத் தெரியவில்லை. நான் பெண்ணுச்சுதே! உன்னைப்போல் ஓடிப்போக எனக்கு அடுக்குமோ? என

க்கு இந்த வார்த்தைகளைக் கேட்க வெட்கமா யிருக்கின்றதே.'' என்று சொன்னாள் ஜநகநந்தினி.

அதைக் கேட்டு ஸ்ரீநிவாஸன், "என்னை என்ன செய்யச் சொல்கின்றனை?" என்றனன்.

"நீ மாதா பிதாக்களின் அதிகாரத்தைக் கடந்தவன். ப்ராஹ்மணர்க்குள் ஸ்வயம்வரமில்லை. காமப்ரேரித விவாஹமுமில்லை. மாதா பிதாக்கள் இருக்கையில் பிள்ளைகட்கும் பெண்கட்கும் விவாஹம் அவர்கள் அதீநம். நீ பாஷாந்தரப் பழக்கத்தால் உனக்கேற்ற பெண்ணைப்பற்றி ஸ்வயமே யோசித்துவிட்டாய். நான் அவ்வண்ணம் யோசிக்க இடமில்லை. என் பிதாவின் இஷ்டம் தான் எனது இஷ்டம். ஆதலால் உன் இச்சை விபலமாயிற்று. உடனே அதை மறந்து, உனக்கு ஆகவேண்டிய கார்யங்களைப் பார்ப்பதை விட்டு, உன்மத்தனெனத் திரிந்துகொண்டு என்னையும் வார்த்தைகட்கு விஷயமாக்கி விட்டையே?" என்றனள் ஜநகம்.

"இனி அவ்வண்ணம் செய்யவில்லை. நான் யாது செய்யட்டும்?" என்றான் ஸ்ரீநிவாஸன்.

"போய்ப் பள்ளிக்கூடம் சேர். இன்னும் கற்கவேண்டிய கல்வியைக் கற்பாயாக. உனக்கு வயதும் இருபது ஆயிருக்குமன்றோ? யாதேனு மோர் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்'' என்றனள் ஜநகநந்தினி.

"நீ சொன்னபடி படிக்கப் போகின்றேன். கல்யாண வார்த்தையை எடுக்காதே" என்று சொன்னான் ஸ்ரீநிவாஸன்.

"ஸ்ரீநிவாஸா! நடுத்தெருவில் நாமிருவரும் நின்று பேசல் கூடாது. லோகரீதியை அநுஸரித்து நட. என் கிட்ட வரவேண்டாம். இதுவரையில் நாம் பேசியதைப் பலர் பார்த்திருப்பார்கள். நான் பர்த்ருமதி. உன்னையும் என்னையும் சேர ஜநங்கள் பேச இடமுண்டாயிற்று. ஆதலால் நாம் ஸமீப பந்துக்களாயிருந்தபோதிலும், ஒருவர்க்கொருவர் தூரமாகத்தான் ஸஞ்சரிக்க வேண்டும். என்னைப்பற்றின எண்ணத்தை விலக்கு. "ஶோஹி யசோ-ா_து நஃ வத்ீம் ஶஷீஜிவ ஶஷீவ௨தஃ। கூஷ-ந்௱ஷூ்ஷு ஹெகெஷு ஷூாயு-ிெ _நு_நஶாவி கூஃ॥ எனும் ஸீதாவசநத்தை என் வசநமாக

நினைத்துக்கொள்" என்று சொல்லிவிட்டு ஜநகநந்தினி உள்ளே சென்றனள்.

ஸ்ரீநிவாஸனும் அவ்விடம் விட்டு மெள்ள நடந்தான். அவன் மநஸ்ஸில் யோசனைகள் பலவாறாகப் பெருகின. "விஸ்வாஸத்துடன் ஒரு பார்வை, ஒரு சொல், ஒரு புன்னகை, இவற்றுள் ஒன்றும் கிடைக்காமல் போயிற்றே" என்று சிந்தித்தான் "ஆம். அவள் ஜ்ஞானமுள்ளவள். சீலமுள்ளவள். பெரிய வம்சத்தில் பிறந்தவள். பரமைகாந்தியின் பெண். அவள் சொன்னவண்ணம் அவள் பர்த்ருமதி. நான் நினைப்பதெல்லாம் ந்யாயவிருத்தம். அவள் எனக்கு ஹிதம்தான் சொன்னாள். பைத்யம் பிடித்தவன்போல் திரிவதில் பயனென்ன? பெற்றோரையும் வருத்துகின்றேன். இனிப் படிப்பைப்பற்றி ப்ரயத்நிக்கின்றேன்" என்று யோசித்தான்.

அன்றிரவே பிதாவைப்பார்த்து, "அப்பா! வாசிக்கவேண்டிய வித்யையின் ஶேஷத்தை வாசிக்கலாமென்று நினைக்கிறேன்" என்றனன்.

"குழந்தாய்! எனக்கு இப்போது மிகவும் ஸந்தோஷமாயிருக்கின்றது. ஏதோ நல்ல காலம் வந்ததென நினைக்கின்றேன். எப்போது பட்டணம் போகின்றாய்?" என்றனர் வரதாசார்யர்.

"பட்டணம் போகமாட்டேன். என்னுடன் வாசித்தவரெல்லாரும் மேலே போய்விட்டார்கள். அவர்கள் காண நான் கீழ் வகுப்பில் சேர்ந்து வாசிக்கமாட்டேன்" என்று சொன்னான் ஸ்ரீநிவாஸன்.

"ஆனால் என்ன யோசனை செய்கின்றாய்?" என வினவினர் பிதா.

"கும்பகோணம் போய்ப் படிக்கின்றேன். செலவுக்குக் கொடுத்தால் போகின்றேன்" என்றான் ஸ்ரீநிவாஸன்.

"உன்னிஷ்டப்படிச் செய்" என்றனர் பிதா.

இந்த வார்த்தைகள் நடந்தபின்பு ஆனி மாஸத்தில் கும்பகோணம் கலாசாலையில், பி. ஏ., பரீக்ஷைக்காக முதல் ஸம்வத்ஸரம் வகுப்பைப் போய் ஸ்ரீநிவாஸன் சேர்ந்தனன். ஒரு வருஷம் கழிந்த

பிரகு க்ராமமாக மேல் வகுப்பிலும் சேர்க்கப்பட்டனன். அவ்வகுப்பின் படிப்பை முடித்து, பி. ஏ. பரீக்ஷைக்குப் போவதாயிருக்கும் தருணத்தில் நம்முடைய கதை திருக்குடந்தையில் ஆரம்பிக்கின்றது.

ஜநகநந்தினியின் விக்ரஹம் ஸ்ரீநிவாஸன் ஹ்ருதயத்தைவிட்டு எப்போதும் அகன்றதன்று. பரதாரசிந்தனை பாபமென்பர். நீடித்து விரும்பிய பொருள் கிட்டாமற் போனாலும் அதன் ஸ்மரணை மாத்ரம் நீடித்து நிற்பது லோகத்தில் ஸஹஜம். ஸ்ரீநிவாஸனுடைய சித்தவ்ருத்தியில் பாபஸம்பந்தம் ஈஷத்தும் இல்லை. ஜநகநந்தினியின் சீலமும் குணங்களும் எத்தகைய மனிதர் மனத்திலும் அஸாதுவாசனைகளை விலக்கிவிடும். மேலும் ஸ்ரீநிவாஸன் அவளை ஓர் தேவதையைப்போல் பாவித்தனன். ஆதலால் அவளால் தனக்கு ஒரு ப்ரயோஜனத்தையும் அபேக்ஷிக்காமல், அவளுடைய ஸௌக்யத்தையே முக்யமாகக் கருதி, அப்படிப்பட்ட ஸௌக்யம் அவளுக்கு வாராமல் போய்விடுமோ என்று பயந்தான். அவள் சொல்லாவிட்டால் அவன் படிப்பில் இறங்கியிரான். ஆதலால் அவன் படிக்கும்போதும் அவள் நினைவை விலக்கத் திறனற்று நின்றான்.

பல ஸமயங்களில், அவன் முன்கொண்டிருந்த சித்தகாலுஷ்யம் அவனைப் பாதித்துக்கொண்டிருந்தது. அப்படிப்பட்ட ஓர் ஸமயத்தில் அவன் வஸித்துக்கொண்டிருந்த கலாசாலைக் கருகில் கட்டப்பட்டிருந்த வித்யார்த்திகள் க்ரஹத்தை விட்டுச் சுற்றிலும் பரவிய தோட்டத்தில் ஸஞ்சரித்தான். ஸஞ்சரித்துக்கொண்டே நீரற்றுச் சென்ற காவிரி நதிக்குள் இறங்கினான். அதன் தென்கரையில் பாதை மீதேறினான். அப்பாதை வழியே மேற்கே சென்று சங்கரமடத் தெருவே தென்புறம் நோக்கி நடந்தான். அங்கே போர்ட்டர் மண்டபத்துக்குள் சென்று, கும்பகோணம் பெரிய மனிதர்கள் பந்தாடவும், சீட்டாடவும், பேசவும், சிரிக்கவும், ஸோடாஜலம் குடிக்கவும், சிற்றுணவுகள் உண்ணவும் கண்டு, இவர்கள் சரீரம் இதற்காகத்தான் எடுத்தனரோ என்று எண்ணிக்கொண்டு, 'நீரிற் குமிழி யிளமை நிறை செல்வம் நீரிற்சுருட்டு நெடுந்திரைகள்—நீரில் எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே, வழுத்தாத தெம்பிரான் மன்று" எனும் செய்யுளைச் சிந்தித்தான். தான் பட்டணத்தில் படிக்கையில், தானும் அவ்வண்ண

மிருந்ததையும், தன் நண்பர்கள் "நாளைச் சாவோம் ஆகலால், இன்று உண்போம், குடிப்போம், விளையாடுவோம்" என்று சொல்வதையும் நினைத்தான். தனது புத்தியின் விகாரத்தை, அதற்கென்று ஒரு ப்ரயத்னமும் செய்யாது, ஜநகநந்தினி எவ்வளவு மாற்றிவிட்டாளென்றும் யோசித்தான்.

ஆகலால் போர்ட்டர் ஹால் காட்சியில் வெறுப்படைந்து வெளியே வீதியில் வந்தான். ஆராவமுதன் கோவில்கோபுரத்தைக் கண்டான். ஸாதாரணமாக ஸ்ரீநிவாஸன் பகவானுடைய ஸந்நிதிக்குப் போவதில்லை. பகவானிடம் அவனுக்குப் பக்தி விளைந்ததெனக் கூறவும் இடமில்லை. நள்ளிரவில் கடலில் வழிதப்பி அலையும் நாவாய் ஓட்டுபவனுக்கு ஓர் வெளிச்சம் கண்பட்டால, அதை நோக்கி அவஸரமாய் அவன் செல்வதையொத்துச் சாரங்கதான கோபுரம் காணும் திக்கை நோக்கி நடந்தான். ஸந்நிதிக்குள்ளே சென்றான்.

அப்போது ஸூர்யன் அஸ்தமிக்கும் வேளை. த்வஜஸ்தம்பத்தினருகே ஒரு ஸந்யாஸி ஸேவிக்கவும், அவரைச் சுற்றிப் பல ஸ்ரீ வைஷ்ணவர்கள் நிற்கவும் கண்டான். அப்போது அவனுக்கு மறந்துபோன ஒரு விஷயம் ஜ்ஞாபகத்துக்கு வந்தது. அவன் பெருமாள்கோவிலில இருக்கையில், ஜநகநந்தினியினுடைய பர்த்தா திருக்குடந்தைக் கருணையில் ஒரு ஸ்வாமி ஸந்நிதியில் காலக்ஷேபம் செய்வதாகக் கேள்விப்பட்டனன். அந்த ஸ்வாமி தான் கண்ட ஸந்யாஸி தானோ, அவருடைய பரிவாரத்தில் ஜநகத்தின் புருஷன் இருக்கின்றனரோ என்று ஸ்ரீநிவாஸன் யோசித்தனன்.

தத்காலம் இங்கிலீஷ் வித்யாசாலையில் கற்பவர்க்கு வேஷங்கள் விடம்விதமாக ஏற்பட்டிருக்கின்றன. கத்திரித்த தலைமயிர், முகக்ஷௌரம், பாழ்நெற்றி, நெருக்கமான சட்டை, கழுத்தில் நெக்டை, அஜகளம்போல் அங்கே தொங்கும் துணிகள், காலில் நிஜார், இடுப்பில் சர்மபந்தநம், இத்தகைய வேஷம் நாகரிகத்தில் சிறந்த தென்பார். இதற்குக் குறைந்தபடிகள் பல, முடிவான படியாவது, கீழ்க்கால் மறையத் துணியை மடித்துக் கட்டல், உடலை மறைக்க ஓர் சட்டையோ சிறு துணியோ, தலையில் ஓர்

சிறு குடுமி, நீர்த்திருமண், இவ்வளவுடன் நிற்கும். ஸ்ரீநிவாஸன் கச்சிநகரில் பிறந்தவனானதாலும், தத்காலம் கும்பகோணத்தில் வஸிப்பதாலும், ஜநத்தை மயக்காத காரணத்தாலும், நாகரித்தில் கடைப்படியிலே உடை தரித்தனன். ஆனாலும் ஒரு ஸ்ரீவைஷ்ணவ ஸந்யாஸியையும், அவருடனே சென்ற வைதிக ஸ்ரீவைஷ்ணவர்களையும் நெருங்க அஞ்சினான்.

இதற்குள் அந்த ஸ்வாமியும் அவருடைய அந்தேவாஸிகளும் ஸந்த்யாவந்தநாதி ஆஜ்ஞா கைங்கர்யங்களை நிறைவேற்றுவதற்காக ஹேமாப்ஜ புஷ்கரிணிக்குச் சென்றார்கள். அங்கே அவர்கள் போய்ச் சேரும்வரையில் ஸ்ரீநிவாஸனும் அவர்கள் பின் ஸந்நிதி ப்ரதக்ஷிணமாய்ச் சென்றான். அவர்கள் புஷ்கரிணியி லிறங்கவும், தானும் மற்றோர் புறமாகக் குளத்தி லிறங்கி ஸந்த்யாவந்தநம் செய்வதாகப் பாவனை செய்தான். அவர்கள் ஸந்நிதிக்குள் மீண்டும் புகவும், அவனும் அவர் பின்னால் புக்கு, ஸந்நிதி ப்ரதக்ஷிணமாய்ச் சென்றான். அவர்கள் பெருமாள் தாயார் ஸந்நிதிகளிலே போய் ஸேவிக்கும் காலங்களில் தானும் தூர நின்று திவ்ய தம்பதிகளைத் தர்ஸித்தான். அவர்களைப் பின்தொடர்ந்து ஸந்நிதியை விட்டான்.

கோபுர த்வாரத்தில் பல ஸ்ரீவைஷ்ணவர்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருவரை நெருங்கி, "ஸ்வாமிந்! அந்த யதி யார்? எங்கே எழுந்தருளியிருக்கின்றார்?" என்றனன்.

"அவர் ரங்கநாத ஸ்வாமி; உப்பிலியப்பன் கோவிலில் இருக்கின்றார்" என்று அந்த வைஷ்ணவர் சொன்னார்.

"அந்த ஸ்வாமியுடன் செல்கின்றவர்கள் யாவர்?" என்று ஸ்ரீநிவாஸன் கேட்டான்.

"அவர்கள் யாரோ? ஏன் காணும்! உமக்கு வேலை ஒன்றுமில்லையா?" என்று அந்த ஸ்ரீவைஷ்ணவர் சொன்னார்.

ஸ்ரீநிவாஸனுக்கு முகம் சுஷ்கித்தது. ஆனால் கோபங்கொண்டானில்லை. நேரம் வெளுத்ததினால், தன் கலாசாலைக்குப் போகப் புறப்பட்டான். போகும் வழியில் தன் ஸதீர்த்யரான ஆதிவராஹாசார்யரை ஸந்தித்தான். அவரும் ஸ்ரீநிவாஸனைப் பாதரவுடன்,

ஏது ஸ்ரீநிவாஸா! இந்தப் பக்கம் வந்துவிட்டாய். ஊரில் அண்ணா அம்மா ஸௌக்யமாக இருக்கின்றார்களா?" என்று கேட்டனர்.

"ஆதிவராஹாசார்யா! பெருமாள் கோவிலிலே எல்லாரும் க்ஷேமந்தான். நேற்றுகூட அண்ணா கடுதாசி எழுதியிருக்கிறார். ஏதோ இப்படி வந்தேன். பெருமாளை ஸேவிக்கலாமென்று தோன்றிற்று. கோவிலுக்குப் போனேன். அங்கே யாரோ ஒரு ஸ்வாமி எழுந்தருளினர். அவருடன் பல ஸ்ரீ வைஷ்ணவர்கள் வந்தார்கள்" என்று ஸ்ரீநிவாஸன் சொல்ல,

"அவர் ரங்கநாத ஸ்வாமியாய்த் தானிருக்க வேண்டும்" என்றனர் ஆதிவராஹாசார்யர்.

"அப்படித்தான் அங்கொரு ஸ்ரீ வைஷ்ணவர் சொன்னார். இன்னும் அந்த ஸ்வாமி உப்பிலியப்பன ஸந்நிதியில் எழுந்தருளியிருப்பதாகவும் சொன்னார்" என்று சொன்னான் ஸ்ரீநிவாஸன்

"ஆம், ஆம். அந்த ஸ்வாமிதான்" என்றார் ஆதிவராஹம்.

"என் மாமா கேசவாசார்யர் மாப்பிள்ளை அந்த ஸ்வாமி ஸந்நிதியில் காலக்ஷேபம் செய்கிறாரா?" என்று கேட்டான் ஸ்ரீநிவாஸன்.

"ஆர்? நாவல்பாக்கம் ராமாநுஜாசார்யர் குமாரா? அவர் அங்கேதான் காலக்ஷேபம் செய்கிறார். எனக்கு ஸந்நிதியில் கொஞ்சம் காரியமிருக்கிறது. நீ ஏனப்பா அடிக்கடி இந்தப் பக்கம் வருகிறதில்லை? உன்னோடு வார்த்தை சொல்லவேணும். வருகிறையா? எனக்கு அவஸரமாய்ப் போகவேணும்" என்று சொல்லிக்கொண்டே ஆதிவராஹாசார்யர் போய்விட்டார். ஸ்ரீநிவாஸனும் தன்னிடம் போய்ச் சேர்ந்தனன்.

## பத்தாவது அதிகாரம்.

ஜநகநந்தினியின் புருஷனைப் பார்க்கவேண்டுமெனும் இச்சை ஸ்ரீநிவாஸன் உள்ளத்தில் குடிகொண்டது. அந்தப்படிக் காணக்கூடுமென்று யோசித்தனன். உப்பிலியப்பன் கோவிலுக்குப் போனால் ரங்கநாத யதியையும், அவர் பரிவாரத்தையும் பார்க்கலாம். பக்கத்திலே யாரையாவது கேட்டால் பார்க்க விரும்பியவனைக் காட்டுவார்கள். ஆனால் அப்படிப் போய்ப் பார்த்து வர ஸ்ரீநிவாஸன் இசைந்தானில்லை. முதலில் அவன் ஆசாமத்தியனுகப் போய் வர

வேண்டும். அவனுடைய அவைதிகத் தோற்றம், வைதிகர் நடுவே பரிஹஸிக்கப்படலாம். இன்னும் ஜநகநந்தினி புருஷன் அவனையும், அவன் வந்தவாறையும், அவன் அபிப்ராயத்தையும் அறிந்தாராகில் அப்பரிஹாஸம் வ்ருத்தியாவதற்கு இடம் தரும். ஆதலால் உப்பிலியப்பன் கோவிலுக்கு இதம்பரமாகப் போகும் எண்ணத்தை விட்டொழிந்தான். இப்படி யோசனை செய்துகொண்டு, சிலநாள் கழித்த பிறகு, ஒரு சனிக்கிழமை மத்யாஹ்ந வேளையில் ஆதிவராஹாசார்யர் க்ருஹத்தை நோக்கி நடந்தான். அந்த வீட்டை அவன் நெருங்கவும், வீதித் திண்ணைமீது உட்கார்ந்து வெற்றிலை பாக்கு மென்றுகொண்டிருந்த ஆதிவராஹாசார்யர் அவனைப் பார்த்தவுடன், "ஸ்ரீநிவாஸா! வா. உன்னைப் பார்த்து வார்த்தை சொல்லவேண்டுமென்று அன்றைக்குச் சொன்னேனே. தெய்வாதீனமாய் வந்துவிட்டையே. ஸந்தோஷம். உட்கார்." என்றனர்.

ஸ்ரீநிவாஸனும் வீதித்திண்ணைமீது உட்கார்ந்தனன். "ஏனப்பா? நீ இங்கு வந்திருக்கிறதாகப் பல நாளாய்க் கேள்விப்படுகிறேன். இந்தப் பக்கமே வருகின்றாயில்லை. ஸ்வஜநங்களைப் பார்ப்பதில் உனக்கு வெறுப்பா?" என்று சொன்னார் ஆதிவராஹாசார்யர்.

"அப்படிக்கு ஒன்றுமில்லை. கலாசாலையின் அருகில் எங்களுக்கு வாஸஸ்தாநமும் அமைக்கப்பட்டிருக்கின்றது. விடுமுறை நாள்கள் தவிர, மற்றை நாள்களில், அந்தத் தோட்டத்தை விட்டு வருவது ஸாத்யமாயினும், புஸ்தக நிரீக்ஷணத்திற்கு அந்நாள்கள்தான் அவகாசம் தருகின்றன. ஆதலால் ப்ராயேண எங்களுக்கு வெளியில் ஸஞ்சரிக்க இடமில்லை" என்று சொன்னான் ஸ்ரீநிவாஸன்.

"சென்னைப்பட்டணத்தில் உனக்குப் படிக்கச் சரிப்படாதா? திருக்குடந்தைக்கு ஏன் வந்தாய்?" என்றனர் ஆதிவராஹாசார்யர்.

"என்னமோ வந்துவிட்டேன். படிப்பில் பின்னடைந்தேன், கூடவாசித்தவர்கள் மேல் வகுப்புகளுக்கு ஏறவும், அவர் முன்னிலையில் கீழே இருக்க வெட்கப்பட்டு இவ்விடம் வந்துவிட்டேன்" என்றான் ஸ்ரீநிவாஸன்.

"உனக்குக் கலாசாலை வஸதியில் ஆஹாராதிகள் ஸௌக்யமா யிருக்கின்றனவா?" என்றார் ஆதிவராஹாசார்யர்.

"நாம் விரும்பியபடி ஸௌக்யம் கிடைக்குமோ? கிடைத்ததைத்தான் பெரிதா யெண்ணவேண்டும்" என்றான் ஸ்ரீநிவாஸன்.

"ஸ்ரீநிவாஸா! கொஞ்சம் பலாஹாரம் பண்ணுகிறையா? கோவிலிலிருந்து பெருமாள் ப்ரஸாதம் வந்திருக்கிறது. எழுந்திரு, உள்ளே போவோம்" என்றுகொண்டு ஆதிவராஹாசார்யர் எழுந்திருந்தார். ஒன்றும் வேண்டாம் என்றும், பசியில்லையென்றும், ஸ்ரீநிவாஸன் சொல்லியும் கேட்காமல், அவனை உள்ளே அழைத்துக்கொண்டுபோய்க் கை கால் சுத்திசெய்ய ஜலம் கொடுத்து, ஒரு மணை போட்டு, அதன்மீது ஸ்ரீநிவாஸனை உட்காரவைத்தார். ஸ்ரீநிவாஸனும் அவர்கொடுத்த பகவத் ப்ரஸாதம் ஸ்வாதுதமமாக இருக்க த்ருப்தியுடன் புசித்தனன்.

"ஸ்ரீநிவாஸா! நீ அடிக்கடி இந்தப் பக்கம் வா. இதோ பெருமாள் சித்ரோத்ஸவம் கண்டருளப் போகின்றார். நீ ஏன் ப்ரதிதினமும் வந்து பெருமாளை இரண்டு வேளையும் ஸேவிக்கக்கூடாது? காவிரிக்கு அக்கரையினின்று வருவது கஷ்டமாயிருந்தால், நம்முடைய க்ரஹத்திலேயே உத்ஸவம் பத்து நாளும் இருந்துவிடலாமே. கலாசாலை உனக்கு மூடப்பட்டு இருக்கின்றனதன்றோ?" என்று சொன்னார் ஆதிவராஹாசார்யர்.

"கலாசாலை மூடித்தான் கிடக்கின்றது. ஆனால் பரீக்ஷை ஸமீபித்துவிட்டது. இது க்ரந்தங்களைச் சிந்திக்கவேண்டிய ஸமயம். உத்ஸவவிபவத்தை அநுபவித்துக்கொண்டிருந்தேனாகில், கும்பகோணவாஸம் எனக்கு வ்யர்த்தமாய்ப் போய்விடும்" என்றான் ஸ்ரீநிவாஸன்.

"ஆனால் நீ ப்ரதிதினமும் வரவேண்டாம். நாலாம் திருநாள் ராத்ரி கருடோத்ஸவம். அது மிகவும் விபவமாய் நடக்கும். அதற்கும், பெருமாள் ரதாரோஹணத்துக்கு எழுந்தருளும்போதும், ஒரு ரதோத்ஸவத்துக்கும் வந்தாயானால் போதும்" என்றார் ஆதிவராஹாசார்யர்.

"ஸௌகர்யப்பட்டால் வருகின்றேன். அந்த உத்ஸவத்துக்கு ரங்கநாதஸ்வாமி எழுந்தருளுவரோ?" என்றான் ஸ்ரீநிவாஸன்.

"அவரைப்பற்றி உனக்கென்ன? ஸ்வாமியைத் தண்டன் ஸமர்ப்பிக்கப் போகின்றையோ? ஓஹோ! உன் அம்மான் மாப்பிள்ளையைப் பார்க்கவேண்டுமோ? ஆம் அன்றைக்கே நீகேட்டாயன்றோ? அந்த ஸ்வாமி ஸந்நிதியில் அவர் காலக்ஷேபம் செய்கின்றாரோ என்று கேட்டாய்." என்றார் ஆதிவராஹாசார்யர்.

"அவரைப் பார்க்கக் கொஞ்சம் இச்சை யுண்டு" என்றனன் ஸ்ரீநிவாஸன்.

"ஆனால், தேருக்குப் பெருமாள் மத்யாஹ்நம் எழுந்தருளுவர். அப்போது ஸ்வாமியும் வருவர். நாவல்பாக்கம் பிள்ளையும் தென்படுவர். நீ அவஶ்யம் வரவேண்டும்? என்று சொன்னார் ஆதிவராஹாசார்யர்.

இவ்விதமாகச் சிறிது காலம் ஸம்பாஷிக்கபிறகு ஸ்ரீநிவாஸன் எழுந்திருந்து ஸ்வஸ்தானத்துக்குச் சென்றனன். திருத்தேர் உத்ஸவம் முதல்நாள் வரவேண்டுமெனும் நிஶ்சயத்துடன் சென்றனன். கூடியானால் இதர உத்ஸவங்களையும் காண விரும்பினான்.

உத்ஸவ மத்யே ஒருநாள் காலையில் ஸ்ரீநிவாஸன் ஸ்நாநாதிகளை முடித்துக்கொண்டு, ஆதிவராஹாசார்யர் க்ருஹத்துக்கு வந்தான். அப்போது அவர் வீட்டில் இல்லை. வீட்டில் பெண்டுகள் அவர் ஸந்நிதிக்குச் சென்றதாகச் சொன்னார்கள். ஸ்ரீநிவாஸனும் ஸந்நிதிக்குப் போனான். கோபுர த்வாரத்தை நெருங்கும் தருணத்தில் பகவான் திருவீதி யலங்கரிக்க எழுந்தருளிவிட்டார். கொஞ்சம் தூரத்தில் நின்றே அவனுடைய ஸுந்தர விக்ரஹத்தை ஸ்ரீநிவாஸன் தர்ஶித்தான். பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹங்களில் முன் விஶ்வாஸமற்று வளர்ந்தவனுக்கு, ஜநகநந்தினியின் யோசனைகளில் கௌரவமுண்டாகிப் பகவத் விக்ரஹத்தை நின்று ஸேவிக்க ஆபிமுக்யமும் உண்டாயது. அந்த அவஸரத்தில் பரார்ங்கதரான் தர்ஶநம் ஸ்ரீநிவாஸனுக்கு ப்ராப்தமானது அவன் ப்ராசீந ஸுக்ருத பலமாய் ஸர்வவித ஈஶ்வரனுடைய ஸௌஹார்த்தமன்றோ? ஆபிமுக்யம் இல்லாமல் குடக்

தையிலும் பலர்க்கு ஆராவமுதன் அழியாவமுதம் அநாகர்ஷக மாய்ப் போகின்றது. ஆனால் ஸ்ரீநிவாஸன் விஷயத்தில், ஸத்ஸங்கம் ஸகல ஸ்ரேயஸ்ஸையும் தரவல்லதாயிற்று. பகவானைத் தர்சித்துக்கொண்டு ஓர் புறமாய் அவன் நிற்கவும், பகவான் எழுந்தருளிவிட்டார். பின்னால் ஸ்ரீ வைஷ்ணவர்கள் வேதபாராயணம் செய்துகொண்டு வந்தனர். அவர்கள் ஸமீபத்தில் வந்த ஆதிவராஹாசார்யரும் ஸ்ரீநிவாஸனைப் பார்த்தவுடன், அவனிடம் சென்று அவன் கையைப் பற்றினார். "ஸ்ரீநிவாஸா! வந்தையா? மிகவும் ஸந்தோஷம். பெருமாளை ஸேவித்தையா? இந்த ஸேவை எங்கு கிடைக்கும்? வாதனை ஸேவித்தவர்கள், பிறகு இந்தப் பெருமாளை ஸேவித்துத் தான் த்ருப்தராவார்? என்று சொன்னார்.

பின்பு இருவரும் வேத கோஷ்டியின் முன்னும் பின்னுமாக அநுயாத்ரையாய்ச் சொல்லுகையில், ஸ்ரீநிவாஸன் நாற்புறமும் சுற்றிப் பார்த்தனன் "என்ன பார்க்கின்றாய்? ரங்கநாத ஸ்வாமியையும் அவர் அந்தேவாஸிகளையும் தேடுகின்றையோ? ஸ்வாமி எழுந்தருளக்காணோம் ஒரு வேளை எழுந்தருளலாம். இல்லாவிட்டால், நாளைய தினம் மத்யாஹ்நம் திருத்தேரின் மீது ஆராவமுதன் எழுந்தருள லக்நம் வைத்திருக்கின்றது; அப்போது ஸ்வாமியை நிஜமாய்த் தர்சிக்கலாம்" என்று ஆதிவராஹாசார்யர் சொன்னார்.

இதற்குள், பகவான் கீழ்வீதியைக் கடந்து தென்னண்டை வீதியில் ஸஞ்சரித்தனர். "ஆதிவராஹாசார்யா! என்ன இந்த ஸ்வாமிகள் வேதாக்ஷரங்களை வெளிவிடாமல் உச்சாரணம் செய்கின்றனரே. பெருமாள்கோவிலில் வேத பாராயணம் கம்பீரமாய் நடக்குமே" என்று ஸ்ரீநிவாசன் சொன்னான்.

"இப்படித்தான் இந்த ஊர் வழக்கம். நம்முடைய தேசத்தாரைப்போல் கஷ்டப்பட்டுப் பாராயணம் செய்யமாட்டார்கள். இன்னும் இந்தவேடிக்கையைப்பார்த்தையா? இதோ இந்த வீதிக்குள் பெருமாள் திரும்புங்கால், அய்யங்கார் வீதி ஸ்வாமிகள் வந்து பெருமாளை ஸேவித்துவிட்டு யாவரும் அப்படியே திரும்பிப் போய்விட்டார்கள். ஸ்ரீ வைஷ்ணவர்கள் நம்முடைய தேசத்தில் போல் பெருமாளுடன் அநுயாத்ரையாகத் தொடர்வது இங்கு

கிடையாது. இன்னும் ஸ்ரீராமன் ஸந்நிதியினிடம் பார். அய்யங்கார் வீதி மேலண்டை பாகத்தில் வஸிப்பவர் அவ்விடம் பகவானைத் தர்சித்துவிட்டுப் போய்விடுவார்கள். அப்படித்தான் பாட்ராசார் வீதி ஸ்வாமிகளும். பெரிய தெருவிலும் அவ்வவர் அகங்களின் வாசலில் நின்று தான் பகவத்தர்ஸநம் செய்வார்கள். இது இந்த ஊர் வழக்கம்'' என்று சொன்னார் ஆதிவராஹாசார்யர்.

“ஆமாம்; பெருமாளுடன் செல்லும் ஸ்ரீவைஷ்ணவர்கள் மிதமாகக் காண்கின்றனர். நான் புறப்பட்டுப் போகின்றேன். நாளை மத்யாஹ்நம் ஸந்நிதிக்கு வருகின்றேன். இன்னும் ஒரு வாரத்துக்குள் பரீக்ஷை ஆரம்பிக்கின்றது. எனக்கு இந்தப் புறம் வருவதற்கு அவகாசம் குறைவு'' என்று சொல்லிவிட்டு ஸ்ரீநிவாசன் நடந்தான். திருக்குடந்தை வழக்கப்படி ஆராவமுதன் வீதிகளில் உத்ஸவம் கண்டருளி ஸந்நிதிக்குள் சென்றனர்.

மறுநாள் மத்யாஹ்நம் பகவான் ஸந்நிதியினின்று புறப்பாடாகி ரதாரோஹணத்துக்கு எழுந்தருளுங்கால், ஸேவார்த்திகள் விசேஷமாகக் கூடினார்கள். ஶங்கம், சக்ரம், கதா, ஶார்ங்கம் முதலான திவ்யாயுதங்களும், ஹார, கேயூர, கிரீட, குண்டலாதி திவ்ய பூஷணங்களும், ஸூர்யனுடைய தேஜஸ்ஸைக் குன்றச்செய்யவும் சிரித்த பங்கயத்தைபோன்ற திருமுகத்தின் சீர்மை ஸேவார்த்திகள் த்ருஷ்டி சித்தங்களை அபஹரிக்கவும், சத்ரு ஸம்ஹாரார்த்தமாக முன்மாதலியால் ப்ரார்த்திக்கப்பட்டு இந்த்ரரதமேறிய வண்ணம் ஆழ்வார் மங்களாசாஸநம் பண்ணின திவ்யரதமேற வெழுந்தருளும் ஶரண்யனைக்கண்ட கண்கள் மற்றொன்றைக் காண உடன்படுமோ? இந்தத் தர்ஸநம் ஸ்ரீநிவாஸனுக்குக் கிடைத்தது. பகவத் கடாக்ஷம் அவனுக்குண்டாக வேண்டிய காலம் நெருங்கினபடியால் முன் திவ்யமங்கள ரூபியாக விளங்கிய எம்பெருமானிடம் அவனுக்கு உண்டாயிருந்த த்வேஷம் விலகி, அவனைத் தர்ஸிக்க ஆபிமுக்யம் ஜநித்தது. பெருமாளை நிலைத்து நின்று ஸேவித்துக் கொண்டிருக்கையில், தான் அவ்விடம் வந்த காரணத்தையும் மறந்து விட்டான். அத்தருணத்தில் ஆதிவராஹாசார்யர் அவனைக் கூப்பிடவே அந்யசிந்தை அவனுள்ளத்தில் புகுந்தது.

“என்ன ஸ்ரீநிவாஸா! பெருமாளை மிகுந்த பக்தியுடன் ஸேவிக்கின்றையே, ஶார்ங்கபாணி உன்னை வசப்படுத்தி விட்டா

ரோ? நான் உன்னைக் கூப்பிடுமட்டும் என்னைப் பார்த்தாயில்லையே!" என்று ஆதிவராஹாசார்யர் சொன்னார்.

"ஆம்! பகவத்ஸேவை மிகவும் ஆகர்ஷகமாகயிருக்கிறது. உப்பிலியப்பன் கோவிலிலிருந்து ஸ்வாமி எழுந்தருளி இருக்கின்றாரோ?" என்று ஸ்ரீநிவாஸன் கேட்டான்.

"ஸபரிவாரமாக எழுந்தருளி இருக்கின்றார். பெருமாள் எழுந்தருளும் பர்யந்தம் இவ்விடம் நிற்போம். பின்னால் அந்த ஸ்வாமி ஸேவை ஸாதிப்பர்" என்று ஆதிவராஹாசார்யர் சொன்னார். அவ்வண்ணமே இருவரும் அவ்விடம் நின்றார்கள். பின்னால் பதியும் அவர் சிஷ்யர்களும் வந்தனர். "அதோ பார்த்தையோ! ஸ்வர்ணச்சாயையுடன் மஹா தேஜஸ்வியாய்க் காஞ்சீபுரம் தேகுரன்ஸு வேஷ்டியைத் தரித்துக்கொண்டு, இருபத்தைந்து இருபத்தாறு வயஸ்ஸுள்ளவரெனத் தெரிகின்றாரே! அவர்தான் உன்மாதுலன் மாப்பிள்ளை. கல்யாணத்தில் நீ அவரைப் பார்க்கவில்லையோ? இதுவரையில் நீ அவரைக் கண்டதில்லையோ!" என்றார் ஆதிவராஹாசார்யர்.

"கல்யாண காலத்தில் நான் இல்லை. இப்போது தான் நான் அவரைப் பார்க்கிறேன்" என்றான் ஸ்ரீநிவாஸன்.

"வா; உங்களுக்குள் பரிசயம் செய்து வைக்கிறேன்" என்று கொண்டு ஆதிவராஹாசார்யர் ஸ்ரீநிவாஸன் கையைப்பற்றி இழுக்கவும், "வேண்டாம்; எனக்கு லஜ்ஜையாயிருக்கிறது. இப்போது அவருடைய தூரதர்சனம் போதும்" என்று சொல்லிக்கொண்டு ஸ்ரீநிவாஸன் தன்னிடத்தில் தானே நின்றான்.

"எனக்கும் அவருடைய பரிசயம் மிதந்தான். அவருக்கு மிதபாஷியென்றும், ஸதா க்ரந்தாவலோகனம் செய்பவரென்றும் க்யாதி உண்டாயிருக்கின்றது. கூட காலக்ஷேபம் செய்கின்றவர்களுடனும் அவர் ஸ்நேஹ பாவத்தை வ்ருத்தி செய்வதில்லையாம்" என்று சொன்னார் ஆதிவராஹாசார்யர்.

"ஆனால் நாம் அவரை நெருங்குவது உசிதமன்று. என் வேஷத்தை அவர் பார்த்தாராகில என்னுடன் அவர் ஸம்பாஷிப்பதே துர்லபம்" என்று சொல்லிக்கொண்டு ஸ்ரீநிவாஸன் ஆதிவராசார்யு

ருடன், அலங்க்ருதமான சித்திரைத்தேர் முன்பாகப்போய் நின்ருன். யதியும் சிஷ்யர்களுடன் அப்புறமே நின்று ரதஸ்தனை கேசவனைத் தர்சநம் செய்துகொண்டிருந்தார். தேர் வடங்களின் கீழ்புறமாக அவரும் அவர் சிஷ்யர்களும் நின்றுகொண்டிருக்க, அவரை நன்ருகப் பார்க்க வெண்ணி ஸ்ரீநிவாஸன் டெங்களைத் தாண்டப்போகவே, ஆதிவராஹாசார்யர் ஸ்ரீநிவாஸனை இழுத்துக் கொண்டார்.

"ஏன் இழுக்கின்றீர்? அந்தப்பக்கம் இன்னும் ஸுகமாய் இருக்குமே" என்ருன் ஸ்ரீநிவாஸன்.

"ஸுகமாய்த்தான் இருக்கும். வடங்களைத்தாண்டக்கூடாது" என்றனர் ஆதிவராஹாசார்யர்.

"ஏன்தாண்டக்கூடாது? இதோ பாரும்; எத்தனை பெயர் தாண்டிச் செல்கின்றனர்." என்ருன் ஸ்ரீநிவாஸன்.

"பெருமாள் ரதத்தின் மீது எழுந்தருளுமுன்னும் தாண்டக் கூடாது. ஸ்வாமி எழுந்தருளின பிறகு ரதம் பகவானுடைய திருமேனியெனப் பாவிக்கத்தக்கது. பெரியவர்கள் வடங்களைத்தாண்டமாட்டார்" என்றனர் ஆதிவராஹாசார்யர்.

"அப்படியா? இதோ த்வாதச ஊர்த்வ புண்ட்ரங்களுடன் கூட ஸ்வாமிகள் தாண்டிப் போகின்ருர்களே" என்ருன் ஸ்ரீநிவாஸன்.

"அவர்கட்குத் தெரியாது. நாம் வடங்களைத் தாண்டப்படாது" என்ருர் ஆதிவராஹாசார்யர்.

இவ்விதமாக ஸம்பாஷித்துக் கொண்டிருக்கையில், ரதத்தை இழுப்பதற்கு யாதொரு ப்ரயத்நத்தையும் காணுமல், ஸ்ரீநிவாஸன் ஆதிவராஹாசார்யரை அதைப்பற்றிக் கேட்டான். அவரும் அன்று ஆள்கள் கூடவில்லையென்றும், ரதம்இழுப்பது துஸ்ஸாத்யமென்றும் சொல்லவே, ஸ்ரீநிவாஸன் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு தன்னிருப்பிடம் போகப் புறப்பட்டான்.

போகும் வழியில் பாதையை நோக்கினுனில்லை. பக்கங்களில் உயர்ந்த வீடுகளையும் பார்த்தானில்லை. எதிராக நடந்த ஜனங்களையுங் கண்டானில்லை. கால்கள் அப்பாஸத்தால் அவன் வஸதிக்கு

அவனைக்கொண்டுபோயின. மநஸ்ஸானது அந்ய சிந்தையில் ஆழ்ந்துவிடவே, அவனது கரணங்கள் விஷயங்களை அந்த மநஸ்ஸுடன் ஸம்பந்தப்படுத்தவில்லை. ஜநகநந்தினியைப்பற்றிப் பூர்வ யோசனைகளை த்யாகம் செய்தானாயினும், அவளிடம் அவன் முன் கொண்ட ஸகாரண விஸ்வாஸம் அகாரண விஸ்வாஸமாக மாறி நிலைத்து நின்றது. "அவள் வைதிக ஸார்வபௌமனுடையபெண். விசேஷமாகத் தத்வ நிரூபணம் செய்தவள். ஸதாசாரத்துடன் கூடினவள். அவளுக்கு யான் எவ்வண்ணம் அநுரூபமான பர்த்தா ஆவேன்? அவள் பர்த்தாவின் விலக்ஷணமான ப்ரஹ்ம தேஜஸ்ஸையும், அவர் முகத்தில் ப்ரகாசிக்கும் அவரது ப்ரஹ்மவித்தமத்வத்தையும் இன்று கண்டேன். அவரன்றோ அவளுக்கு அர்ஹர். அவளன்றோ அவருக்குத் தகுந்த பத்நீ. நானோ தத்வஜ்ஞாநவாஸனை அற்றவன். அநவரதம் அநார்ய ஸம்ஸர்கத்தில் மூழ்கிப்போனவன். அநாசாரங்கட்கெல்லாம் ஏகாஸ்ரயமாயிருக்கப்பட்டவன். எனக்கு அவள் பத்நீயாகாமல் தப்பித்துக்கொண்டனளே. அது அவளுடைய ஸுக்ருதவிசேஷம். ஆனாலும் அவளுடைய ஸ்மரணமொன்றே எனக்கு உத்தாரகமாக வேணடும். என் படிப்பு என்னை ஸத்வர்த்மாவில் செல்ல வொட்டாது. வ்ருத்திக்கென்று மாதாபிதாக்கள் என்னை இவ்வழியில் விட்டனர். இன்றியமையாத அஸத் ஸம்ஸர்ககம் என் புத்தியைக் கெடுத்து விட்டது. என் ஶரீரசுகம் தான் எனக்குப் பெரிதாகி நின்றது. சரீராவஸாநத்தில் அநுவர்த்திப்பதோர் ஜீவதத்வத்தை மறந்தேன். காமப்ரேரிதனாய் ஜநகநந்தினியை இச்சித்தேன். அவளிடம் நான் கொணட காமம் காமத்தின் பொருட்டு பயன்படவில்லை. அது காமத்தைக் கொன்றுவிட்டது. எனக்கு அவள் யாதொரு உபதேசம் செய்தாளில்லையானாலும், ஸந்மார்க்கதர்சியாய் விட்டாள்" என்றிவ்வண்ணம் யோசித்துக்கொண்டு ஸ்ரீநிவாஸன் தன்னிருப்பிடம் சேர்ந்தான்.

## பதினோராவது அதிகாரம்.

"பெண்ணுக்கு விவாஹமாய் நாலு ஸம்வத்ஸரம் ஆயிற்று. அவள் ருதுமதியாய் இரண்டு ஸம்வத்ஸரம் கழிந்தது. உபயுக்த ஜ்ஞாநத்தை உத்தேசித்தபடி கல்பித்தோம். ஜாமாதா அவளை அழைத்துக்கொள்ளும் ப்ரயத்நத்தைக் கொஞ்சமும் காட்டவில்

லையே! அவர் அபிப்ராயம் என்னமோ? நாம் பலதரம் எழுதியும் ஒரு ப்ரயுத்தரமும் அவர் தரவில்லையே! என் செய்வோம்?" என்று அடிக்கடி யோசனையில் கேசவாசார்யர் ஆழ்ந்தனர். அவர் பார்யையும் மாப்பிள்ளையின் செயல் விபரீதமாயிருக்கின்றதெனப் பலதரம் சிந்திப்பள். புருஷனிடம் மர்யாதையால் அவரைக் கேட்கத் துணியமாட்டாள். அண்டை அசல் பெண்பாலர் அவளை அதைப்பற்றிப் பிடிப்பார்கள். ஹரிப்ரியை யாது பதில் சொல்லக்கூடும்? எப்போதும் மௌநமாயிருப்பள். இவ்வார்த்தைகள் எல்லாம் ஜநகநந்தினியின் காதில் விதியின்றி விழுந்தன. அவற்றைப்பற்றித் தன் மாதா கஷ்டத்துடன் வஹித்த மௌநத்தைக் கண்டனள்; தன்பிதா யோசனையில் ஆழ்வதையும் பார்த்தனள்; எல்லாம் அவளுக்குத் தெரியும்; தத்கால ஸ்திதிக்குப் பரிஹாரம் தான் கண்டிலள். தனக்குப் பிதாவாயும், வித்யாப்ரதாநம் பண்ணின ஆசார்யனாயுமிருந்த கேசவாசார்யருக்கு ஸர்வவித கைங்கர்யமும் செய்துகொண்டு, அதுதான் தன்னுடைய ஜந்மப்ரயோஜநமென்று நினைத்துக்கொண்டு, காலம் போக்கினள்.

கேசவாசார்யர் முன்போல் ஸம்பாஷிக்காமலிருப்பதையும், தங்கள் முன்னிலையில் சிந்தையில் ஆழ்வதையும் பலதரம் கண்டு, பத்மநாபாசார்யரும் மாதவாசார்யரும் வருத்தங்கொண்டனர். அதற்குக் காரணத்தையும் தமது புத்தியால் ஊஹித்துக்கொண்டார்கள். இப்படிச் சிலநாள் கழித்தவுடன் பத்மநாபாசார்யர் இவ்வண்ணம் யோசித்தார்.

"இந்தக் கல்யாணம் பகவத்ஸங்கல்பத்தால் முடிந்ததாயினும் இதற்கு நான் வ்யாஜமாக நின்றேன். ஸம்பந்தத்தில ராமாநுஜாசார்யர் குதூஹலத்தைக்கண்டு, அவர் குமாரர் உதாஸீநராயிருந்ததை யோசிக்காமல விட்டேன். அது என் மநஸ்ஸில் பட்டது. பட்டும் ஆலோசனைக்கு இடங்கொடுக்காமல் போயிற்று. இப்போது ஒன்றும் கெடவில்லையே! பெண்ணைப் பிள்ளை வரவழைத்துக்கொள்ளலாமே எனக்கூடும். ஆனால் கேசவாசார்யரும் நானும் அவனுக்குப் பலதரம் எழுதியும் அவன் ஒரு ப்ரத்யுத்தரமும் அளிக்கின்றானில்லையே! அந்த ஸ்வாமி பரமஸாதுவாச்சுதே! தோளில் மூட்டையைத் தூக்கிப் போட்டுக்கொண்டு ஊர் ஊராய்ப் போய் முறையிட்டுக்கொள்ளப் போகின்றாரோ! நான் தான் உப்

பிள்ளையப்பன் ஸந்நிதிக்குப் போய் இதன் வாஸ்தவ ஸ்வரூபத்தை விசாரித்துவர வேண்டும்'' என்று யோசித்து முடித்தார்.

மறுநாள் ஸந்நிதியிற் கேசவாசார்யரைப் பார்த்தார். "ஸ்வாமின்! அடியேன் உப்பிலியப்பன் ஸந்நிதிக்குப் போவதாக நிச்சயம் செய்திருக்கின்றேன்'' என்று அவருடன் சொன்னார்.

"ஏது? என்ன விசேஷம்? அவ்வளவு தூரம் ப்ரயாணம் ஏன் வைத்துக்கொள்ள வேண்டும்?' என்றார் கேசவாசார்யர்.

"ஸாதுக்களுடைய மநோவ்ருத்தி மற்றவர்க்கு ஸாதாரணமாகத் தெரியாது. தேவரீருடன் நெருங்கி ஸ்நேஹம் செய்தபடியாலும், தேவரீருடைய குடும்ப யோகக்ஷேமங்கள் அடியேனுக்குத் தெரிந்திருக்கிறபடியாலும், தத்காலம் தேவரீருக்குச் சித்த காலுஷ்யம் உண்டென்று ஊஹிக்கின்றேன். ஜநகத்துக்குப் பதியின் க்ரஹத்தில் வாஸயோக்யகாலம் வந்து பகு காலமாயிற்று. தேவரீரும் அடியேனும் மாபபிள்ளைக்குப் பலதரம் பத்ரிகா மூலமாய் அதைப்பற்றி ஜ்ஞாபித்தோம் அவர் ப்ரத்யுத்தரம் தராமல் பராங்முகராய் இருக்கின்றார். அடியேன் புறப்பட்டுப் போய் அதை விசாரித்து வருகின்றேன்'' என்றனர் பத்மநாபாசார்யர்.

"அவ்வளவு ஶ்ரமம் தேவரீர்க்குக் கொடுக்க அடியேன் எவ்விதம் துணிவேன்? அது ஸரியன்றே!'' என்றார் கேசவாசார்யர்.

"அப்படியன்று. இந்த ஶ்ரமத்தை அடியேன் வஹிக்கத்தான் வேண்டும். ஹ்ருதயத்தில் தேவரீரை வருத்தம் பாதிக்காமலிருக்குமோ? தேவரீரைப்போல் அத்யந்தம் உபசாந்தர்க்கும் இது க்லேசகாரணம். இந்த இடத்தை விட்டுத் தேவரீர் ஒரு நாளும் சலித்ததில்லை. க்லேச நிவாரண நிமித்தமாக யாதொரு ப்ரயத்நமும் செய்யத் தேவரீர்க்கு ப்ரவ்ருத்தி ஜநிக்காது. ஆதலால் தேவரீருடன் பரமஸ்நேஹம் பண்ணின அடியேன் ப்ரயத்நரஹிதனாயிருந்து விடக்கூடுமோ? அடியேன் ஊர் ஊராய்த் திரிகின்றவன். திருக்குடந்தை வரையில் போய்வருவதால் அடியேனுக்கு அதிக ஶ்ரமம் இல்லை. தேவரீரைப்போல் அடியேன் தூமஶகடத்தை த்யாகம்

பண்ணினவன் அன்று” என்று சொன்னார் பத்மநாபாசார்யார்.

“தேவரீருடைய அத்யவஸாயம் அடியேனுக்கு அநுகூலத்தைச் செய்வது. ஆனபடியால், சுதந்தரம் இல்லாத அடியேன் அதைத் தடுப்பது கூடுமோ? ஆகிலும் இப்படி ச்ரமப்படுத்த வேண்டுமே என்று சோகிக்கின்றேன்” என்று சொன்னார் கேசவாசார்யர்.

இந்தவண்ணம் ஸம்பாஷித்த பிறகு சில நாட்குள் பத்மநாபாசார்யர் திருக்குடந்தைக்கு ப்ரயாணமாகப் புறப்பட்டுப் போய், ஒரு நாள் காலை ஐந்து நாழிகைப் பொழுதில் ஆதிவராஹாசார்யர் நிவாஸத்தின் எதிரில் நின்றனர். அப்போது க்ருஹஸ்வாமி க்ருஹத்தில் இல்லை. வீதித் திண்ணைமீது உட்கார்ந்தனர். இதற்குள் ஆதிவராஹாசார்யருடைய பந்துவான ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் அவ்வழியாகச் செல்பவர், பத்மநாபாசார்யரை நோக்கி, “ஸ்வாமிந்! எவ்விடம்? ஏன் இங்கே உட்கார்ந்திருக்கின்றது?” என்று வினவினர்.

“அடியேன் இருப்பது பெருமாள்கோவில். ஆதிவராஹாசார்யரை விசாரித்துக்கொண்டு வந்து, இது அவர் க்ருஹமென்று கேள்விப்பட்டு உட்கார்ந்தேன். அந்த ஸ்வாமியைக் காணேன்; அவர்க்காகக் காக்கின்றேன்” என்று பத்மநாபாசார்யர் சொன்னார்.

“ஆதிவராஹாசார்யர் காவேரிக்குப் போயிருப்பர்! தேவரீரும் காவேரிக்கு எழுந்தருளலாம்” என்று ஸ்ரீ வைஷ்ணவர் சொல்லிவிட்டுப்போனார். அவ்வண்ணமே காவேரியாற்றை நோக்கிப் பத்மநாபாசார்யர் நடந்தார். காவேரியை நெருங்குகையில், அவ்விடம் நின்று வருகின்ற ஆதிவராஹாசார்யரைப் பார்த்தார். அவரும் பத்மநாபாசார்யரைக் கண்ணுற்று, “எப்போது எழுந்தருளியது? திருக்குடந்தையில் தேவரீர் தர்சநம் பஹு ஆச்சர்யமாயிருக்கின்றதே! அகத்தண்டை போகவில்லையோ?” என்றனர்.

“அங்கே போய்த்தான் வருகின்றேன்” என்று சொன்னார் பத்மநாபாசார்யர்.

"ஸந்தோஷம். ஆற்றுக்கு அக்கரையில் வயல்கள் இருக்கின்றன. பஹிர்தேசத்துக்கு அவ்விடம் போய்க் காவேரியில் நீராட்டம் செய்துகொண்டு அகத்துக்கு எழுந்தருள வேணும். இப்போதுதான் மேற்கே மழை பெய்தது ஆற்றில கொஞ்சம் ஜலம் வருகின்றது. நீராட்டத்துக்குப் போதும். அடியேன் அகத்தில் தேவரீர் எழுந்தருளுவதை ப்ரதீக்ஷித்துக்கொண்டிருக்கின்றேன். மற்ற ஸமாசாரங்களை யெல்லாம் பின்னால் வார்த்தை சொல்லிக்கொள்வோம்" என்று சொல்லிவிட்டு ஆதிவராஹாசார்யர் நடந்தார். பத்மநாபாசார்யரும் காவேரியாற்றைப் பாலவழியாகக் கடந்து வடபுறம் சென்றனர்.

பத்மநாபாசார்யர் காவேரியில் நீராடி வஸ்த்ரங்களை உலர்த்திக்கொண்டு காலையில் செய்ய வேண்டிய நித்யகர்மங்களையும் முடித்துக்கொண்டு ஆதிவராஹாசார்யர் இல்லத்துக்குத் திரும்பி வந்தார். பிறகு ஊர்த்வபுண்ட்ரங்களைத் தரித்து, மாத்யாஹ்நிக கர்மங்களையும் செய்து முடித்தனர். இதற்குள் ஸூர்யன் உச்சியேறினான். ஆதிவராஹாசார்யர் பகவதாராதநம் பண்ணின பிறகு இருவரும் பகவந்நிவேதிதமான ப்ரஸாதத்தை அருந்தினார்கள். பின்னால் தாம்பூலங்கொண்ட கையுடன் வீதித்திண்ணைமீது போய் உட்கார்ந்தார்கள்.

"ஸ்வாமி திருக்குடந்தை பக்கம் வருவது அபூர்வமாச்சுதே! என்ன விசேஷம் தேவரீரை இவ்வளவு தூரம் ப்ரயாணிக்கச் செய்தது? தெரிவிக்கக் கூடுமானால் ஸாதிக்கலாம்" என்றார் ஆதிவராஹாசார்யர்.

"காவல்பாக்கம் ராமாநுஜாசார்யர் குமாரர் உப்பிலியப்பன் கோவிலில் ஸ்வாமி ஸந்நிதியில் காலக்ஷேபம் செய்கின்றார். பெருமாள் கோவில் கிடாம்பி கேசவாசார்யர் ஸ்வாமி புத்ரியை அவர் கல்யாணம் செய்துகொண்டு நாலு ஸம்வத்ஸரம் ஆயிற்று. பெண்ணுக்குப் பதினாறு வயது ஆயிற்று. அவளை அழைத்துக் கொள்ளும்படிப் பலதரம் ஜ்ஞாபகப்படுத்தியும் ஜாமாதா ப்ரத்யுத்தரம் கொடுப்பதில்லை. கேசவாசார்யர் ஸ்வாமி பரமஸாது. அந்த ஸ்வாமிக்காக அவருடைய மாப்பிள்ளையைப் பார்த்துவிட்டுப் போகும்படி இந்த ப்ரதேசம் வந்தேன்" என்று சொன்னார் பத்மநாபாசார்யர்.

"அப்படியா? அடியேனும் நாவல்பாக்கம் ஸ்வாமி குமார ரைப் பார்த்திருக்கின்றேன். கேசவாசார்யர் மருமான் இங்கே பாஷ்யாக்ஷரம் வாசித்துக்கொண்டிருந்தானே தேவரீருக்குத் தெரியுமோ?" என்றார் ஆதிவராஹாசார்யர்.

"ஆமாம். அடியேனும் கேள்விப்பட்டிருக்கிறேன்" என்று சொன்னார் பத்மநாபாசார்யர்.

"ஆனால் எப்போது புறப்படப்போகிறது உப்பிலியப்பன் ஸந்நிதிக்கு?" என்றனர் ஆதிவராஹாசார்யர்.

"வெய்யில் தாழ்ந்தவுடன் புறப்படலாம் என்று எண்ணிக் கொண்டிருக்கின்றேன். அவ்விடம் ஸ்வாமி பாங்காய் எழுந்தருளியிருக்கின்றாரோ? எத்தனைபேர் காலக்ஷேபம் செய்கிறார்கள்?" என்று சொன்னார் பத்மநாபாசார்யர்.

"சித்ரோத்ஸவத்திற்கு ஸ்வாமி எழுந்தருளியிருந்தார். பகு சிஷ்யர்கள் ஸ்வாமியோடு வந்திருந்தார்கள். நாவல்பாக்கம் பிள்ளையும் அப்போது வந்திருந்தார். பின்னால் ஸ்வாமிக்குத் திருமேனி கொஞ்சம் பாங்கில்லையென்று வதந்தி. காலக்ஷேபம் நடக்கிறதும் இத்தனை பெயர் காலக்ஷேபம் செய்கின்றார்கள் என்பதும் அடியேனுக்குத் தெரியாது. தேவரீர் ஸ்வாமியை முன்னே தண்டன் ஸமர்ப்பித்திருக்கின்றதோ?" என்றார் ஆதிவராஹாசார்யர்.

"ஸ்வாமியினுடைய ப்ரதம தர்ஸநம் இப்போதுதான் அடியேனுக்கு நேரப்போகின்றது" என்று பத்மநாபாசார்யர் சொன்னார்.

இந்தப்ரகாரம் இருவரும் சிலகாலம் வார்த்தை சொல்லிக்கொண்டிருந்தார்கள். அன்று ஸாயங்காலம் பத்மநாபாசார்யர் உப்பிலியப்பன் ஸந்நிதிக்குப் புறப்பட்டுப் போனார். அவர் அவ்வூரில் ப்ரவேசிக்கவும் ஸூர்யாஸ்தமநம் ஆய்விட்டது. ஸந்நிதி புஷ்கரிணியில் ஆஜ்ஞா கைங்கர்யங்களைச் செய்து முடித்தனர். பிறகு நாவல்பாக்கம் பிள்ளை இருக்கும் இடத்தைப்பற்றி விசாரித்துக்கொண்டு அந்த க்ராஹத்தைக்குறித்து நடந்துபோனார். அங்கே வீதித் திண்ணைமீது உட்கார்ந்திருந்த ஸ்ரீ வைஷ்ணவரைப் பார்த்து, நாவல்பாக்கம் வீரராகவாசார்யர் இங்கே இருக்கின்றாரோ?" என்று கேட்டனர். அதற்கு அந்த ஸ்ரீ வைஷ்ணவர், "இவ்விடம் தான்

அவர் ஜாகை செய்துக்கொண்டிருக்கின்றார். இப்போது ஆஸ்ர மத்திலிருக்கின்றார்" என்று சொன்னார்.

"அவரைச் சேர்ந்தவர்கள் இன்னும் ஆராவது அகத்திலிருக் கின்றார்களோ" என்று கேட்டார் பத்மநாபாசார்யர்.

"ஒருத்தருமில்லை. சாப்பாடெல்லாம் ஆஸ்ரமத்தில் தான் அவர்க்கு நடக்கின்றது. சில காலம் இங்கே படுத்துக்கொள்வார். இங்கே புஸ்தகம் பார்ப்பர். வேஷ்டிகளை உலர்த்துவர். இப்படி இருந்துகொண்டிருக்கிறார்" என்று ஸ்ரீ வைஷ்ணவர் சொன்னார்.

"இப்போது இங்கே வருவாரோ?" என்றார் பத்மநாபாசார் யர்.

"அநேகமாக எட்டு ஒன்பது மணிக்கு வருவர்" என்று சொல்லிவிட்டு ஸ்ரீ வைஷ்ணவர் உள்ளே சென்றார். பத்மநாபா சார்யரும் பகவத்ஸந்நிதிக்குப் போய், எம்பெருமானைத் தர்ஸித்து விட்டுத் தேசாந்திரி ப்ரஸாதம் கிடைத்ததைப் புஜித்து விட்டு, ஒருஜாம காலத்துக்குப்பின் மறுபடியும் முன்சொன்ன இல்லத்தினி டம வந்தார். வீத்தித் திண்ணைமேல் வீரராகவாசார்யர் இருப்ப தையும் பார்த்தார். எதிர்திண்ணைமீது உட்கார்ந்து கொண்டு, வீரராகவாசார்யரைப்பார்த்தனர். அவரும் இவரைப் பார்த்த னர். இவ்வண்ணம் சில க்ஷணங்கள் கழிந்த பிறகு, வீரராகவா சார்யர் பத்மநாபாசார்யரைப்பார்த்து "ஸ்வாமி எவ்விடம் எழுந் தருளி இருக்கின்றது?" என்றனர்

"அடியேன் இருக்கிறது பெருமாள் கோவில். பத்மநாபன் என்று அடியேனை அழைப்பார்கள்" என்று சொன்னார் பத்மநாபா சார்யர்.

"அப்படியா அபசாரமாச்சுது. இருட்டில் அடியேனுக்குத் தெரியாமல்போச்சுது. க்ஷமித்தருளவேண்டும்" என்றனர் வீர ராகவாசார்யர். பிறகு ஒருவர்க்கொருவர் குசலப்ரஸ்னைகளைப் பண்ணிக்கொண்டார்கள். வீரராகவாசார்யர் வந்த காரியத்தைப் பற்றிப் பத்மநாபாசார்யரைக் கேட்கவில்லை. அப்படிப்பட்ட வினா ஒன்று உதிக்குமென்று பத்மநாபாசார்யர் எதிர்பார்த்தும் அதுவராதெனநிச்சயம் பிறந்தபிறகு, வித்யில்லாமல தான் வந்த வழியைத் தானே ப்ரஸ்தாபிக்கத் தொடங்கினார்.

"கேசவாசார்யர் அனுப்பி அடியேன் தேவரீரிடம் வந்திருக்கின்றேன்" என்றனர் பத்மநாபாசார்யர்.

"ஏது? என்ன விசேஷம்? ஸாதிக்கவேண்டும்."

"அந்த ஸ்வாமியும் தேவரீருக்கு எழுதினார். அடியேனும் பத்ரிகாமூலமாய் விஜ்ஞாபனம் பண்ணிக்கொண்டேனே?"

"ஆமாம். என்னமோ கடிதங்கள் வந்ததாக ஜ்ஞாபகம். விஷயம் விஸ்ம்ருதமாயிருக்கின்றது.

"கந்யை பரருடைய அர்த்தியன்றோ? பரிக்ரஹீதாவினிடம் அவளை அனுப்பிய பிறகு அன்றோ பெற்றவர்களுடைய அந்தராத்மா தெளிவையடையும்?" என்றனர் பத்மநாபாசார்யர்.

"அது காளிதாஸோக்தியன்றோ? அந்த ஶ்லோகம் தேவரீரைக் கஷ்டப்படுத்துவானேன்?" என்று சொன்னார் வீரராகவாசார்யர்.

"கேசவாசார்யருடைய கஷ்டத்தை அடியேன் விஜ்ஞாபனம் செய்துகொண்டேன்."

"அந்த ஶ்ரமம் தேவரீர் ஏற்றுக்கொள்வானேன்? அதை வஹிக்க அவர் அஶக்தரன்றே!"

"அந்த ஸ்வாமி பரமைகாந்தி; ஸாது; ஆமசகடம் ஏறுவதில்லை;—"

"ஆனால் அந்தஸ்வாமி கஷ்டப்பட மாட்டாரே! ஜ்ஞாதாக்கள் ஸம்ஸார ஸுகதுக்கங்களை லக்ஷ்யம் செய்ய மாட்டார்களே!"

"இதென்ன? இப்படியும் தேவரீர் சொல்லலாமோ? அடியேன் வந்த கார்யம் பரிஹாஸயோக்யமானதோ?" என்று வருந்தி மொழிந்தார் பத்மநாபாசார்யர்.

"பரிஹாஸமில்லை. பரமார்த்தமாகத்தான் சொல்கின்றேன்?"

"ஸ்வாமிந்! அடியேன் ப்ரயத்நத்தால் இந்த விவாஹம் முடிந்தது. தேவரீருடைய பிதாவும் அனந்த த்ருப்தியுடன் அங்கீகரித்தனர். பித்ருக்ருதமான தாரம் புத்ரனுக்கு ப்ரதிக்ஷ்யமாகத் தக்கது. தேவரீர் பார்யையை எப்போது அழைத்துக்கொள்ளப் போகின்றது?" என்றார் பத்மநாபாசார்யர்.

"என்ன இவ்வளவு நிர்பந்தமாக ஸாதிக்கின்றதே! அடியேன் வித்யாக்ரஹண நிமித்தம் இவ்விடம் வந்திருக்கின்றேன், வந்த கார்யம் முடிந்தபிறகுதானே மற்ற விஷயங்களை யோசிக்கப் பொருந்தும்" என்றார் வீரராகவாசார்யர்.

"ஸாமாந்ய ஶாஸ்த்ரங்களில் கரைகண்ட பிறகு விசேஷ ஶாஸ்த்ர க்ரஹண நிமித்தமாகத் தேவரீர் இவ்விடம் எழுந்தருளி நாலு ஸம்வத்ஸரமாயிற்று. இப்படிப்பட்ட வித்யாக்ரஹண காலத்துக்குப் பரிமிதியில்லையோ?" என்றனர் பத்மநாபாசார்யர்.

"ஞாதாவஷ ஞௌபாஸநம்" என்று ஆசார்யனன்றோ க்ரந்தோபதேசத்தை முடிக்கவேண்டும். அடியேனுக்கு அப்படிப்பட்ட அநுஶாஸநம் இன்னும் கிடைக்கவில்லை. அது கிடைக்கும் காலத்தைக் குறிப்பிடவும் அசக்தனா யிருக்கின்றேன். அடியேனைத் தேவரீர் க்ஷமித்தருள வேணும்." என்றார் வீரராகவாசார்யர்.

"ஆனால் கேசவாசார்யர் ஸ்வாமியிடம் போய் அடியேன் என்ன விஜ்ஞாபனம் பண்ணிக்கொள்வேன்! பிடிகொடாமல் வார்த்தை சொல்கின்றீரே!" என்றார் பத்மநாபாசார்யர்.

"நடந்ததை நடந்தபடி சொன்னால் அந்த ஸ்வாமி குறைப்படக் காரணம் இல்லை" என்றார் வீரராகவாசார்யர்.

"தேவரீர் யோஜனைகள் லோக வ்யவஹாரத்துக்கு ஒத்தனவாகத் தோன்றவில்லை. நடாதூர் அம்மாள் குமாரர் விஷயவ்யாவ்ருத்த சித்தராயிருந்தாரென்றும், அவர் வாசிக்க வேண்டுமென்று ஶ்ருங்காரரஸம் பெருகிய நாடகமொன்று ஸ்வாமி செய்தருளினாரென்றும் கேள்வியுண்டு. தேவரீர் விஷயத்தில் அந்த உபாயத்தை ஸ்வீகரிப்பவர் இன்னாரென்று ஏற்படவில்லை. அந்தப் பெண்மணியின் பாக்கியம் எப்படி யிருக்குமோ தெரியவில்லை. இவ்வண்ணம் அடியேன் இவ்விடம் வந்து திரும்புவதைக் காட்டிலும் வராமலே இருந்தேனாகில் நன்றாயிருக்கும். இங்கு நடந்ததை அந்த ஸ்வாமி கேட்டாராகில் இன்னும் ஶோகாவேஶ மக்நராவா ரென்பதில் ஸந்தேஹமில்லை" என்று சொல்லி விட்டுப் பத்மநாபாசார்யர் எழுந்து நடந்தார். அவர் புறப்பட்டுப் போவதை வீரராகவாசார்யர் மௌனமாகப் பார்த்துக்கொண்டிருந்தார்.

அன்று ராத்ரி ஓரிடத்தில் படுத்திருந்து, பின்மாலை திருக்குடந்தைக்குப் பத்மநாபாசார்யர் திரும்பிப் போனார். அங்கே நடந்த சங்கதியை ஆதிவராஹாசார்யருடன் சொன்னார். அவரும் அதைக் கேட்டு வருத்தப்பட்டார். அன்று ஸாயங்காலமே பத்மநாபாசார்யர் பெருமாள் கோவிலுக்கு ப்ரயாணப்பட்டுப் போனார்.

பனிரண்டாவது அதிகாரம்.

கேசவாசார்யர் ஜாமாதாவுக்கு விஷயாபிமுக்யம் என்று மிலது. கல்யாண காலத்தில தமது சித்தவ்ருத்தியை அவர் தெளிவாய் அறிந்து கொள்ளவில்லை. அதனாலும், பிதாவின் ஆஜ்ஞையை அநுஸரிக்க வேண்டுமென்னும் ந்யாயத்தாலும் ஜநகநந்தினியை பார்யையாக க்ரஹித்துக் கொண்டனர். தூர்யாஸ்ரம லக்ஷணத்தைக் குறைபடாமல் பொருந்திய யதிஸ்ரேஷ்டரை ஆசார்யராக அடைந்தார். அந்த ஸ்வாமியினிடம் அத்யாத்ம வித்யையை அப்யஸிக்க அப்யஸிக்க, அவர் மநஸ்ஸும் விஷயங்களில் சஞ்சாரத்தை மிகவும் குறைக்கத் தலைப்பட்டது. அவருடைய ஸர்வ ஸம்ஸயங்களும் நிவ்ருத்திக்கப்படவே, ஹ்ருதய க்ரந்திகள் பேதிக்கப்பட்டன. ஆத்மஜ்ஞாநமும், பகவத் பக்தியும் நிலைத்துக் குடிகொண்ட மநஸ்ஸுடன் கர்மங்களில் ப்ரவ்ருத்திக்கு ஹேதுவாகின்ற ப்ரயத்நங்கள் உதிக்கவில்லை. அவர்க்குக் கொஞ்சகாலமாக ஸந்யாஸம் பண்ணிக்கொள்ளவேண்டுமென்று அத்யவஸாயம் உண்டாயது. ஸ்வாமியை இரண்டொருதரம் அதனிமித்தமாக ப்ரார்த்தனர். முதலில் ஸ்வாமி மறுமொழி தந்தாரில்லை. மறுபடியும் வீரராகவாசார்யர் தம்முடைய இஷ்டத்தை ப்ரஸ்தாபிக்கவும் ஸ்வாமியானவர், "வீரராகவாசார்யரே! இதென்ன விபரீத புத்தி! ஒரு பெண்ணை விவாஹம் பண்ணிக்கொண்டீர். அவளுடன் கூடி க்ருஹதர்மத்தை அநுஷ்டிக்க வேண்டுமென்றுதானே அவ்வண்ணம் செய்தீர்? இப்போது அவளைத் தெருவில் விட்டுவிட்டு யதியாகப் போகவேண்டுமென்கின்றீர்" என்றனர்.

"அடியேன் யாது சொல்லக்கூடும். க்ருஹஸ்தாஸ்ரமத்தை இச்சித்து விவாஹம் செய்துகொண்டாலும், இப்போது அடியேன் சித்தத்தில் வைராக்யம் நிலைத்துவிட்டதே! வைராக்யம் நிலைத்தவனுக்கு விஷயத்தில் ப்ரவ்ருத்தியுண்டாக மாட்டாதே! ஸந்யாஸமும் விலக்கக்கூடாதே!" என்று சொன்னார் வீரராகவாசார்யர்.

" ஆமாம். ஶாஸ்த்ரம் வகுத்த சப்தங்களை ஸரியாகத்தான் வ்யவஹரிக்கின்றீர். நீரோ சிறு பிள்ளை, புத்தியில் பட்டதெல்லாம் புத்தியில் நிலைத்ததாக எண்ணத்தக்கவர். பகு வர்ஷங்கள் நீர் காக்கவேண்டும் அதுவரைக்கும் பார்யையுடன் வாஸம் செய்ய வேண்டும். அப்படிச் செய்யும்போது, உமக்கு இப்போதுண்டானயோசனையானது குன்றுமல் நிலைத்திருப்பதாகத் தோன்றியதாகில் என்னிடம் வாரும். அப்போது தக்கபடி யோசிக்கின்றேன்" என்று சொன்னர் ஸ்வாமி.

அதன் பிறகு வீரராகவாசார்யர் ஸ்வாமியினிடம் அந்த விஷயத்தைப்பற்றி ப்ரார்த்திக்கிலர். ஆனல் அவ்விஷயம் அவர் மனஸைக் கவர்ந்து விட்டதே. கேவலம் அவஸர ப்ரதீக்ஷராய் அவர் நின்றனர். அப்படி அவர் நிற்கையில் பத்மநாபாசார்யர் அவரிடம் வந்தனர். இருவருடைய சித்தவ்ருத்தியும் பிந்நப்பட்டிருக்கவே, அவர்களுக்குள் நடந்த வார்த்தைகள் இருவருக்கும் ஸுகம் தரவில்லை. ஆனல் பத்மநாபாசார்யருடைய ஆகமநம் வீரராகவாசார்யருடைய ஹ்ருதயத்தில், அவர் கொண்ட கருத்தைப்பற்றி ஒரு தீவ்ரமான இச்சையை உண்டாக்கி விட்டது கல்யாண காலத்தில் அவர் பார்யையைப் பார்த்தவரே. ஆனல் பார ப்ரவ்ருத்தியைப் பகுமாநித்துக் கல்யாணம் செய்து கொண்டவர், பெண்ணின் ரூபாதிஶயத்தை நன்ருய் அறிந்து கொள்ளும் வகையாக அவளைக் கண்டாரில்லை. அவளுடைய புத்தியையும் ஜ்ஞாநத்தையும் தெரிந்து கொண்டாரில்லை. ஆகலால் ஜநகநந்தினியின் ரூபமும் ஜ்ஞாநமும் குணமும் அவர்க்கு இத்தன்மையனவெனத் தெரியவேயில்லை.

அது பகவத்ஸங்கல்பம் அதற்காக யார்தான் யாரைத்தான் பழிக்கக்கூடும்? நாவல்பாக்கம் ராமாநுஜாசார்யர் தம் குமாரர்க்கு விவாஹயோக்யமான வயஸ் வந்ததென்றும், தக்க குடும்பத்தில் பிறந்தவளாய், ஜ்ஞாநம், ஶீலம், ரூபம் முதலான ஏற்றங்கள் உள்ளவளாய்க் கந்யை கிடைக்கின்ருளென்றும் நினைத்துவிவாஹத்தை முடித்தார். அவர் குமாரரோ விவாஹத்தில் ப்ரியமில்லாதவராயிருந்தும், ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் தமக்கு முற்றிலும் ஆபிமுக்யம் இல்லாதிருப்பதாகத் தெரிந்துக் கொள்ளாதவராய்க்

கல்யாணம் செய்துகொண்டார். கேசவாசார்யரோ குலத்தாலும் வித்யையாலும் சிறப்புற்ற வரன் கிடைத்ததாவென்னி வீரராகவாசார்யருக்குத் தமது கன்னிகையைத் தானம் செய்தார். இப்படி ஜநகநந்தினிக்கு விவாஹமென்னப்பட்ட ஸம்ஸ்கார விசேஷம் அமைந்தது. வீரராகவாசார்யர் ப்ரஹ்மவித்யையை அப்யஸிக்கவும், லோக வ்யாபாரங்களில் நிர்வேதமடைந்தனர். “யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத்” எனும் வாக்யத்தை யோசித்துத் தமக்கு வைராக்யம் முற்றினதாக வெண்ணித் தாம் ஸந்யஸித்துக்கொள்வதில் யாதொரு க்ரமவிரோதமும் இல்லையென்று நிச்சயித்தனர். தம்மை யடைந்த பத்நீ தம்மைப்போல் வைராக்யத்தில் நிஷ்டையை அடையக்கூடுமென்றும், அவள் அப்படிச் செய்வதுதான் ந்யாயமென்றும் எண்ணினார். தாம் அவளுக்கு ஓர் கேடுவிளைவிப்பதாக எண்ணினாரில்லை.

இப்படிப்பட்ட சித்த பரிபாகத்துடன் கூடினவருக்குப் பத்மநாபாசார்யருடைய வரவும், அவருடைய வார்த்தைகளும் கஷ்டத்தை விளைவித்தன. அவர்க்கு ஸந்யாஸத்தில் த்வரை யுண்டாய் விட்டது. ஸ்வாமியை மறுபடியும் ப்ரார்த்திக்கப் பயந்தார். ஸ்வாமியோ பார்யையுடன் சில காலம் வாஸம் செய்து விட்டுப் பிறகு ஹ்ருதய ஸ்திதியைப்பற்றி யோசிக்கச் சொன்னார். அது அநாவசியம் என்று வீரராகவாசார்யர் நினைத்தார். இப்படி இருக்கையில், ஸ்வாமிக்குத் திருமேனியில் பாங்கு வரவரக் குறைந்தது. சிஷ்யர்கள் ஸ்வாமியினுடைய வியோகத்தைப்பற்றிச் சிந்திக்கவும் ஆரம்பித்தார்கள். ஆதலால் ஒரு ராத்ரி ஸ்வாமி ஏகாந்தமாய் ஶயநித்திருக்கையில் வீரராகவாசார்யர் ஸ்வாமியை நெருங்கினார்.

“ஆர் அங்கே?” என்று ஸ்வாமி வினவினார்.

“அடியேன்தான், வீரராகவன்.” என்றார் வீரராகவாசார்யர்.

“இந்த ராத்ரியில் எங்கே வந்தீர்? என்ன விசேஷம்?” என்று கேட்டார் ஸ்வாமி.

“திருமேனி தேவு சாத்திக்கொண்டிருக்கின்றதே.” என்றனர் வீரராகவாசார்யர்.

“ஆம் சரீரம் சரீரப்ரக்ருதியை அநுஸரிக்கின்றது. அதைத் தடுக்க யார்க்கு முடியும்?” என்றார் ஸ்வாமி.

"ஒவ்வொரு வஸ்துவும் அதன் ஸ்வபாவத்தில்தான் நிற்கும். ஒவ்வொரு சேதநனும் ஸ்வகர்மாயத்த சரீரஸ்திதியுடன் கூடின வன் தான். ஆனாலும் அடியேனுடைய ஜீவநம் ஸ்வாமியை ஆஸ்ர யித்து நிலைக்கவேண்டியிருக்கின்றது. ஆகலால் ஸ்வாமி தூர்ப்பல மடைவது அடியேனுக்கு ஶோககாரணமாகின்றது" என்று சொன்னார் வீரராகவாசார்யர்.

"நீர் அபிஜாதரன்றோ? ஸ்திதப்ரஜ்ஞரன்றோ? ஜ்ஞாதாக்களுக்கு ஶோககாரண மென்று ஒன்றுண்டோ? எல்லா சேதநருடைய ஸ்வ ரூபஸ்திதி ப்ரவ்ருத்தி ஈஶ்வராதீந மன்றோ? ஒரு ஶிஷ்யன் ஆயுஸ் உள்ள வரையில் ஆசார்யன் ஜீவித்திருக்கவேண்டு மென்று எண் ணவும் கூடுமோ? பக்வமான பழம் முன்னே விழும். மற்ற பலன் கள் விழுவதற்குத் தம்முடைய பக்வ காலத்தை ப்ரதீக்ஷிக்கும். அப்படியே வ்ருத்தர் முன்பு மரணத்தை அடைகின்றார்கள். யுவா வானவன் தனக்கு வார்த்தக காலம் வருமுன் மரணத்தைப்பற்றிச் சிந்திக்கலாமோ?" என்று ஸ்வாமி சொன்னார்.

"க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்" என்று வசநமிருக்கின்றதே" என்றார் வீரராகவாசார்யர்.

"அதனால் க்ருதக்ருத்யனுக்கு மரணத்தைப்பற்றிப் பயங் கூடாதென்று தாத்பர்யம். மரணம் நேரிட்டால் இஷ்டந்தான். அது ப்ராப்தகாலம் வந்தால் தான் நேரிடும். எப்போதும் மரணத் தைப் பற்றி யொருவன் சிந்திக்கவேண்டு மென்பது ஶ்லோக தாத் பர்யமன்று. இங்கே இருக்கும்போதும் க்ருதக்ருத்யன் பகவத் கிங்கரன்தான்" என்று சொன்னார் ஸ்வாமி.

இந்த வார்த்தைகள் வீரராகவாசார்யர் வேண்டிய ப்ரஸ்தா பத்துக்கு இடந்தரவில்லை. ஆகலால் அவர் மௌநமாயிருந்து விட்டார். அவ்விடத்தைவிட்டுச் செல்லவு மில்லை. கண்களை மூடி னவராய் ஸ்வாமியும் இருந்தார். மறுபடியும் கண்களைத் திறந் தார். வீரராகவாசார்யர் நின்றவிடத்திலேயே நிற்பதைக் கண் டார். "ஏன் நிற்கின்றீர்? ஏதாவது சொல்லவேண்டுமோ?" என்று ஸ்வாமி சொன்னார்.

"அடியேன் யாது சொல்லப்போகின்றேன்? அடியேன் விஜ் ஞாபிக்கவேண்டிய அம்ஶம் ஸ்வாமிக்குத் தெரிந்ததே" என்று சொன்னார் வீரராகவாசார்யர்.

ஸ்வாமி அவரைக் கண்களை நன்றாகத் திறந்து பார்த்தனர். பிறகு, "ஸந்யாஸபேக்ஷை இன்னும் உம்மை விட்டிலதோ?" என்று சொன்னார்.

"அடியேனுக்கு க்ரஹஸ்த தர்மத்தில் ஈஷத்தும் இச்சை இல்லை. ஐஹிக விஷயங்களில் ஸ்ப்ருஹை இல்லை" என்றார் வீரராகவாசார்யர்.

"தத்வதர்சிகளான மஹர்ஷிகள் க்ரஹஸ்தர்களாயிருக்கவில்லையா? குருகேசன், நடாதூர் அம்மாள், அப்புள்ளார், தேசிகன் முதலானவர்கள் க்ரஹஸ்தர்களாயில்லையா? அவர்களை எல்லாம் பரமைகாந்திகளாக லோகம் ஒப்புக்கொள்ளவில்லையா? அவர்கள் த்ருணலோஷ்ட காஞ்சநகர்களாயிருக்கவில்லையா? எக்காலும் நீர் அவர்களுக்கு ஸமமாவீரோ? மஹா ப்ரஹ்மவித்தான கேசவாசார்யருடைய ஏகபுத்ரியைக் கண்ணால் ஒரு தரம் காணாமலே பரித்யாகம் செய்ய இச்சிக்கின்றீரே! அதனால் அந்த மஹாந் எவ்வளவு கஷ்டப்படுவர்? அந்தப் பெண்ணினுடைய துக்கம் தீர்க்கமாய் வளராதோ? அவள் தாயார் துடித்துப்போகமாட்டாளோ? அஹிம்ஸை பரமதர்மமாச்சுதே. அவ்வளவு ஹிம்ஸையை உண்டாக்கத் துணிந்த ஸந்யாஸேச்சை எப்படிப்பட்டதோ? ஏன் யோசிக்கமாட்டீர்?" என்று ஸ்வாமி வருந்திச் சொன்னார்.

"அடியேன் ப்ரதிவசநமளிப்பதாய்த் திருவுள்ளம் பற்றக் கூடாது. அடியேனை க்ஷமிக்கவேண்டும். ஜந்மாந்தர வாஸனை தான் காரணமோ? இப்போது அடியேன் ஸ்வாமி க்ருபையால் அடைந்த ஜ்ஞாநந்தான் காரணமோ? அடியேனுக்குத் தெரியவில்லை. அடியேனுடைய சித்தமோ இப்போது விஷயத்தை திரஸ்கரிக்கின்றது. அந்த ஸ்திதியில், மநோவ்ருத்தியை அநுஸரித்தன்றோ வாக்வ்ருத்தியும் காயவ்ருத்தியும் ஏற்பட வேண்டும். ச்ரேயஸர்களான தேசிகாதிகளுடன் அடியேனை ஒப்பிடலாமோ? நிவ்ருத்தராகர்க்கு க்ரஹம் தபோவநம். அவர்கள் ஸம்ஸாரத்திலிருந்துகொண்டே ஸந்யாஸிகளென வர்த்திப்பார்கள். அவ்வளவு த்ருடமான சித்தபரிபாகம் அடியேனுக்கு உள்ளதாக எண்ணமாட்டேன். அதனுடைய தத்கால ஸ்திதியை ஸந்யாஸத்தால் காப்பாற்ற இச்சிக்கின்றேன்" என்று வீரராகவாசார்யர் சொன்னார்.

ஸ்வாமி அந்த வார்த்தைகளைக் கேட்காதிருந்ததுபோல் இருந்து விட்டார். வீரராகவாசார்யரும் சற்று இருந்து பார்த்துவிட்டு வெளியே சென்றார்.

இரண்டு மூன்று திங்களுக்குள் ஸ்வாமிக்கு நோய் வ்ருத்தியடைந்தது. பலவிடங்களில் வஸித்த சிஷ்யர்கள் ஸ்வாமியின் தேஹஸ்திதியைத் தெரிந்துக்கொண்டு உப்பிலியப்பன் கோவிலில வந்து சேர்ந்தார்கள். ஸ்வாமியின் க்ருபையை நம்பியிருந்தவர்களெல்லோரும் ஆத்மோஜ்ஜீவநத்தின் பொருட்டு அநுஷ்டிக்க வேண்டியஉபாய பூர்த்தியை ஸ்வாமியின் க்ருபையால் ஸம்பாதித்துக் கொண்டார்கள். ஸ்வாமிக்கு தேஹத்தில் துர்ப்பலம் அளவும், மநோவ்யாபாரம் விஸ்தரித்தது. ஸ்வாமியுடைய நிர்யாணம் ஸமீபித்து விட்டதாக எண்ணிய பலர், பிற்காலம் ஸ்வாமியினுடைய ஸ்தாநத்தில் ஒரு யதி ஏற்பட வேண்டிய ப்ரயத்நத்தில ஆழ்ந்தனர். தேரெழுந்தூர் ஆராவமுதய்யங்கார் என்கிற ஒரு செளகிகர், அந்த ப்ரயத்நத்தை முதன்மையாக வஹித்தார். ஸ்ரீ வைஷ்ணவர்கள் கும்பல் கும்பலாக கூடிப்பேசுனர்கள். ஸ்வாமி திருநாட்டுக்கு எழுந்தருளி விட்டால் சிஷ்யர்களில் யாராவது ஸந்யஸித்துக் கொள்ளலாமென்று த்ருப்தி யடையாதவர்களாய், ஸந்யஸித்துக்கொள்ள வேண்டியவரை ஸ்வாமியே நியமிக்க வேண்டு மென்றும், அவர்க்கு ஸ்வாமியே மந்த்ரோபதேசம் செய்ய வேண்டு மென்றும் அவர்கள் தீர்மானித்தார்கள்.

அதன்பிறகு, அந்த ஊரில் அப்போது கூடியிருந்த சிஷ்யர்களெல்லோரும், ஸ்வாமி சயநித்திருந்த ஸ்தலத்தில் வந்து கூடினார்கள். ஜநங்களின் கூச்சலும் ஹிம்ஸையும் நீங்கி ஏகாந்தமாக இருக்க வேண்டிய காலத்தில ஸ்வாமிக்குக் கஷ்டம் மேலிட்டது. பகு சிஷ்யர்களைப் பரிக்ரஹிக்கும் ஸ்வாமிகள் அவஸாந காலத்தில் படும் கஷ்டத்தைப்பார்த்து ஸஹிப்பது கூடுமோ? அப்போது சக்தியோ வ்யாபரிக்க முற்றிலும் சக்தியற்றதாய்ப் போகின்றது. மனஸா ஸம்மோஹத்தை அடைகின்றது. ஆவியோ நிலையின்று சலிக்கின்றது. வேறு ஸ்வாமி ஏற்படவேண்டிய கவலையோ சிஷ்யர்களைப் பாதிக்கின்றது. தெய்வாநுகூலத்தால் ரங்கநாத ஸ்வாமி மடத்து ஸ்வாமி பலலர். மடமானால் ஸ்தாநத்தை அபேக்ஷிப்பவர்கள் பலர் ஏற்படுவார்கள். ஒவ்வொருவர்க்கும்

ஸஹாயம் செய்பவராகப்பலர் கூடுவார்கள். இவர்கள் ஒருவரோ டொருவர் கலகப்படுவார்கள். மடமிருந்த ஸ்தாநத்தில் யார்க்கு மநுஷ்யக் கட்டுப்பாடு மிகுந்ததோ அவர் ஆஸ்தாநத்தைக் கொண்டுபோவது வழக்கம். இவ்வளவு துக்கம் ஏகாந்த ஸந்யாஸிகளுடைய சுஷ்யாகளை இதுவரையில் பாதிக்கவில்லை. ஆனாலும் ஒரு ஸந்யாஸியை மிகவும அபிமாநித்தவர்கள், அவருடைய ஸம்பந்தத்தைப்பெற்ற மற்றொருவரை அவருடைய நிர்யாண காலதத்தில் ஸ்வாமியாக அபேக்ஷிக்கின்றார்கள்.

கூட்டமும் கூச்சலும் மிகுதியடையவே, ஸ்வாமி கண்களைத் திறந்தார். சுற்றுநின்றவரைப் பார்த்துப் பயந்தார். "ஏன் இவ்வண்ணம என்னை ஹிம்ஸிக்கின்றீர்கள்?" என்று கேட்டார்.

உடனே, ஆராவமுது அய்யங்கார், "ஸ்வாமியை நம்பியிருந்த அடியேங்களுக்குக் கதியொன்று காட்டி ரக்ஷிக்க வேண்டுமென்று பிரார்தத்திக்கிறேன். இந்த சிஷ்யர்கள் எலலோரும் அவ்வண்ணமே ப்ரார்தத்திக்கிறார்கள்" என்று சொன்னார்.

"நான் என்ன கதி உங்களுக்குக் காட்டக்கூடும்? நானே பிக்ஷுகன். இருந்த காலம் ஆஸரிதர்களுக்கு ஹிதத்தை யதாஸக்தி செய்தேன. இன்னும் என்ன செய்யவேண்டும்?" என்று ஸ்வாமி சொனனார்.

"இந்தத் திருவடி ஸம்பந்தத்தைப் பின் காலத்தில் பகு ஆஸ்திகர்கள அபேக்ஷிபபாாகள். அந்தப்படியே அநுக்ரஹமடைந்த ஓர் ஸ்வாமியை அடியேஙகளுககுக காட்டித்தரவேணடும்" என்றனர் ஆராவமுது அய்யங்கார்.

"நான் என்ன காட்டித்தர வேண்டும்? எனக்கு சிஷ்யர்கள் இருக்கின்றார்களே. ப்ராசார்ய ரூபமான என்னுடைய ஸம்பந்தம் வேண்டியவர், அவர்களில் எவரிடமாகிலும் ஆஸ்ரயிக்கலாமே" என்றனர் ஸ்வாமி.

"சிஷ்யருக்குள் ப்ரதாநரை ஸ்வாமியே குறிப்பிட்டுத் துர்யாஸ்ரமத்தையும் அவர்க்குத் தந்தருள வேண்டும்" என்றனர் அய்யங்கார்.

"ஒரு ஸ்ரீ வைஷ்ணவரைப் பார்த்து, "நீர் ஸந்யஸித்துக் கொள்ளும் என்று நானு சொல்வது! வைராக்ய முள்ளவர் தாமே

ஸங்யஸித்துக் கொள்வர். இல்லாதவரை நான் கேட்கலாமோ?" என்றனர் ஸ்வாமி.

இதற்குள், ஆராவமுதய்யங்காரும் மற்றோரும், பண்டிதர்களாக அவ்விடம் கூடியிருந்த பல ஸ்ரீ வைஷ்ணவர்களை ப்ரார்த்தித்தார்கள். ஒருவர் தனக்குக் குடும்பம் பெரிதென்றும் தான் ஸங்யஸித்துக்கொண்டால் குழந்தைகள் கஷ்டப்பட்டுபோம் என்றும் சொன்னார். மற்றொருவர் தம்முடைய பத்நீ ஸம்மதிக்க மாட்டாள் என்றனர். வேறொருவர் குமாரர் பட்டணத்தில் பாஷாந்தரம் படிப்பதாயும், அவருக்கு ஒரு வ்ருத்யுபாயம் ஏற்பட்டால், பிறகு ஸங்யஸித்துக் கொள்வதாயும் சொன்னார். ப்ரார்த்திக்கப்படாத மற்றொருவர், தனக்கு ஐயாயிரம் ரூபாய் கொடுத்தால் பார்யையிடம் அதைத் தந்து, அவளுக்கு ஸமாதாநம் சொல்லிவிட்டு ஸங்யாஸத்துக்கு வருவதாகச் சொன்னார். இன்னுமொருவர் பார்யையிடம் தமக்கு விருப்பம் குறையவில்லை யென்றார். தக்க வயதடைந்தவரும், ஸங்யஸித்துக் கொள்ளத்தக்கவருமான பண்டிதர்கள் யாவரும் இவ்வண்ணமே வார்த்தைகள் சொல்லி ஸங்யாஸம் பெற்றுக் கொள்ள இணங்கினரில்லை. இவற்றைப் பார்த்துக் கொண்டிருந்த ஸ்வாமியானவர், "அய்யங்காரே! என்ன சொல்கின்றீர்?" என்றனர்.

அய்யங்காரும், "இது என்ன அந்யாயம்! ஸ்வாமியினுடைய க்ருபையை ஸம்பாதித்துக் கொண்ட பண்டிதர்களுக்குள் ஒருவர்க்காவது வைராக்யம் நிலைதிலதா? இதற்குத்தானா அத்யாத்ம சாஸ்த்ரம் அப்யஸித்தது? நம்முடைய ஸதஸம்ப்ரதாயத்தை ரக்ஷிக்கத்தக்கவர் இங்கே யாரும் இல்லரா?" என்றனர்.

"ஸ்வாமி அநுக்ரஹித்தால் அடியேன் ஸங்யஸித்துக்கொள்கின்றேன்" என்று ஒரு சப்தம் உண்டாயிற்று. சப்தம் உண்டான ஸ்தலத்தை யாவரும் பார்த்தார்கள். அஞ்ஜலியில்குவிந்த கைகளுடன், ப்ரஹ்மதேஜஸ் ஜ்வலிக்க, ஸித்தமாக நின்றார் நாவல்பாக்கம் வீரராகவாசார்யர். அவரை ஸ்வாமி கடாக்ஷித்தார். ஸ்வாமி முகத்தில்வ்யஸநக்குறி விளங்கியது. "பகுநாளாக ப்ரார்த்திக்கின்றேனே. இபபோதாகிலும் க்ருபைசெய்யக்கூடாதா?" என்று சொன்னார் வீரராகவாசார்யர்.

அவ்விடம் நின்ற யாவரும் கைகளைக் கூப்பிக்கொண்டு வீரராகவாசார்யர் ப்ரார்த்தனையை அங்கீகரிக்கவேண்டுமென்று ஸ்வாமியை வேண்டினர்கள். ஸ்வாமி அவரைக் கிட்டவரச் சொல்லி மந்த்ரோபதேசம் செய்தனர். காஷாயத்தை எடுத்து அவரிடம் கொடுத்தார். எல்லாரும் த்ருப்தி யடைந்தார்கள். ஸ்வாமிக்கும் தொந்தரவு நீங்கிற்று.

## பதிமூன்றுவது அதிகாரம்.

வைஶாக உத்ஸவம் ஸமீபித்துவிட்டது. அதைக்காட்டும் பலவித ப்ரயத்நங்களை ஊர் ஜநங்கள் மேற்கொண்டனர். பரீக்ஷைகொடுத்துவிட்டு ஸ்ரீநிவாஸன் மாதா பிதாக்களுடன் வந்து வஸித்தான். அம்மான் இல்லத்துக்குப் போனனில்லை. ஆகிலும் ஸந்நிஹித பந்துக்களை முற்றிலும் காணமல் விடத் துணிந்தானில்லை. அவ்விடம் செல்ல ஜநகநந்தினியும் அவனுக்கு ஓர் ஆகர்ஷகமாயிருந்தாள். ஆழ்வார் திருநாள் வரவும், ஸந்நிதி வீதியில் வாஸம் செய்பவர், வைஷ்ணவக்ஷேத்ரை அநுயாதரையாகப் பின்தொடர்ந்தார்கள். ஸ்ரீநிவாஸனும் கூட நடந்தான். கேசவாசார்யர் வீதியிலிறங்கி மன்னாதனை வந்தனம் செய்துவிட்டு, வேதம்காஷ்டியைச் சேர்வதற்குச் சென்றார். வழியில் ஸ்ரீநிவாஸனைப் பார்த்தார். “ஸ்ரீநிவாஸா! நீ வந்திருப்பதாய்ச் சொன்னர்கள். ஏன் எங்கள் க்ருஹத்துக்கு வாராமலிருந்தாய்? உன் யோக க்ஷேமத்தைப்பற்றி ஸாவகாசமாய் விசாரிக்கின்றேன்” என்று சொல்லிவிட்டு நடந்தார்.

திருவடி ஸந்நிதியண்டையில் ஸ்ரீநிவாஸன் நின்றுவிட்டான். திரும்புங்கால அம்மான் இல்லத்துக்குள் சென்றன். ஹரிப்ரியையும ஜநகநந்தினியும் உட்கார்ந்திருக்கக் கண்டான்.

“ஸ்ரீநிவாஸா! நீ பெருமாள் கோவிலுக்கு வந்து, ஏன் எங்கள் அகத்துக்கு வரவில்லை? உன் வாசிப்பெல்லாம முடிந்ததா?” என்று ஹரிப்ரியை சொன்னள்.

“வாசிப்புக்கு முடிவு உண்டோ? உத்தேசித்தமட்டில் வாசித்தேன்; பரீக்ஷை கொடுத்தேன்; அதில தேறின விஷயம் இன்னும் தெரியவில்லை. திருக்குடந்தை வாஸம் செய்தேனென்பது உங்களுக்குத் தெரிந்திருக்குமே. அங்கே ஜநகத்தின் பர்த்தாவைப் பார்த்தேன்” என்று ஸ்ரீநிவாஸன் சொன்னன்.

ஸ்ரீநிவாஸா! மாப்பிள்ளையைப் பார்த்தையோ? அவர் ஸுக மாயிருக்கிறாரா?'' என்று கேட்டாள் ஹரிப்ரியை.

"ஸுகமாய் இருக்கின்றார். மஹா ப்ரஹ்மவித்தாய் இருக்கின்றார். அவர் முகத்தில் ப்ரஹ்ம தேஜஸ் ஜ்வலிக்கின்றது" என்றான் ஸ்ரீநிவாஸன்.

"ஸ்ரீநிவாஸா! அவரோடு வார்த்தை சொன்னையோ?" என்றாள் ஹரிப்ரியை.

"அவருடன் வார்த்தை சொல்லுகிறதா? அவர் ஸ்வர்ணச்சாயையுடன் அக்நிதேவன் மூர்த்தீகரித்து வந்ததுபோல் ப்ரகாசிக்கின்றார். அவரை நான், என்வேஷத்தோடு எவ்வண்ணம் நெருங்கக்கூடும்? எனக்கு அவருடைய தர்சநமாத்ரம் ப்ராப்தமாயிற்று" என்று சொன்னான் ஸ்ரீநிவாஸன்.

ஹரிப்ரியை அந்தச் சொற்களைக் கேட்டாள். ஸந்தோஷத்துடன் துக்கமும் கொண்டாள். வைஸ்வாநரஸமனாய் மாப்பிள்ளை இருக்கின்றாரென்று ஸந்தோஷம்; ஜநகத்தை அழைக்காமலிருக்கின்றாரென்று துக்கம். இவ்வண்ணம் அவள் நிற்கையில், "ஜநகத்துக்கு வயஸாச்சுதே! ஏன் அவளை அவள் பர்த்தா அழைத்துக் கொள்ளவில்லை?" என்று கேட்டான் ஸ்ரீநிவாஸன்.

"அதுதான் எங்கள் கஷ்டம். எத்தனைதரம் எழுதினாலும் ப்ரத்யுத்தரம் தருகின்றதில்லை. பத்மநாபாசார்யரும் உப்பிலியப்பன் கோவிலுக்குப் போய்வந்தார். பெண்ணை அழைத்துக்கொள்வதைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லையாம். எங்களுக்குப் பகவான் கொடுத்தது ஒரு குழந்தை. அவள் பெண்ணாய்ப் பிறந்தாள். அவளுடைய ஸுகம் அம்பர்களுடைய ஆத்மமாயிருக்கின்றது. அவ்வளவு வாசித்தவராயும் விவேகியாயும் இருப்பவர், எங்களை ஏன் இப்படி துன்பப்படுத்துகின்றாரோ தெரியவில்லை! எங்களுக்கு நல்லகாலம் எப்போது உண்டாமோ?'' என்று சொன்னாள் ஹரிப்ரியை.

அதைக்கேட்டு ஸ்ரீநிவாஸன் ஸந்தோஷித்தானில்லை. 'ஜநகநந்தினியைப் பத்நியாகப் பெற்று விஸ்வஸிக்காமலும் ஒரு புருஷன் இருப்பனோ' வென்று யோசித்தனன். இதற்குள் ஹரிப்ரியை

"ஸ்ரீநிவாஸா! உனக்கு விவாஹத்தில் விருப்பமில்லையா? வயதா யும் ஏன் இப்படி இருக்கின்றாய்?" என்று கேட்டாள்.

"இப்போது கல்யாணயோசனை இல்லை. பின்னால் யோசிக்க லாம்" என்று சொல்லிவிட்டு ஸ்ரீநிவாஸன் புறப்பட்டுப்போ னான். போகுங்கால் ஜநகத்தைப் பார்த்தான். அவள் முகத்தில் நூதனமாக ஒரு வாட்டத்தைக் கண்டான். சித்தத்தில் வருத்தம் கொண்டான். ஜநகத்துக்கும் தனக்கும் ப்ரஹ்மசர்யந்தான் ஈஸ்வ ரன் விதித்திருக்கின்றதுபோல் அவனுக்குத் தோன்றிற்று.

மறுநாள் காலை ஸ்ரீநிவாஸன் வீட்டின் குறட்டின்மேல் நின்றி ருக்கையில் தபால்காரன் வருவதைக் கண்டான். தபால்காரன் ஸ்ரீநிவாஸனிடம் ஒரு கடிதம் கொடுத்தான். ஸ்ரீநிவாஸன் அதைப் பிரித்துப் பார்த்தான்.

"உன்னுடைய மாமா கேசவாசார்யர் மாப்பிள்ளை இன்று துர் யாஸ்ரம ப்ரவேச நிமித்தம் ஸங்கல்பித்துக்கொண்டு ஜீவஸ்ராத் தம் செய்வித்துக்கொள்கின்றார். நாளை உதயம் ப்ரேஷ மந்த்ரோ ச்சாரணம் செய்வார். இந்தத் துக்க ஸமாசாரத்தை அந்தஸ்வாமிக் குத் தெரிவித்துவிடு" என்று ஆதிவராஹாசார்யர் எழுதியிருந் தார்.

ஸ்ரீநிவாஸன் ப்ரமைகொண்டான். திண்ணைமீது உட்கார்ந் தான். அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. பெருமாள் மண்டபத் திற்கு எழுந்தருளியிருந்தார். வீதியில் ஜநங்கள் குறைந்து ஸஞ்ச ரித்தார்கள். அவர்களையும் பார்க்க ஸ்ரீநிவாஸன் ஸஹிக்கவில்லை. எழுந்து வேகவதியாற்றை நோக்கிச் சென்றான். ஒரு விவிக்த ப்ர தேசத்தில் மரத்தின் நிழலின்கீழ் அமர்ந்தான். எண்ணமிடத்தொ டங்கினான் :—

"வரதா! நீ வரதர்ஷபனா? இப்படியா ஜநகநந்தினிக்கு வரம் தந்தாய்? 'நிஹீந ஜநவிஷயீ தா விவாஸந வடோ: கரு ணா கருதஷெ" என்று உன்னை வர்ணித்தாரன்றோ? பூர்ண கர்ப் பிணியும் பதிவ்ரதையுமான ஸீதையைக் காட்டுக்கு அனுப்பத் து ணிந்த உனக்கும் தயையுண்டோ? உனக்குப் பேரருளாளன் என்று பெயர் வைத்தார்களே! இது மாத்ரமா? பத்து மாஸம் உடுத்த

வஸ்த்ரம் களையாமல் சிறையிருந்த தபஸ்விநியான தேவி, நீ அவ்வண்ணமே தன்னைக் காணவேண்டுமென்று கேட்டுக்கொண்டும், அவளை ஸ்நாநம் பண்ணுவித்து, ஸர்வாலங்கார பூஷிதையாய் உன் பக்கல் வரவழைத்து, ஜநக்கூட்டத்தின் முன்பாகப் பருஷோக்திகள் சொல்லித் திப்பாயச் செய்தனையன்றோ? தேவர்களும் இதைக் கிட்டுப்போய், "உபேக்ஷஸே கயம் ஸீதாம் பதந்தீம் ஹவ்யவாஹநே" என்று உன்னை வினவவில்லையா? இவ்வண்ணம் நிர்க்ருணனான நீ ஜநகநந்தினியின் துயரத்தைக் கண்டும் ஸஹிக்கமாட்டாயோ? ஸீதையின் பெயரை அவள் கொண்டாளென்று தான் நீ அவட்கு இக்கொடுமை புரிந்தனையோ?"

*　　*　　*　　*　　*　　*

"கண்டிலரிக் காசினியில் கொடியாயுந்தன்
　　கல்நெஞ்சம் பலகால்நீ காட்டிநின்றும்
பண்டரக்கன் புலிநுகரும் பசுவென்னத்தான்
　　பாவைதனைக் கொண்டுசெலப் பார்த்துநின்றாய்
கொண்டமனைக் கிதுசெயுநின் கொடுமைமறந்தோர்
　　கூரழலில் விழவுமிரங் காதேகூறில்
மண்ணையுடைத் தயிருண்ணுமக் கள்வர்தாமும்
　　மாதவநின் கடுமையிலர் மறைமுன்நின்றாய்."

இவ்வண்ணம் உன்னைப் பாடினது உண்மையன்றோ?

"ப்ராணதார்த்திஹர! அது உன் பிருதன்றோ? ஜநகநந்தினி உன்னைப் பக்தியுடன் வணங்கவில்லையா? அவள் துக்கத்தை நீ இனி எவ்வண்ணம் போக்கப்போகின்றாய்? அவள் புருஷன் இனி க்ரஹஸ்தராகமாட்டாரே! நீ உத்ஸாஹம் பூண்டு உத்ஸவம் கண்டருளுகின்றாய். அவளோ துடிக்கப்போகின்றாள். பரம பாகவதரான என் அம்மானை நீ இப்படிப் பரீக்ஷிப்பையோ? நிர்தோஷையான அவர் பத்நிக்கு இனி என்ன கதி?

"இதோ இந்த வேகவதியைப் பார்! ப்ராணனற்றும் செயலற்றும் கிடக்கின்றதே! ஜநகநந்தினி துயர்க்கடலில் ஆழவே அருக்கனும் கோபங்கொண்டு பூவுலகைக் கொளுத்துகின்றானே! அவள் துன்பப்படவே ஒரு பக்ஷியாவது கூவுகின்றதா பார்! மரங்களில்

ஓரிலையாவது அசைகின்றதா பார்! அதோ கால்நடைகள் புல்லைத் தொடாமல் வ்யஸநத்துடன் நிற்கின்றனவே! உலகமெல்லாம் துயர்கொள்ள நீ உத்ஸவம் கொள்கின்றனையே!

“ஐயோ! நான் என் செய்வேன்! துக்கம் வந்துவிட்டது. இங்கு நான் என்னை மீட்டுக்கொண்டிருந்தால் அவர்களுக்கு இதை யார் சொல்வார்கள்? எனக்கு இனி என்ன பிழைப்பு! அவள் ஸௌக்யப்படக் கண்டு யான் ஸுகங்கொள்ள எண்ணினேன். அவளைத் தர்சித்துக் களிக்க எண்ணினேன். என்றாகிலும் அவளுடன் ஒரு வார்த்தை சொல்லி அதை நினைந்து நினைந்து ஜீவிக்க எண்ணினேன். ஆஹா! என்ன காலம் வந்துவிட்டது! ஜநநம்! இதற்காகவா நீ பிறந்தாய்? இதற்கா உன்னை ஈச்வரன் அவ்வளவு அழகுடன் அமைத்தான்? இதற்கா உன் பிதா உனக்கு அத்தகைய ஜ்ஞாநமளித்தார்? இதற்குத் தானா உத்தம குணங்கள் யாவும் உன்னிடம் குடிகொண்டன?”

இவ்வண்ணம் சிந்தித்துச் சிந்தித்துப் பொழுதுபோக்கினான். நாழிகை இருபது ஆயிற்று. மீண்டும் வீட்டுக்குப் புறப்பட்டு வந்தான். வீத்திண்ணையில், பெருமாளுடன் திரும்பிவந்த பிதா வரதாசார்யர் உட்கார்ந்திருந்தார். ஸ்ரீநிவாஸனைப் பார்த்தவுடன், ‘எங்கே போய்விட்டாய்? இதுவரையில் உனக்கு ஆஹாரத்திலும் இச்சையற்றதா?’ என்றனர்.

ப்ரத்யுத்தரம் தராமல் ஸ்ரீநிவாஸன் வீட்டிற்குள் நுழையப் போனான். அவன் முகத்தை ஸமீபத்தில் நோக்கி, “என்ன ஸ்ரீநிவாஸா! உன் முகம் கலங்கி இருக்கின்றதே! கண்கள் செவந்திருக்கின்றனவே! ஓஹோ! நீ மிகவும் கண்ணீர் விட்டிருக்க வேணும். என்ன ஆபத்து வந்துவிட்டது?” என்று அவன் பிதா மொழிந்தார். ஸ்ரீநிவாஸன் தனது கையில் விடாது பற்றியிருந்த கடிதாசியை நீட்டினான். வரதாசார்யர் அதை வாங்கி வாசித்தார். முகம் குன்றி உட்கார்ந்தவண்ணம் இருந்து விட்டார்.

ஸ்ரீநிவாஸன் வீட்டினுள் புகுங்கால், அவன் மாதா சநகவல்லி அவனை ப்ரதீக்ஷித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவன் சாப்பிடாதபடியால் அவளும் சாப்பிட்டாளில்லை. ஸ்ரீநிவாஸனைக் கண்டவுடன், “குழந்தாய்! உண்டியை மறந்து எங்கே திரியப்

போனாய்?" என்றனள். உடனே அவன் முகத்தைப் பார்த்து, "ஏன் அழுகின்றாய் ஸ்ரீநிவாஸா!" என்று கேட்டாள்.

"ஜநகத்தின் அகமுடையான் ஸந்யாஸம் செய்துகொள்ளுகின்றானென்று கடுதாசி வந்தது" என்றனன் ஸ்ரீநிவாஸன்.

"அடி என் கண்ணே! உனக்கிது தலைவிதியா?" என்று கூவிப் புலம்ப ஆரம்பித்தாள். ஸ்ரீநிவாஸனும் கண்ணீர் சொரிந்தான். வாசலில் வரதாசார்யர் உட்கார்ந்துகொண்டே இருந்தார். ஸ்ரீநிவாஸனும் அவன் மாதாவும் தம் பசியை மறந்தார்கள். இவ்வண்ணம் சிலகாலம் கழிந்தது. கநகவல்லி தன் தமையன் இல்லத்துக்குப் போகப் புறப்பட்டாள். வீதித் திண்ணையில் இருந்த வரதாசார்யர் அவளைப் பார்த்தார். "கண்ணைத் துடைத்துக்கொள். வீதியில் உன்னைப் பார்ப்பவர்கள் என்னவென்று கேட்கும்படிச் செல்லாதே. ஊரில் கலக்கத்தை உடனே உண்டாக்கிவிடாதே. வந்தது வந்துவிட்டது. இனி அதை மாற்ற எவர்க்கு பொருந்தும்? புத்திமான்கள் தம் உள்ளம் அடைந்த துக்கத்தை வெளிக்காட்டமாட்டார்கள்" என்று பத்நிக்கு வரதாசார்யர் உபதேசித்தார்.

கநகவல்லி கேசவாசார்யர் க்ரஹத்துக்குள் சென்றாள். ரேழியில் உட்கார்ந்திருந்த தமையனைப் பார்த்தாள். கண்ணீர் விட்டாள். "ஏன் அழுகின்றாய்?" என்று கேட்டார் கேசவாசார்யர். "ஜநகத்தின் அகமுடையான் ஸந்யாஸியாய்ப்போனாராம்" என்று சொன்னாள் கநகவல்லி. "ஆர் அப்படிச் சொன்னது?" என்றார் கேசவாசார்யர். "ஸ்ரீநிவாஸனுக்குத் திருக்குடந்தையிலிருந்து கடுதாசி வந்தது" என்றனள் கநகவல்லி. கேசவாசார்யர் தலைகுனிந்தார். மற்றொன்றும் பேசினாரில்லை. இவ்வார்த்தைகளை உள்ளே இருந்த ஹரிப்ரியையும் ஜநகநந்திநியும் கேட்டார்கள். ரேழியை அடுத்த தாழ்வாரத்தில் வந்து நின்றார்கள். கநகவல்லி உள்ளே சென்றாள். அவளும் ஹரிப்ரியையும் உட்கார்ந்து புலம்பினார்கள். கண்களில் அவர்க்கு நீர் ஆறாகப் பெருகியது. துக்கபிரமமான வார்த்தைகள் அவர்க்குள் வளர்ந்தன. ஜநகநந்திநியோ கநகவல்லி உள்ளே நுழையவும் அறைக்குள் சென்றாள். நடந்தவற்றை நன்கு அறிந்தாள். தனக்குப் பதிஸம்யோகம் இல்லையென்று அறிந்தாள். பதியினுடைய தர்சநமும் தனக்கு இனி நேர்

பட்டாரென்று தெரிந்துகொண்டாள். பதிசுச்ருஷணம் என்று லோகத்தார் சொல்வதும், ப்ராப்தமாகப் போவதாய்த்தான் நீண்டகாலமாக எண்ணியிருந்ததும், இனி எண்ணத்தகாத தென்றும் எண்ணினாள். ஆனால் விஷபஸங்கமென்பது அவள் சிந்தைக்கெட்டியதன்று. அவள் பெற்ற ஜ்ஞானத்தாலும் அவளுக்கு நேர்ந்த ஸம்ஸர்க்கத்தாலும், அதைப்பற்றிச் சிந்திக்க அவளுக்கு அவகாசம் உண்டானதில்லை. ஆகலால் இழந்துபோனதை அவள் தெளிவாய் க்ரஹித்திலள். லோக வழக்கத்தில, பதிவியோகத்தைக் காட்டிலும் ஸ்த்ரீகளுக்குப் பெரிதான துக்கமில்லையென்று சொல்வது அவளுக்குத் தெரியும். அது அவர் உயிர்த்திருக்கையிலேயே அவளுக்கு ஸம்பவித்து விட்டது. இது இவ்வகைப்பட்டது என்று பூர்ணமாக அறிவதற்கு இடமின்றியே, ஒரு பெரிதான விபத்து வந்துவிட்டது என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள்.

அவ்வண்ணமே ஸ்ரீநிவாஸனும் அவன் வீட்டில் துக்கித்துக் கொண்டிருந்தான். உலகவழக்கில் அவனுக்கு அத்தகைய துக்கம் உண்டாகக் காரணமில்லை. ஆனால் ஜநகநந்தனி அவனுடைய ஹ்ருதயத்தில் நிலைத்துவிட்டாள். அவளுடைய துக்கமெல்லாம் அவனுடைய துக்கமாய்ப் பரிணமித்தது. இருவர்க்கும் அதற்குப் பரிஹாரமாக ஒரு உபாயம் யோசிக்கவும் இடமில்லை.

"ஜநகநந்தினியின் அழகும் கல்வியும் மஹாஸுக்ருத பலம். அவள் ஸகல நற்குணமும் பொருந்தியவள். குற்றமற்றவள். மஹாஸுக்ருதம் செய்த புருஷனன்றோ அவளை யடைய வேண்டும். அடைந்தும் விட்டவன் ஜந்மாந்தர துஷ்க்ருத பலத்தை அடைந்தவனே. தானும் கெட்டு அவளையும் கெடுத்தானே! இவ்வளவு நன்றாக அவளை அமைத்து ஈச்வரனும் கெடுத்தானன்றோ? அவள் துக்கத்தில் மூழ்க, யானும் அதில் மூழ்கினவனே!" என்றிப்படி ஸ்ரீநிவாஸன் தன் இல்லத்தில் உட்கார்ந்து யோசித்தனன்.

ஹரிப்ரியையும் கமலவல்லியும் குரல்விட்டு அழுதாரில்லை. ஆகிலும் துக்கத்தால் எழுந்த அவர்களுடைய வார்த்தைகள் அண்டை அசல் வீட்டார்க்குத் தெரிந்தன. கேசவாசார்யருக்கு உண்டான சோகம் பல விபரர்களை வருத்தியது. ஸ்த்ரீகள் ஸ்த்ரீகளுக்கு உபசார வார்த்தைகள் சொல்வதற்காக அவர் க்ரஹத்தில் வந்து கூடினார்கள். பண்டிதர்கள் கேசவாசார்யரை வந்து பார்த்

தார்கள். உபசாரோக்திகள் மொழிந்தார்கள். ஒருவர்க்கும் ஒரு வார்த்தைகூட அவர் சொல்லவில்லை; அவர் கண்ணீர் விட்டாரில்லை. வந்தவர்க்குள் பத்மநாபாசார்யர், "தேவரீர்க்கு இந்தக் கஷ்டம் நேரிட அடியேன் வ்யாஜமானேன். அன்று அவர் நடந்த வகையிலும் வார்த்தை சொன்ன ப்ரகாரத்திலும் நல்ல காலம் வர மாட்டாதென்று அறிந்துகொண்டேன். இந்தப் பெண்ணை இவ்வண்ணம் கெடுத்துவிட அவர்க்கு எப்படி மநஸ் துணிந்ததோ? இதற்குப் பரிஹாரம் சொல்ல யார்க்கு முடியும்? தேவரீர்க்கு ஸர்வார்த்தங்களும் ஸித்தங்கள். ஜநகத்துக்கு அத்யாத்மவித்யாப்ரதாநம் செய்திருக்கின்றது. நீங்கள் இருவரும் தத்வஜ்ஞாந வ்யபாஸ்ரயர்களாய் நின்று இந்த துக்கத்தை த்யஜிக்க வேண்டும். அதற்கு வரதன் ஸஹாயபூதராய் நிற்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கின்றேன்" என்று சொன்னார்.

இவ்வண்ணம் ஸாயங்காலம் வரையில் காலம் கழிந்தது. கேசவாசார்யர் எழுந்தார். அநந்த ஸரஸ்ஸுக்குச் சென்று ஸந்த்யாவந்தநம் முதலான கைங்கர்யங்களைச் செய்து முடித்தார். பகவான் ஸிம்ஹவாஹநமீதேறித் திருவீதி யலங்கரித்தான். கேசவாசார்யர் வேதபாராயண கைங்கர்யத்தில் வழக்கப்படி அந்வயித்தார். வரதாசார்யர் பார்யை, பெருமாள் எழுந்தருளு மட்டும் வீடுவந்து சேர்ந்தாளில்லை. குமாரனைத் தனியே விட்டுவிட்டுப் பெருமாளுடன் செல்ல வரதாசார்யர் இஷ்டப்படவில்லை. பெருமாள் திருவடி கோவில் ஸமீபத்தில் எழுந்தருளினார். சிறிது காலம் அவ்விடம் நிறுத்தப்பட்டார். ஆனால் கேசவாசார்யர் பார்யையும், கநகவல்லியும், ஜநகநந்திநியும் பகவத் ஸேவார்த்தம் வெளியில் வந்தாரில்லை. அவர்களுடைய துக்கம் அதற்கோர் காரணம். மநம் கலங்கியவர்க்கு முகமும் கலங்கியது. அப்படிப்பட்ட முகங்களுடன் வீதிப்புறம் வர அவர்கள் இஷ்டப்பட வில்லை. அவ்வண்ணம் யாவராலும் பார்க்கப்படும்படியாக வெளிவர ப்ரியப்பட்டாரில்லை. பெருமாளும் மண்டபமேற எழுந்தருளிவிட்டார்.

அன்றிராத்திரி கேசவாசார்யர் திரும்பிவந்தவுடன் ரேழியில் படுத்துக்கொண்டார். ஜநகம் அப்போது அவர் ஸமீபத்தில் வந்து நின்றாள். "குழந்தாய்! உன் விஷயமாக நான் எண்ணியிருந்தவற்றை ஸரண்யன் திருவுள்ளம் பற்றவில்லை. "கநேந்த்ரா

ஹ்ருஜ்ஜு விம்தயதி ஸூக்ஷ்மம் விஷயாஸ்ருஹம்" என்று அவன் மொழிந்ததாகப் பெரியவர்கள் சொல்வார்கள். ஸ்வாதந்த்ரியத்தால் செய்தானென்றால நைர்க்ருண்யம் அவனைத் தொடரும். அதை அவன்மேரில் சுமற்ற வொண்ணாது. கர்மாத்யக்ஷன் கர்மாநுரூப பலங்களைத்தான் தருவன். இப்படி நமது கர்மம் சிகையறுகின்றதென நாம் ஸந்தோஷிக்க வேண்டுமென்று நீ கேட்டிருக்கின்றாய். பகவான் என்றும் நமக்கு ஹிதத்தையே செய்கின்றான் என்று உனக்குத் தெரியும். உனது புத்தியால் உன் மநஸ்ஸை த்ருடப் படுத்திக்கொள். இப்படி உனக்கு ஸமாதாநம் ப்ரயத்நத்தால் உண்டாக வேண்டும். வரதன் உன்னை ரக்ஷிக்கட்டும்" என்று கேசவாசார்யர் சொன்னார். அன்றிராத்ரி அந்த க்ருஹத்தில் நெருப்பு மூட்டப்படவில்லை.

## பதினாலாவது அதிகாரம்.

வைசாக உத்ஸவம் வழக்கப்படித்தான் நடந்தது. வேதகோஷ்டியும் அவ்விதமே நடந்தேறிற்று. அத்யாபக கோஷ்டிகளும் அப்படியே. போலீஸ் கோஷ்டியும் பழையபடியே. கலகங்களும் முன் போலவே. அதிகாரிகளும், அயலூர்களைக் காட்டிலும் அவ்வூரில் தம் உத்யோகம் பெருத்ததாக வெண்ணி வ்யாபரித்தார்கள். ஸேவார்த்திகளின் கூட்டமும் முன்போலவே தான். பகவானும், நவம்நவமாகவும் அதிகம் அதிசயமாகவும் திருமேனியின் சோபையைத் தரித்தான். ஒன்றும் குறைவுபட்டதன்று. ஆகிலும் இவை யாவும் காணிடை வந்த கருத்துடையார்களான கேசவாசார்யர் இல்லத்தவர்க்கும் ஸ்ரீநிவாஸனுக்கும் களிப்பளிக்கின்றன வில்லையே! வஸ்துக்கள் வஸ்து ஸ்வபாவத்தால் ஸுகாகாரமாகவும் துக்காகாரமாகவும் பரிணமிப்பதில்லை. போக்தாவின் சித்த ஸ்வபாவத்தால் அவற்றிற்கு ஸுகதுக்க ஹேதுத்வம் சொல்லப்படுகின்றது. வஸ்துக்களை த்யாகம் செய்ய ஸமர்த்தர்க்குப் பரமார்த்த வஸ்துவான வரதன் எத்துணையும் பரமபோக்யமான பொருள் ஆகின்றான். அந்த மனோநிலை ப்ரயத்நத்தாலும் அப்யாஸத்தாலும் யாரோ ஒருவர்க்கு உண்டாகத்தக்கது. அப்படிப்பட்ட அதிகாரி கேசவாசார்யர். ஆகிலும், அவர் ஜநகத்தை நினைத்தாராகில் உடனே கொஞ்சம் சித்தகாலுஷ்யம் அடைவர்.

ஜநகம் ஸந்மார்க்கத்தில் வளர்க்கப்பட்டாள். அவள் பாரமைகாந்த்யத்தை அடைவதற்குத் தக்க ஸாமக்ரியை ஸம்பாதித்தாள்.

ஆனாலும், ப்ரக்ருதி ஸம்பந்தம் எளிதில் ஜயிக்கக்கூடியதன்று. தனக்கு நேர்ந்த கஷ்டத்தை நினைத்து நினைத்து உருகுகின்றாள். ஆகாரத்தில் ருசிகொண்டாளில்லை. நித்ரை அவளுக்கு ஸுலபமாக வந்ததில்லை. அவள் வேண்டுமென்று இச்சிக்காமலே அவளுடைய சரீரம் இளைத்தது. வேற்றெங்கும் காணாதவண்ணம் அவள் முகத்தில் விளையாடிய காந்தியானது குறைவுபட ஆரம்பித்தது. அதைக் கேசவாசார்யர் கண்டார்; வருத்தம் கொண்டார். அதற்குத் தக்க பரிஹாரம் அவர் யோசனைக்கு எட்டவில்லை.

உத்ஸவம் கழிந்தபிறகு ஒரு நாள் மத்யாஹ்நம் கேசவாசார்யர் நடைத் திண்ணைமீது உட்கார்ந்து புஸ்தக நிரீக்ஷணம் செய்துகொண்டிருக்கையில், ஜநகநந்தினி வந்து ஸேவித்தாள்; எழுந்து நின்றாள்.

"குழந்தாய்! என்ன வேண்டுகின்றாய்?" என்றனர் கேசவாசார்யர்.

"அப்பா! என் மநஸுக்கு ஆறுதல் உண்டாகவில்லை" என்று சொன்னாள் ஜநகநந்தினி.

"பகவத் பக்தி வளரவும் வைராக்யம் நிலைப்படவும் ஸ்ரீபாகவதம் வாசிக்கலாமே! முன்னமே என்னிடம் அதை நன்றாய்ப் படித்திருக்கின்றாயே! ஸர்வ லோகத்தார்க்கும் ஹ்ருதயங்கமனான வாஸுதேவன் திவ்ய கதைகள் உனக்குச் சித்த ஸ்வாஸ்த்யத்தை அளிக்குமே ஸ்ரீ பகவத் விஷயத்தைச் சிந்திக்கக் கூடாதோ! ஆழ்வாருடைய அநுபவத்தில் ஏகதேசம்கூட பரமசாந்தியை உனக்கு உண்டாக்குமே! மாயையின் சட்டைத் தளரச்செய்யுமே! பகவானுடைய ஸர்வாங்க ஸௌந்தர்ய ப்ரத்யக்ஷத்தையும் தந்திடுமே! நாமிருவரும் சேர்ந்து பகவத்அநுபவம் செய்யலாமா?" என்று கூறினர் கேசவாசார்யர்.

"இதெல்லாம் செய்யலாம். என் சித்தம் என்னை அந்த வழிகளில் போகவொட்டாது. அவ்விதம் ப்ரயத்நம் செய்தேன். அது முடியவில்லை. இன்னவிதமென்று தெளியவொட்டாமலே ஒரு க்லேசம் என் உள்ளத்தில் குடிகொண்டது. எவ்வளவு படித்தாலும் எவ்வளவு கேட்டாலும் அதற்குப் பரிஹாரம் உண்டாக மாட்டாதுபோல் தோன்றுகின்றது. எனக்கு வேறு ஆஸ்ரய

யிலது. ஆதலால் தேவரீரை இவ்வண்ணம் வருத்துகின்றேன்" என்று ஜநகநந்திநி சொன்னாள்.

கேசவாசார்யர் அச்சொற்களைக் கேட்டார். என் செய்வர்? எவ்வளவு தத்வஜ்ஞாநம் ஸம்பாதித்தால் என்ன? அந்த ஸமயத்துக்கு அது உதவவில்லை. அவர் பெற்றெடுத்த கண்மணியானவள் சோகத்தில் மூழ்கி எதிரே நின்றாள். அவர் வித்யாப்ரதாநம் பண்ணின பெண்மணியானவள் ஒரு போக்கும் அற்றவளாய் அவரைப் பரிஹாரம் கேட்கின்றாள். எவ்வளவு தூரம் யோசித்த போதிலும் உலகவழியில் அவளுக்குப் பரிஹாரம் இல்லை.

"அம்மா! உனக்காக நான் என்ன செய்ய வேண்டுகின்றாய்? இந்த லோகத்தில் நம்மைக் காப்பாற்றுவார் இல்லை. பேருளாளனைச் சரணமடைவாயாக. அவனைத் தவிர நமக்கோர் துணையில்லை" என்று சொன்னார்.

"அப்பா! இங்கே இருக்க எனக்கு ப்ரியமில்லை. தேசாந்தரம் போவோம். நூதநமான காட்சிகளைக் கண்டு என் துக்கத்தை ஸமிப்பிக்கப் பார்க்கின்றேன்" என்று சொன்னாள் ஜநகநந்திநி.

"குழந்தாய்! திவ்யதேசயாத்ரை செய்யலாமா? அங்கங்கே சென்று பெருமாளுடைய திவ்ய மூர்த்திகளுடைய தர்சநம் செய்யலாமா?" என்று கேட்டார் கேசவாசார்யர்.

"அதைத்தான் வேண்டுகின்றேன்" என்றாள் ஜநகம்.

"அம்மா! அப்படியே செய்வோம்" என்றார் கேசவாசார்யர். ஜநகம் உள்ளே போனாள்.

கேசவாசார்யர், பிறந்த நாள் முதல் காஞ்சீபுரத்தை விட்டு வெளியில் சென்றதில்லை. அவர் உபாஸித்த தெய்வம் வரதனே. மற்றோரிடத்தில் பகவானுடைய அர்ச்சாரூபமான மூர்த்தியை அவர் தர்சித்ததில்லை. ஶகடம் ஏறினதில்லை. தேசாந்தர ஸஞ்சாரம் செய்ய அவர் அத்யந்தம் அஶக்தர். என் செய்வர்! வழக்கப்படி அன்றிராத்திரி பகவத் ஸந்நிதிக்குப் போகும்போது, பத்மநாபாசார்யருடன் யோசிப்பதாக எண்ணி முடித்தார்.

ராத்திரி ஸந்நிதியில் கேசவாசார்யரைப் பத்மநாபாசார்யர் பார்த்து. "ஸ்வாமிந்! குழந்தை என்னமா யிருக்கின்றாள்?" என்று விசாரித்தார்,

"கஷ்டப்படுகின்ருள்; ஆஸ்வாஸநம் இல்லை. எங்கேயாவது போகவேண்டுமென்று சொல்லுகின்ருள்: திவ்ய தேச யாத்ரையாக அழைத்துக்கொண்டு போவதாய்ச் சொல்லி ஸமாதாநப்படுத்தியிருக்கின்றேன். அதை எப்படி ஸாதிப்பேனே தெரியவில்லை" என்று கேசவாசார்யர் சொன்னர்.

"தேவரீருக்கு அது மிகவும் கஷ்டமாச்சுதே. தேச ஸஞ்சாரமென்பதே தேவரீர் அறியமாட்டாதே. தூமசகடம் ஏறி ப்ரயாணம் செய்ய ஸம்மதிக்குமோ?" என்ருர் பத்மநாபாசார்யர்.

"தூமசகடம் ஏற எப்படித் துணிவேன்? அதனல் ஸம்பவிக்கும் தீட்டையும் எச்சிலையும் எவ்வண்ணம் ஸஹிப்பேன்? லோகத்தார் பழிப்பு ஒரு பக்கம் இருக்கட்டும். அடியேனுக்கு நினைக்க அருவருப்பா யிருக்கின்றதே" என்று சொன்னர் கேசவாசார்யர்.

"கஷ்ட காலங்களில் மஹரிஷியர்களும் விதியில்லாமல் தூமசகடம் ஏறுகின்ருர்கள். இது தேவரீர்க்குக் கஷ்டகாலமே. ஆனலும் தேவரீர் தனியே ப்ரயாணிக்க முடியாது. அடியேன் தேவரீருடன் வருகின்றேன். தேவரீருடைய யசஸ்ஸு விபுலமானது. அதைக்கொண்டு தேவரீரை யதாஸுகம் அழைத்துக்கொண்டு போகின்றேன்" என்று சொன்னர் பத்மநாபாசார்யர்.

"தேவரீருடைய யோகக்ஷேமங்களை யெல்லாம் கைவிட்டு அடியேனுடன் ப்ரயாணிக்க ஸம்மதிக்கின்றதே! தேவரீரைப் போல் பரம ஸுஹ்ருத் யாருண்டு? தேவரீருடைய உபகாரத்தை நிராகரித்து ப்ரயாணம் செய்யவும் அடியேன் அசக்தன்" என்று கேசவாசார்யர் சொன்னர். இவ்வண்ணம் திவ்ய தேசஸஞ்சாரம் ஜநகநந்திநிக்கு அமைந்தது.

ஒரு வாரத்துக்குள்ளாகக் கேசவாசார்யரும் ஹரிப்ரியையும் ஜநகநந்திநியை அழைத்துக்கொண்டு ப்ரயாணப்பட்டார்கள். ஜநகநந்திநியின் கலியாணத்துக்கும் கஷ்டத்துக்கும் தாம் வ்யாஜமாக நினைத்த பத்மநாபாசார்யரும், கேசவாசார்யரிடம் தமக்குண்டாயிருந்த பரமஸ்நேஹத்தின் காரணத்தையிட்டு அவர்களுடன் ப்ரயாணப்பட்டனர். அவர்கள் ப்ரயாணம் செய்த க்ரமத்தால் தூமசகடத்தின் நிர்ப்பந்தங்களை விசேஷமாக அநுபவிக்காமல் சென்ருர்கள்.

முதலில் ஸ்ரீமதுராந்தகம் வந்து சேர்ந்தார்கள். ஸ்நானார்த்தம் யாவரும் அந்த ஊர் தடாகம் சென்றார்கள். ஜநகம் தடாகத்தைப்பார்த்தாள். அவ்வளவு விஸ்தாரமான ஜலாசயத்தை அவள் என்றும் கண்டவள் அல்லள். அதைக் கண்டு அவள் விஸ்மயம் கொண்டாள். அவள் மநஸ்ஸை அது ஆகர்ஷித்தது. அதில் நீராடி த்ருப்தி யடைந்தாள்.

கேசவாசார்யருடைய க்யாதியும் கஷ்டமும், ஸமீபதேசமானபடியால், மதுராந்தகத்தில் யாவர்க்கும் தெரிந்தவையே. ஸ்த்ரீ புருஷர்கள் எல்லோரும் அவரையும் ஜநகத்தையும் நன்றாகப் பார்த்தார்கள். வாடின புஷ்பம்போன்ற அவள் முகத்தையும், ஸத்வ்ருத்தத்தால் படிந்தவளெனக் காட்டும் அவள் நடையையும் பார்த்த ஜநங்கள், ‘ சந்திரனைப் பழிக்கப்பெற்ற பருவத்தாளை, அருள் நிறைந்த நாட்டத்துடன் கூடிய அக்கண்ணிணாளை, மயிலின் தோகையைப்போல் விளங்கும் அக்கூந்தலுடையாளை, மண்ணெல்லாம் செய்த புண்ணிய மனைத்தும் திரண்டு பலித்தாற்போல் வந்துதித்த அக்கீர்த்தி பொருந்திய பெண்மணியைப் பெற்றும் இழப்பதோர் துர்பாக்யம் உண்டோ? இதற்கும் துணிவதோர் வைராக்கியம் உண்டோ? ஆனதற்த ஆசாரதையைக் கொண்டினைத்த ஈசன் செயல் என்ன விபரீதம்!!’ என்று ஸம்பாஷித்தார்கள்.

மத்யாஹ்நம் பகவத் ஸேவார்த்தம் ஸந்நிதிக்குக் கேசவாசார்யர், பத்மநாபாசார்யர், ஹரிப்ரியை, ஜநகநந்தினி முதலானோர் போனார்கள். ஸீதாலக்ஷ்மண ஸமேதனான ராமபத்ரனைத் தர்ஸித்தார்கள். பிறகு இருப்பிடத்துக்குத் திரும்புங்கால், கேசவாசார்யர் பெண்ணைப் பார்த்து இவ்வண்ணம் மொழிந்தார்:—

“ஜநகம்! பெருமாளை ஸேவித்தையே! இதன் ப்ரயோஜநத்தைப்பற்றிச் சிந்திக்கின்றையோ? ஸீதா லக்ஷ்மணர்களுடன் ஸ்ரீ ராமன் அரண்யவாஸம் செய்தார். பகவான் ராக்ஷஸர்களால் அமரர்கள் அடைந்த துயரத்தை நிவர்த்திக்க அவதரித்தாரென்பார்கள். அதுவே அவதார ப்ரயோஜநமன்று. அவரைத் த்யானித்துக் தபஸ் செய்த ருஷிகளுக்கு ராவணாதிகளால் ஸம்பவித்த உபத்ரவத்தை நீக்கி, அவர்களுடைய த்யாநம் ஸுகரமாய் வளரும்படியும், அவர்களுடைய கரணங்கள் விஷயங்களில் பாய்ந்

தோடாம லிருக்கவேண்டியும், நீருண்ட மேகம் போன்ற திரு மேனியையும், செந்தாமரைக் கண்களையும், தநுஸ்ஸையும் சரத்தையும் ஏந்திய கைகளையும், அவர்க்கு த்யாநவிஷயமாகக் காட்டியருளினர் என்பார்கள். அதுவே அவதார ப்ரயோஜநமன்று. லோகத்தில் ப்ரியத்தைத் தேடும் பலர்க்கு அது கிட்டுவதில்லை. அப்ரியத்தை விலக்கவேண்டி முயல்வோர்க்கும் அது விட்டுப் போவதுமில்லை. இந்த ஜகத்தானது துக்கமயமானது. துக்காநுபவம் பண்ணும் ஜநங்கள் அது பகவத்க்ருபையால் உண்டாகின்றதென்று நினைப்பது துர்லபம். கர்மம் கழியும் மார்க்கம் அதுவேயாம். பகவான் ஸ்வதந்த்ரன். 'ரஸோவை ஸ:, ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி' என்று உபநிஷத் சொல்லிற்று. அவன் ஸாக்ஷாத் ஆநந்தஸ்வரூபீ. அவனை யடைந்த சேதநன்தான் நிஜமாக ஆநந்தமடைந்தவனாகின்றான். அப்படிப்பட்ட ஆநந்தமயனான ஸர்வேச்வரன், க்ரமமாக ப்ராப்தமான ராஜ்யத்தைப் பெறுங்காலே இழந்தான். ஸாதாரண ஜநங்களைப்போல் ஜீவிக்கப் பொருந்தாமல், அவனுக்கு வநவாஸம் ஏற்பட்டது. வநத்தில் போய் வஸிக்குங்கால், பத்நியை ராவணன் அபஹரித்தான். அப்படிப்பட்ட ராவணனைத் தடுக்கச்சென்ற மஹா ஸுஹ்ருத்தான ஜடாயு ஆனவர் ராவணனால் கொல்லப்பட்டார். "இப்படிப்பட்ட எனது அலக்ஷ்மியானது நெருப்பையும் கொளுத்திவிடும்" என்று ஸ்ரீ ராமனே சொன்னார். மஹா ஸங்கடங்களையெல்லாம் கடந்து, பகு ப்ரயத்நத்தாலே ராவணாதிகளை ஸம்ஹரித்து, ஸீதையை மீட்டனர். ராக்ஷஸ க்ருஹத்தில் அவள் வஸித்தாளெனும் அபவாத ப்ராயச்சித்த நிமித்தமாகவும், லோகத்தார் அவள் பதிவ்ரதை என்று விச்வஸிக்கும்படியாகவும், ஸீதை அக்நிப்ரவேசம் செய்கையில உபேக்ஷையாக நின்றார். பிறகு ராஜ்யத்தில் பட்டாபிஷிக்தராய் இருந்தவளவில், ஜநங்களுக்குள் ஸீதா ஸம்பந்தமான அபவாதம் நிலைத்திருப்பதைக் கண்டு, ஸீதையை விவாஸநம் செய்துவிட்டுத் தனியாக ராஜ்யபாரம் செய்தார். பிறகு லக்ஷ்மண வியோகமும் நேரிடவே, துக்கம் முற்றப் பெற்றதாகத் தெரிந்து கொண்டு, மஹா ப்ரஸ்தாநமெனப்பட்ட விதியை ஆச்ரயித்துத் தமது விஷ்ணு ஸ்வரூபத்தில் லயித்தனர். த்யாநநிமித்தமாகச் சித்தத்துக்கு மிகவும் ஸுபாச்ரயமன்று மஹர்ஷிகளால் நிச்சய

பிக்கப்பட்ட ஸ்ரீராமசந்த்ரன் துக்கமயமானதோர் ஜீவநத்தை
அவலம்பித்தார். அதற்குக் காரணமென்னவென்றால், சரீரப்ராப்தி
யானது யாவர்க்கும் துக்கமயமானதென்று காட்டவேண்டுமென்
பதே. ஜந்மம், மரணம், வ்யாதி, ஜரை, அநிஷ்டப்ராப்தி, இஷ்ட
வியோகம், அசௌஸத்வம், இம்மாதிரியான துக்க ஸஹஸ்ரங்களை
யநுபவிக்காதவர் யாவர்? இன்னும், "எவனை அநுக்ரஹிக்க ஸங்
கல்பிக்கின்றேனோ, அவனுடைய வித்தத்தை ஹரிக்கின்றேன்.
அவனுக்கு ஸதா பந்துவியோகத்தை உண்டாக்குவேன். இவ்
வண்ணம் கஷ்டப்படுகையில் அவனுக்கு என்னிடம் பக்தி நிலைத்த
தாகில், இந்த்ராதிகட்கும் கிட்டாத ப்ரஸாதத்தை அவனிடம்
செய்வேன்" என்று பகவான் தாமே சொன்னாரன்றோ? இவ்வண்
ணம் ஸ்ரீராமசந்த்ரனுடைய அவதாரமானது துக்கப்பட்டவர்களுக்
கெல்லாம் துக்கமே பகவத்ப்ராப்தி ஹேதுவாகலாம் என்று காண்
பிக்கவென்று தோன்றுகின்றது. குழந்தாய்! நீயும் உன் வ்யஸ
நத்தை ஜயித்தவளாய்க்கொண்டு, பகவத்க்ருபையானவள் உனது
ரக்ஷணார்த்தம் அவஸர ப்ரதீக்ஷையாய் நிற்கின்றாளென்று தைர்
யம் கொள்ளவேண்டும்."

இவ்வண்ணம் ஸம்பாஷித்துக்கொண்டே கேசவாசார்யர் முத
லானோர் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். மதுராந்தக வாஸம்
நாலு நாள் செய்து, பின் திருவஹீந்த்ரபுரம் சென்றனர். அங்கே
கருடநதியில் தீர்த்தமாடி, நித்யகர்மங்களைச்செய்து முடித்தார்கள்.
தேவநாதனை ஸேவித்துப் பின் மலை மீதேறி ஹயக்ரீவனையும்
வணங்கினார்கள். அதன் பிறகு, இருப்பிடம் நோக்கித் திரும்பும்
போது, கேசவாசார்யர் ஜநகநந்தினியைப் பார்த்துச் சொல்ல
வாரம்பித்தனர்:—"ஜநகம்! ஜ்ஞாநத்தாலும் வைராக்யத்தாலும்
நம்முடைய பூர்வாசார்யர்களுக்குள் ஸர்வோத்க்ருஷ்டமான ஸ்தா
நத்தை அடைந்த நிகமாந்தமஹாதேசிகன் உகந்தருளிய ஔஷ
தாத்ரி எனப்பட்ட குன்று இது. ஆசார்யோபதிஷ்டமான வைந
தேய மந்த்ரஸித்தியின் பொருட்டுத் தேசிகன் இவ்வரையை
அடைந்தனர். இங்கே வைநதேயன் தேசிகனுக்கு ப்ரத்யக்ஷமாகி
ஹயக்ரீவ மஹா மந்த்ரத்தை உபதேசித்தார். அம் மந்த்ரஸித்தி
யைப் பெற்றுத் தேசிகன், ஹயக்ரீவனுடைய விசேஷ கடாக்ஷத்
தையும் இவ்விடம் பொருந்தினார். ஆதலால் இந்த ஸ்தல விசே
ஷம் மந்த்ரஸித்தியையும் தேவதாப்ரத்யக்ஷத்தையும் வேண்டு

கின்றவர்கள் சாருமிடம். இங்கே ஸர்வேஸ்வரன் தேவநாதனெனத் திருநாமம் கொண்ட காரணத்தை யோசிப்பாய். பெருமாள் கோவிலில் தேவாதிராஜனெனக் கொண்டாடப்படுகின்றான். ஏனென்றால், அங்கே அவன் அயர்வறு மமரர்கட் கதிபனாய் விளங்குகின்றான். இங்கே அந்த அமரர்களால் அதிஷ்டிதங்களான இந்திரியங்கட்கு ஈசனாய் விளங்குகின்றான். அதனால் பரமபுருஷனுக்கு ஹ்ருஷீகேசன் என்னும் திருநாமமுண்டு. அவன் இந்தத் திவ்ய தேசத்தை யாஸ்ரயித்து, இந்த்ரியஜயத்தை அபேக்ஷித்துத் தன்னை உபாஸித்தவர்களுக்கு அதையும் தந்தருளினான். ஆதலால், தேசிகன் இந்தத் திவ்யதேசத்தில் மிகவும் உகந்தனர். நீயும் தேவநாதனை ப்ரார்த்தித்தாயாகில் மனஸ்ஸை ஜயிப்பாய். இந்திரியங்கள் உனக்கு வஸ்யமாய் நிற்கும். வைராக்யமும் உன் சித்தத்தில் நிலைகொள்ளும்" என்றிவ்வண்ணம் தன் புதரிக்குக் கேசவாசார்யர் உபதேசம செய்தார்.

அவ்விடம் நாலு நாள் இருந்து, திருக்குடந்தைக்குச் சென்றார்கள். உப்பிலியப்பன் கோவிலுடைய அதிஸாமீபயத்தால், அவ்விடம் ஒரே நாள் தான் இருந்தார்கள். ஆராவமுதனை ஸேவித்துவிட்டு இறங்கியிருந்த வீட்டுக்கு வரும்போது கேசவாசார்யர் பெண்ணைப பார்த்து இவ்வண்ணம் ஸம்பாஷித்தார்:—"குழந்தாய்! இங்கே பெருமாளை ஸேவித்தையா? ஸர்வேஸ்வரன் இவ்விடம் திருக்கோயில் கொண்டருளியிருக்கின்றான். இங்கே அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை அபர்யாப்தாம்ருதம் [அதாவது-ஆராத அம்ருதம்] என்பார்கள். ஹ்ருதயாகாசத்தின் மத்யத்தில யாவற்றையும் தன் வசமாக்கி நிற்பவனும், யாவற்றையும் தனக்கு ஸேஷமாயுடையவனும், யாவற்றையும் ஆள்பவனும், எல்லார்க்கும் ரக்ஷகனுமான பகவான் ஸயனிக்கின்றானென்று வேதம் சொல்லுகின்றது. அவனுடன் கூடவே ஜீவனும அங்கே இருப்பதாகவும் சொல்லுகின்றது. ஆனால் ஜீவன் இந்த்ரிய ஜயமற்றவனாய் விஷயாஸக்த மநஸ்கனாய் ஸம்ஸரித்துக்கொண்டும் துக்கப்பட்டுக்கொண்டும் காலங் கழிக்கின்றான். இவற்றுள் நிர்வேதம் பிறந்து, இவற்றை முற்றிலும் துறந்து, தன்னுடைய ஹ்ருதய குஹையில் ப்ரகாசிக்கின்ற தனது ஈஸனை முழுபக்தியுடன் எப்போது காண்கின்றானோ, எப்போது, தான் முன் களித்துத் தேடிய ப்ருக்

ருகியின் விகாரங்களையெல்லாம் அந்தக் கர்மாத்யக்ஷனுடைய மஹிமை யென்று அறிந்துகொள்கின்றானோ அப்போது சோகத்தை த்யஜிக்கின்றான். எப்போது ஸ்வர்ணமயமான தேஜஸ்ஸுடன் கூடினவனும், ஸர்வ லோககர்த்தாவும், ஸர்வலோகேஸ்வரனும், ஸர்வஹ்ருதயாந்தர்வர்த்தியும், ப்ரக்ருதிக்கும் காரணபூதனுமான வாஸுதேவனை ஸாக்ஷாத்கரிக்கின்றானோ அப்போது புண்ய பாப ரூபமான உபயவித கர்மங்களாலும் விடப்பட்டவனாய்க் கொண்டு ஸர்வ ப்ரக்ருதி ஸம்பந்த விநிர்முக்தனாய் ஈஸ்வரனைப் போல் கேவலம் ஜ்ஞாநாநந்தமயனாக நிலைப்பான். இப்படியெல்லாம் ஸ்ருதி வெளியிடுகின்றது. இவ்வர்த்தங்களை இந்தத் திவ்ய தேசத்தில எம்பெருமான் ஸேவை ஸாதிப்பது தெளிவிக்கின்றது. மேலே சொன்ன வண்ணம், ஸர்வ பந்தங்களையும் போக்கின ஜீவன், தன்னுடன் என்றும் பிரிவற்றிருக்கும் பெருமானைக் கண்டு, ஸேவித்து ஸேவித்து, ஆநந்தம் பெருகி, த்ருப்திபடாமல் இருக்கும் ஸ்திதியை யோசித்தே பகவானை இவ்வூரில் ஆராவமுதம் என்கிறார்கள். பகவான் எழுந்தருளியிருக்கும் கர்ப்ப க்ருஹம் தான் ஹ்ருதயம். ஜ்ஞாநத்தை யடைந்த ஜீவன் அங்கே சென்றவுடன், தானும் அவனும் பிரிவற்று ஒரே ஹ்ருதயத்தில் நிற்பதைக் கண்டுகொள்கின்றான். அந்த ஜ்ஞாநத்தால ஸம்ஸாரத்தில் பற்றை விலக்கியவன், ரஸமென்றும் அம்ருதமென்றும் ஸ்ருதி சொன்ன பரப்ரஹ்மத்தை எவ்வளவு தூரம் அநுபவித்தும் பர்யாப்தியைப் பொருந்தமாட்டான். இவ்வர்த்தங்களை நீ யோசிப்பாய். ப்ராக்ருத விஷயங்கள் உன் மநஸ்ஸை இனி இழுக்காமலிருக்கும்படி நீ அதை அடக்கிவரவேண்டும். உன் முழு மநஸ்ஸும் பகவானிடம் நிலைக்கட்டும். தத்காலம் அவன் உனக்கு ஏகாஸ்ரயமாய் நிற்கின்றான்.''

இவ்வண்ணம் சொல்லிக்கொண்டே கேசவாசார்யர், தாம் இறங்கியிருந்த இல்லம் போய்ச் சேர்ந்தனர். மற்றோரும் அவருடனே அவ்விடம் அடைந்தார்கள். மறுநாள் யாவரும் ஸ்ரீரங்கத்தை உத்தேசித்து ப்ரயாணப்பட்டார்கள்.

## பதினைந்தாவது அதிகாரம்.

ஸ்ரீரங்கம் என்னும் சப்தத்தின் மாதுர்யத்தைச் சிந்திக்கவொண்ணுமோ? 'மூன்று தண்டர் ஒன்றினர், அற்ற பற்றர்

சுற்றி வாழும் அந்தணீர் அரங்கமே' என்று சொன்னார் பக்திஸாரன். வேதாந்த விஜ்ஞானத்தால் நன்றாக நிஸ்சயித்தறிந்த தத்வத்தைத் தர்ஸிக்க ஸமர்த்தரானவர்களும், ஏகதண்டிகளாயும் த்ரிதண்டிகளாயும் ஸங்யஸித்துக் கொண்ட யதிஸ்ரேஷ்டர்களும், மஹா பரிசுத்த சித்தமுடையோர்களும், பரமாத்மாவினிடம் தங்களுக் குண்டான பரபக்தியால் மற்றெல்லா விஷயங்களிலும் பற்றறுத்த க்ருஹஸ்தர்களும் நாற்புறமும் நிறைந்து வாஸம் செய்தார்கள் ஸ்ரீரங்கத்தில். அதனால் அந்தணீர் அரங்கமென அந்நகரை வர்ணித்தார்கள். ப்ரஹ்மத்துடன்கூட ஸர்வ காமங்களையும் முக்தர் அநுபவிக்கின்றார் என்று உபநிஷத் சொல்ல, 'காமங்களென்றால் ப்ராக்ருதாநுபவங்கள் அன்று; அவை பகவானுடைய கல்யாண குணங்கள்' என்று நம் ஆசார்யர்கள் மொழிந்தபடியே, அம்-என்றால் கல்யாண தமங்களென்றும், தண்-என்றால் ஸாந்தி ரஸத்துடன் கூடியவை யென்றும், நீர்-என்றால் குணவிஸேஷங்கள் என்றும், ஸாந்த சித்தர்களான பாகவதர்களுடைய ஸம்ருத்தியால் அந்நகர்க்குள் இருப்பவர்கள் யாவரும் ஆத்மகுண பூர்த்தியைப் பொருந்தி நின்றனர் என்றும் ஆழ்வார் திருவுள்ளம் எனக்கூடும். அப்படிப்பட்ட மஹாக்ஷேத்ரத்தில் திவ்யமங்கள விக்ரஹ ரூபமாய் எழுந்தருளி யிருக்கும் ரங்கநாதனுடைய நாமோச்சாரணத்தால் அளவற்ற ஆநந்தங் கொண்ட தொண்டரடிப் பொடியாழ்வாரும், ஸுநாயகனுடைய அநுபவத்தையும் துச்சமாக வெண்ணினான்றோ? திவ்ய தேசங்கட்கெல்லாம் ப்ரதர்சகமாக 'அதெ்ரெவ ஸ்ரீரஂஙெ ஸுகமாஸ்வ' [அதாவது, இந்த ஸ்ரீரங்கத்திலேயே ஸுகமாய் இரு] என்று சரணாகதி கத்யத்தில் சொல்லியிருக்கின்றதே. உடல் கழித்து வீடு பெற அரங்கம் தக்க நகரென்றும், அவ்வண்ணம் உடலிழந்தார்க்கு, ஸம்ஸார நிமித்தமாக மறு வுடல் வாராதென்றும், வந்தால் வைகுண்டத்தில் நித்ய கைங்கர்யம் செய்வதற்கு, நித்யஸூரிகளை யொக்கச் சங்க சக்ராதிகளால் அலங்க்ருதமான திருக்கைகளுடன் கூடிய அப்ராக்ருதமான சரீரமுண்டாகுமென்றும் ஸ்ரீ ஸங்கராசார்யரால் புகழப்பட்ட திவ்ய தேசம் ஸ்ரீரங்கம். அப்படிப்பட்ட திருவரங்கப் பெருநகருள், தெண்ணீர்ப் பொன்னி யெனும் காவிரியானவள் ஸஹ்ய பர்வதத்தின் தாழ்வரைகளில் வர்ஷா காலங்களில் கார்மேகங்கள் வர்ஷித்த குளிர்ந்த ஜலங்களைக் கொண்டுவந்து, க்ரீஷ்ம காலத்தில் அரங்கன் திருமேனி

வாட்டமடைந்ததோ வென்று ஐயுற்று, அவனுக்கு சீதோபசாரங்கள் செய்தும், தனது திரைகளாகின்ற கரங்களால் அவன் பாத கமல ஸம்வாஹநம் செய்தும், களித்து நால் புறமும் நிறைந்து ஓடவும், மணியொளியுடன் கூடின அநந்தனென்னும் வெள்ளை யணை மீது பள்ளிகொண்ட 'கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டு என் கண்ணிணைகள் என்றுகொலோ களிக்குநாளே' என்று, குலசேகரன் ப்ரார்த்தித்த வெம்பெருமானைக் கண்ணாரக் கண்டுகக்கும் காதல் ஜநகநந்தினிக்கு உண்டாயிருந்த தென்றால் வியப்புளதோ? திவ்ய தேச யாத்ரை ஆரம்பித்த முதல் கதா கதா வென்று, அரங்கனை வணங்க ஜநகம் காதல்கொண்டாள்.

மாதாபிதாக்களுடன் ஆலயத்துக்குள் சென்று பெருமானை ஸேவித்தாள். ஆலயத்தின் விஸ்தாரம் அவள் மநஸ்ஸுக்கும் ஓர் விஸ்தாரத்தை உண்டு பண்ணியது. அதாவது - அல்பமான ஐஹிகத்தை மறந்து, அநந்தனுடைய ஆநந்த்யத்தை உன்னினாள். ஆலய நடுவே ஓர் சிற்றறையில் பள்ளிகொண்ட வெம்பெருமானை ஸேவித்தபின், எல்லைபற்ற காலத்துக்கும் எல்லையற்ற தேசத்துக்கும் ஈறாய் நின்றவன், எல்லைபற்ற விஸ்தாரத்துடன் கூடிய ப்ரக்ருதியின் அந்தராத்மாவாயும், ஸூக்ஷ்மாத் ஸூக்ஷ்மதரனாயும் ப்ரகாசிப்பதைச் சிந்தித்தாள். ஏன் அப்படிச் சிந்திக்க வேண்டும்? அது திவ்யதேசத்தின் மஹிமை யன்றோ? ஆழ்வார்கள் ஆசார்யர்கள் யாவரும் உகந்தருளின திவ்யதேசம் இது. இந்தப் பெருமாளைப் பலகாலமாக ஸங்க்யைக்கு எட்டக்கூடாத ஜநங்கள் வந்து தர்சித்துப் பேராநந்தம் அடைந்தார்கள். இதற்குக் காரணம் பலவாறாக யோசிக்கப் பொருந்தும். உறையூரில் ராஜ்யம் ஆண்ட தர்மவர்மன் எனும் சோழன் இந்த ஸந்நிதியினுடைய கர்பக்ருஹத்தைக் கட்டினதாகச் சொல்வார்கள். ஆனால் அது ஸந்நிதி பிறந்த காலமன்று. இக்ஷ்வாகு வம்ஸத்தில் ஆராதித்தனை வெம்பெருமானை ஸ்ரீராமன் விபீஷணனுக்குத் தந்ததாயும அந்தப் பெருமாளே இந்த ஸ்தலத்தில் திருக்கோயில் கொண்டருளினாரென்றும் ஸ்தலபுராணம் சொல்லும். அயோத்யாகாண்டம் ஆறாவது ஸர்க்கத்தில், ஸ்ரீராமன், "ஸஹபத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயண முபாகமத் । ப்ரக்ருஹ்ய ஶிரஸா பாத்ரீம் ஹவிஷோ விதிவத் ததா ॥ மஹதே தைவதாயாஜ்யம் ஜுஹாவ ஜ்வலிதே நலே ॥

ராயணஂதெவஂ॥ஸ்ரீமத்யாயதெந விஷ்ணுஸ்ஸ்ரியா நாராயணஃ"
எனும் வாக்யங்கள் உள கோவிந்த ராஜீயத்தில், அவ்வாக்யங்கள்,
அயோத்தியில் பரம்பரையாக இக்ஷ்வாகு வம்ஸஸ்தர்களால் ஆரா
திக்கப்பட்ட ஸ்ரீரங்கநாதனையும் அவனுக்கு அங்கே ஏற்பட்டிருக்க
ஸந்நிதியையும் குறிப்பதாக வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கின்
றன. தீர்த்தீய வ்யாக்யாநத்தில் "விஷ்ணுநாராயணதெந ஸ்ரீரங்கநா
ஹுத விஷ்ணுநாராயணெ" என்று எழுதப்பட்டிருப்பதால் க்ரு
ஹார்ச்சையாக எழுந்தருளியிருந்த வெம்பெருமானுக்கு ஆலய
மும் ஏற்பட்டிருந்ததாக எண்ணக்கூடும். 'மஹதெதெவதாய'
எனும் சப்தங்கள் ப்ரகரணத்தில் ஸ்பஷ்டமாக வெளியிடப்பட்ட
நாராயணன் தானென்று இரண்டு வ்யாக்யாதாக்களும் ஒப்புக்
கொள்கின்றார்கள்.

யுத்தகாண்டம் முடிவான ஸர்க்கத்தில், 'ஸ்வா குலதநம்
ராஜா லங்காஂ ப்ராயாத் விபீஷணஃ' எனும் வாக்யத்தில், குலதந
மென்றால் - இக்ஷ்வாகு வம்ஸஸ்தர்களுடைய குலதநமான ஸ்ரீரங்க
நாத னென்று கோவிந்தராஜர் சொல்லுகின்றார். அத்வைத
வ்யாக்யாதா அதை மறுக்கின்றார். ஏனென்றால், உத்தர ஸ்ரீ
ராமாயண முடிவில், 'கிஂசா ந்யச் வக்ஷ்யாமி ராக்ஷஸெஂ
த்ரமஹாபல। ஆராதய ஜகந்நாதஂ இக்ஷ்வாகுகுலதெவதம்॥
ஆராதநீய மநிஸஂ தெவை ஸ்ஸெந்த்ரவாஸவெஃ', என்று
ஸ்ரீராமன் விபீஷணனுக்குச் சொன்னபடியால், அவதார ஸமாப்தி
காலத்தில் தான் ஸ்ரீராமன் விபீஷணனுக்குத் தம் குல தேவதை
யான ரங்கநாதனைத் தந்தாரென்று தீர்த்தீய வ்யாக்யானம். மேலே
எடுத்த ஸ்லோகங்கள் ஸ்ரீராமன் விபீஷணனிடம் பெருமானைக்கொ
டுத்ததாய்க் காட்டவில்லை. பெருமானை ஆராதிக்கும்படியாகமட்டும்
ஸ்வாமி விபீஷணனுக்குச் சொன்னார். அதனிமித்தம் 'யாவத்ஸ்ர
ஸூர்யெ யாவத் திஷ்டதி மெதிநீ। தாவந்மமைஸ்வர்யஂ காரயெத
வடிஂவ்ரஜ। இத்யுக்தா ப்ரதாக தஸ்மை ஸ விஷ்ணு ராஸுமிஷ

வெ। ஸ்ரீரங்கஶாயிநம் ஸ்வஸ்யம் இக்ஷ்வாகு குலதைவதம் ॥ ரங்கம் விமாநம் ஆதாய லங்காம் ப்ராயாத் விபீஷண:" எனும் பாத்ம புராண ஸ்லோகங்கள் தீர்த்தீய வ்யாக்யாநத்தில் எடுத்துக் காட்டப் பட்டிருக்கின்றன. 'யாவத் வம்ஶ...' எனும் ஸ்லோகமும் ஏறக்குறைய அதே சப்தங்களால் உத்தர ஸ்ரீராமாயண ப்ரகரணத்தில் இருக்கின்றது. இவ்வண்ணம், அவதார ஸமாப்தி காலத்திலாவது ஸ்ரீராமனிடம் விபீஷணன் ஸ்ரீரங்கநாதனைப் பெற்றுக்கொண்டாரென்பதும், பகவான் அயோத்தி மன்னர்களுடைய குலதேவதை யென்பதும் அநாதியாக ஏற்பட்ட ஐதிஹ்யம். இது திவ்ய தேசத்தின் மஹிமை.

அயோத்தியில் க்ருஹார்ச்சையாய் ஆராதிக்கப்பட்ட பெருமாள் இப்போது ஸ்ரீரங்கத்தில் ஶயநிக்கும் பெருமாளென்பது ஸம்பாவித மன்று. அவர் உத்ஸவ பேரமென்பது யோசிக்கக்கூடியதே. "ரங்கம் விமாநம் ஆதாய" வென்று ஸ்லோக பதங்கள் இருந்தாலும் இக்ஷ்வாகு வம்ஶஸ்தர் ஆராதித்த வெம்பெருமானை ஆராதிக்கும்படி ரகுநாதன் பண்ணின ஆஜ்ஞையை விபீஷணன் ஶிரஸா வஹித்து ஸ்ரீரங்க விமாந ரூபமான ரஹஸ்யத்தைப் பகவானிடம் க்ரஹித்துக்கொண்டு வந்தாரெனவும் எண்ணக்கூடும். அந்தப்பெருமானுடைய திருவுள்ளப்படி ஸ்ரீரங்கத்தில் திருக்கோயில் பணித்தாரெனவும் கூடும்.

இந்த ஸம்ப்ரதாயம் ஸ்ரீமத்ராமாயண வ்யாக்யாதாக்கள் காலத்திலும், 'அம்புயத்தோ னயோத்தி மன்னர்க் களித்தகோயில் தொணியான வீடணற்குத் தணையாக்கோயில்' என்று தேசிகன் ஸாதிப்பதால், அவர் காலத்திலும் யாவராலும் கொண்டாடப்பட்டிருக்க வேண்டும். அதற்கு மூலம் மேலெடுத்துக் காட்டிய இதிஹாஸ புராண வசநங்களே. ஆதலால் புராண காலத்தின் முன்பே திவ்யதேசம் இருந்திருக்க வேண்டும். உத்தர ஸ்ரீராமாயண ஸ்லோகங்கள் ப்ரக்ருத திவ்யதேசத்தின் உத்பத்தியை ஸூசிப்பிக்கின்றன. அயோத்யா காண்ட ஸ்லோகங்கள் அதனுடைய பூர்வ ஸ்திதியையும் அதன் அநாதிமத்வத்தையும் காட்டுகின்றன.

மேல் குறித்த வண்ணம் ராவணனுடைய ராஜ்யத்தில் சேர்ந்திருந்த த்ராவிட தேசத்தில், அத்யந்தம் ரமணீயமாய் அமைந்த

தோர் ப்ரதேசத்தில் உண்டான தென்னரங்கத்தில் பள்ளிகொண்ட பரமாத்மனை எல்லா ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அநுபவித்தா ரென்பதிலும், அவ்வநுபவத்தில் ஆழ்ந்தா ரென்பதிலும், ஆழ்ந்த வண்ணமே யாவதாயுஷம் நிலைத்தா ரென்பதிலும் ஆச்சர்ய மென்ன?

இக்கதைகளை யெல்லாம் உட்கொண்ட பெண்மணியானவள் பகவானைத் தர்சித்தாள். கண்களினின்றும் ஆநந்த பாஷ்பம் சொரிந்தாள். கண்ண நீர் கைகளா லிறைத்தாள், ஸேவித்து ஸேவித்துக் கைகூப்பினாள். அவன் ஸுந்தர விக்ரஹத்தை உட்கொண்டு தளர்ந்தாள். அவனை விட்டு நீங்கப் பிரியமின்றி நின்றாள். 'பிரிந்தால் எவ்வண்ணம் உயிர் தரிப்பேன்' என்று சோக முற்றாள். 'இப்போது அநாதையாய் நின்ற வெனக்கு நாதனாக வுற்ற நீ என்னிறத்து என் செய்யப் போகின்றாய்?' என்று மனத்தால் கேட்டனள். இவ்வண்ணம் பகவதநுபவம் செய்ய, ஆழ்வார்க்குத் தடையாக நின்றதோர் பும்பாவம் ஜநகத்துக்கு இல்லாமையாலும், அவளுடைய ஸுக்ருதமானது அக்காலம் பகவதநுபவத்தின் காஷ்டையை அவள் ஸுகமாக அடைவதற்கேற்ற ஸாமக்ரிகளை முன்னமே ஸம்பாதித்துத் தந்தமையாலும், உலக வழக்கில் அவள் இழந்ததாக நினைக்கக்கூடியவை யெல்லாம், அந்தப் பேறு அவள் பெறுவதற்குப் படிக்கட்டுகளாய் அமைந்துபோயின.

சிரகாலம் யாவரும் பகவானைத் தர்சித்தனர். பின்பு திரும்பிப்போனார்கள். அப்போது கேசவாசார்யர் இவ்வண்ணம் ஜநகநந்தினியுடன் ஸம்பாஷித்தனர்:—"குழந்தாய்! ஸ்ரீரங்க விமானத்தை ப்ரணவாகார மென்று சொல்வார்கள். அதற்குக் காரணம் என்னென்றால்: ப்ரணவத்தில் போல் இந்த ஸந்நிதியில பரப்ரஹ்மமான ஸ்ரீமந்நாராயண னுடைய நிருபாதிக ஶேஷித்வம் ஸ்புடமாகக் காணப்படுகின்றது. ப்ரணவம் ஒவ்வொரு சேதநனையும் பரமாத்மாவுக்கே உரிய ஶேஷபூதனெனக் காட்டுகின்றது. ப்ரணவ விவரணமான அஷ்டாக்ஷரம், சேதநா சேதநாத்மகமான ஸர்வப்ரபஞ்சமும் பகவானுக்கே ஶேஷமாய் நிற்கின்றதென நாராயண பதத்தால் காட்டிக்கொண்டு ப்ரணவ விவரணமாக நிற்கின்றது. இந்த ஸந்நிதியில் பகவானிடம் நாம் நிற்கையில் ப்ரணவார்த்தத்தை அநுஸந்திக்கத் தகும். இன்னும் பகவானுக்கு ரங்கநாதனென

விசேஷித்த திருநாமமானது, மஹாப்ரஹ்ம வித்துக்களும் பாக வதஸ்ரேஷ்டர்களும் கூடியிருக்கும் ரங்கத்துக்கு அவன் அத்யக்ஷனாயிருப்பதை வெளியிடுகின்றது. 'வைகுண்டே து பரே லோகே ஸ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி: । ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்பாகவதைஸ்ஸஹ' என்கிறபடியே, நித்யமுக்தர்களால் எப்போதும் சூழப்பட்டு லக்ஷ்மீநாதன் ஸ்ரீவைகுண்டத்தில் ஸேவை ஸாதிக்கின்றான். முக்த துல்யர்களான ஸந்யாஸிகளும், பரமபாகவதர்களான க்ருஹஸ்தர்களும் இந்தத் திவ்ய தேசத்தில் முற்காலம் நிறைந்துநின்று பகவானை உபாஸித்தார்கள். ஆதலால் இதற்குப் 'பூலோக வைகுண்டம்' என்னும் பெயர்வாய்ந்தது. ப்ரஹ்மாதி ஸர்வதேவர்களும் மற்றவர்களைப்பற்றிப் பரர்களென மதிக்கப்பட்டாலும் பகவான் விஷயத்தில் அவரர்களாகிறகின்றார்கள். ஆனபடியால் ஸ்ரீமந்நாராயணனைப் பராவரன் என்று உபநிஷத் சொல்லும். அப்படிப்பட்ட பராவரனான ரங்கநாதனை ஸாஸ்த்ரப்படி யறிந்து பரமபக்தியுடன் தர்சித்த ப்ரயோஜனத்தை ஸ்ருதி இவ்வண்ணம் வர்ணிக்கின்றது. அதாவது:—தர்சித்தவுடன் நமது ஹ்ருதயத்துக்குள் உண்டாயிருந்த விஷயப்பற்றெல்லாம் நாசமடைகின்றன; ஸர்வஸம்ஸயங்களும் நிவ்ருத்தமாகின்றன. நம்மட்டும் காம்யகர்மங்கள் க்ஷயத்தை யடைகின்றன— என்றிவ்வண்ணம் ஸ்ருதி வெளியிடும் சித்த ஸ்வரூபத்தை யடைய வேண்டும். அது நிரந்தர பகவத் த்யானத்தால் ஸாதிக்கத்தக்கது. ஸ்ரீமத் ராமாயணத்திலும், "நாஸ்தி நாஸ்தி ஸதைவாஸ்யா ஹ்ருதி வாசா ப்ரவர்த்ததே । தஸ்யா நூநம் விநாசம் க்ஷயாம் தஸ்யை ஹவம் ஹூவஸ்யாதி தயாருர்ணோதி" எனும் ஸீதா வசனத்தை யோசிப்பாய். ஸீதை அசோக வனத்தில் தகையப்பட்டிருக்கையில, அவளுடைய புத்தியானது இடைவிடாமல் ஸ்ரீராமனையே சிந்தித்துக்கொண்டிருந்தது. அவளுடைய வாக்கானது ஸ்ரீராம நாமத்தையே உச்சரித்துக்கொண்டிருந்தது. அவளுடைய புத்தியினால் விசேஷமாகச் சிந்திக்கப்பட்டவனும், வாகினால்

உச்சரிக்கப்பட்டவனுமான ஸ்ரீராமனுக்கு அநுரூபமான திவ்ய சரித்ரங்களைக் காதால் கேட்டதாக நினைத்தாள். அக்கதைகளுடைய அர்த்தங்களைக் கேட்டபடி அறிந்ததாகவும் நினைத்தாள். இது விஸ்லேஷாநுபவம். அவனுடன்கூட இருக்கையில், அவளுடைய த்ரிகரணங்களுக்கும் அவனைத்தவிர மற்றொரு விஷயம் உதிக்கவில்லை. விரஹ ஸ்திதியினால் நம்மாழ்வார் எம்பெருமானை அநுபவித்தார். ஸ்ரீரங்கநாதன் உனக்கும் அவ்வண்ணமே அநுபவிக்கும்படி ஆகட்டும். அவனுடைய விசேஷகடாக்ஷம் உன்னிடம் நிலைக்கட்டும" என்றிவ்வண்ணம் சொல்லிக்கொண்டே இருக்கையில் கேசவாசார்யரும் மற்றோரும் தங்கியிருந்த வீடுவந்து சேர்ந்தார்கள்.

## பதினாறுவது அதிகாரம்.

இப்படி ஸ்ரீரங்கவாஸம் ஏழு நாள் செய்துவிட்டு, எல்லோரும் திருவணைக்குச் சென்றார்கள். அங்கே ரத்நாகரமும் மஹாநதியும் கூடும் ப்ரதேசத்தில் நீராடினார்கள். அங்கே புரோஹிதர்கள் ஸங்கல்ப காலத்தில், 'ராமேண யா க்ருதா ஸேது யந்தா க்ஷாரஸாகரே । தீர்த்தஸ்நாநாதேவ நஶ்யந்தே ஸர்வபாபஸமூஹம்' எனும் ஸ்லோகத்தைச் சொல்வார்கள். இதனால ஸேதுவெனப்பட்ட ஸ்தானத்தில் பகவானுடைய தநுஸ்ஸால் இரண்டு ஸமுத்ரங்களும் சேரும்படியாக ஒரு ரேகையானது செய்யப்பட்டது என்று ஏற்படுகின்றது. இது எப்படி யிருந்தபோதிலும், பகவானே மஹா ஸமுத்திரத்தில் ஸேது நிர்மாணம் செய்வித்தனனென்பது அநாதி சரித்ரம். ஆனல், புஷ்பக விமாநமேறி அயோத்திக்குத் திரும்பிப் போகையில், ஸ்ரீராமன் ஸேதுவை ஸீதைக்குக் காட்டி 'ஏஷ ஸேது: மயா பத்த: ஸாகரே ஸலிலார்ணவே । தவ ஹேதோ விஶாலாக்ஷி' என்றும், 'ஏதத்து த்ருஶ்யதே தீர்த்தம் ஸாகரஸ்ய மஹாத்மந: । ஸேதுபந்த இதி க்யாதம் த்ரைலோக்யேநாபிபூஜிதம் ॥ ஏதத் பவித்ரம் பரமம் மஹா பாதக நாஶநம்' என்னும் வாக்யங்களைச் சொன்னார். பூர்வ

வாக்யம் ராமஸேதுவின் தென்கோடியைப் பற்றினது. உத்தரவாக்யம் அதன் வடகோடியைக் குறிக்கின்றது. மேல் குறித்த வாக்யங்களால் வடபாகம் ஸேதுவானது ஸ்ரீராமனால் கட்டப்பட்ட தென்பதற்கு ஸந்தேஹமில்லை. தென்பாகம் ஸேது பந்தமெனப்பட்டது. அவ்விடத்தில் தான் ஸமுத்ரதீர்த்தம் மஹா புண்யதீர்த்தமென க்யாதியடைந்தது. அந்த க்யாதிக்கு ஸ்ரீராமனுடைய ஸம்பந்தம் தான் காரணமானதோ, அல்லது, ஸ்ரீராமனுடைய காலத்துக்கு முன்பட்டே ஸேது பந்தத்துக்கு அந்த க்யாதி உண்டாயிருந்ததோ தெரியவில்லை.

அதெப்படி யிருந்தபோதிலும், ஸேதுவினுடைய தர்சநம் விலக்ஷணமானது. அங்கே நாற்புறமும் மஹா ஸமுத்ரத்தின் விஸ்தாரமானது சித்தத்தைக் கவர்கின்றது. ஸ்தலத்தின் பரிசுத்த ஸ்திதியானது ஒவ்வொருவர் சித்தத்துக்கும் அதே தன்மையை உண்டு பண்ணுகின்றது. பகவான் அயோத்தியை விட்டு அவ்விடம் வரைக்கும் வந்த கதையும், அதன் பின் நடந்த பகவத் சரித்ரமும் ஒவ்வொருவன் ஜ்ஞாபகத்துக்கும் வருகின்றது. இச்சித்த பரமபுருஷார்த்தத்தை ஸம்பாதிக்க வழியற்று நிற்கும் சேதநன் க்ருபணன் எனப்படுவான். அவன் அபேக்ஷித்ததை அவனுக்குத் தரவல்ல பகவானுடைய க்ருபை க்ருபண ஜந்துக்களுக்கு ஓர் சிந்தாமணியை ஒத்தது. அந்த க்ருபையானது ஜகத்துக்கு எப்போதும் ஹிதம் செய்வது. அப்படிப்பட்ட க்ருபையால், ரமாநாதன் ஏவப்பட்டவனாய்க்கொண்டு, ரகுவம்ஶ திலகனாக அயோத்தியில் அவதரித்தனன். அவதரித்துப் பின் அந்த க்ருபா ப்ரேரிதனாய், மஹோததியில் ஸேதுபந்தநம் செய்து ஸமுத்ரத்தைப் பிரித்தான். அந்த ஸேதுவைப் பார்த்த மாத்ரத்தில் பார்ப்பவனுடைய ஸர்வ பாபங்களும் நாசமடைகின்றன. இவ்வர்த்தங்களை யெல்லாம் க்ரோடீகரித்துத் தேசிகன், "க்ருபே க்ருத ஜகத்திதே க்ருபண ஜந்து சிந்தாமணே ரமாஸஹசரஸ்ய ரகுவம்ஶ்யதாம் கதா ।
வ்யதார்யத ஸரித்பதிஸ் த்வதநுவர்த்திநா த்வத்க்ஷணாத் ப்ரத்யக்ஷ ஸஹஸ்ரவாதக ப்ரஶமந க்ஷமஸ் ஸேதுநா" எனும் ஶ்லோகத்தை ஸாதித்தார். இந்த ஶ்லோகமும் ஸ்நாநகாலத்தில் ஸ்மரிக்

கப்படுகின்றது. ஸ்ரீராமன் ஸாதித்தவண்ணம், ஸீதையின்பொருட்டு ஸேதுவை ஸ்வாமி ஸமுத்ரத்தின் நடுவே கட்டினார் இதை ஓர் க்ருபா விசேஷம் எனத்தகும். இந்த ஸேதுவைப் பார்த்தவர்க்கெல்லாம் பாப விமோக்ஷணத்தைச் செய்வதும் க்ருபாவிசேஷமே. க்ருபண ஜநங்கட்கு மோக்ஷத்தைத் தருவதும் க்ருபாவிசேஷமே மோக்ஷம் ஸர்வ பாப நிவாரணத்தால் பலிக்கின்றதாகையால், இரண்டு பலமும் ஒரே க்ருபையின் கார்யமாய் முடிகின்றது. பாப விமோக்ஷணத்தை அபேக்ஷித்தவன் மோக்ஷத்தையும் அபேக்ஷித்தவனாகின்றான் என்று சொல்லவொண்ணாது. மோக்ஷத்திற்கு ஓர் உபாயமாக விதிக்கப்பட்ட ஶரணாகதியின் லக்ஷணமானது, ஸேதுவின் வடகோடியில் விபீஷணனுடைய அநுஷ்டாநத்தால் தெரிவிக்கப்பட்டது. பகவானை மநஸ்ஸில் உட்கொண்டு அவனையே த்யாநித்த ஸீதைக்காக ஸேதுவைக் கட்டினவண்ணம், பகவானை ஆஸ்ரயித்த பக்தர்களனைவர்க்கும், அவர் பகவானைப் போய் அடைவதற்குத் தக்கதோர் ஸேதுவை ரக்ஷகன் பண்ணவித்தமாயிருக்கின்றான், என்று அவனுடைய விலக்ஷணமான க்ருபையின் மாஹாத்ம்யம் ஸேதுரூபமாக லோகத்தார்க்கு விளங்குகின்றது.

இவ்வர்த்தங்களை யெல்லாம் கேசவாசார்யர் ஜநகநந்தினிக்கு வெளியிட்டார். ஸேதுவாஸம் மூன்று நாள் செய்து, பிறகு 'திருப்புல்லணை' எனப்பட்ட தர்ப்பஶயநத்துக்குக் கேசவாசார்யர் மற்றவர்களுடன் வந்து சேர்ந்தனர். அங்கே ஆதிஸேது வெனப்பட்ட ஸேதுவின் ஆரம்ப ஸ்தாநத்தில் யாவரும் நீராடினார்கள். பகவத் ஸந்நிதிக்குச்சென்று பத்மாஸநித் தாயாரையும் ஜகந்நாதனையும் ஸேவித்துக்கொண்டு, வடபுறத்தில் ஶயநித்திருக்கும் ரகுநாதனை ஸேவித்தார்கள். ஸீதா வியோகத்தால் முன்னமே மிகவும் துக்கப்பட்டிருந்த ராகவன், வருணனுடைய தாமஸத்தால் மநஸ்ஸில் மிகுந்த கஷ்டத்தை வஹித்தவராய், 'ശോകസംഹൃഷ്ടാ കാരം ഉപയായഭഹജ്ഞംജം । കൃത്വൈരണംവായ താരണംബാഗ്ര സൃ്വാ ॥ ഇതിരാഘോഭിംകൃത്വാ ഭഹാവാഹ്നഭിര്ഹൊരായിം । കയി ശിരസ്വിയിവക്ഷ', எனும் வண்ணம், தமது புஜத்தையே தலை

யணையாகக்கொண்டு, "ஸமுத்ரத்தைத் தாண்டுவேன்; அன்றேல் ப்ராணனை யாகிலும் விடுகின்றேன்." என நிச்சயித்துக்கொண்டு ஶயனித்த வண்ணம் ஸேவை ஸாதிக்கின்றார். அந்தத் திருமுகத்தில் நிலைத்துக் காணப்படும் வருத்தம் தர்சிப்பவர் சித்தங்களை இன்றும் கலக்குகின்றது. அந்த ஸந்நிதியில் கேசவாசார்யர் பெண்ணைப் பார்த்து. 'ஜநகம்! இந்த லோகத்தில் ஶரண்யனே மஹா கஷ்டங்களை மேற்கொண்டானென்று ஸ்ரீ மதுராந்தகத்தில் சொன்னேன். இதோ அந்தத் திவ்ய வதநத்தைப் பார். நான் சொன்னதெல்லாம் ப்ரத்யக்ஷமாகத் தெரிகின்றது. பெருமாளுடன் ஸீதையைக் காணோம். இளைய பெருமாளும், ஹநுமானும் கலங்கி நிற்கின்றார்கள். 'ரேக்ஷாஹீனேவஸீதாப்ரியஸஹிதே,' என்று பகவானே அருளிச்செய்தான். அவன் கருணாநிதி. பரமஶாந்தியே உருவெடுத்து வந்ததுபோல் அவன் அவதரித்தான். ஆதலால் ஸமுத்ரராஜனும் அவனை அவமதிக்க இடம் உண்டாயது. இந்த துக்கரூபமான தர்ஶநம் லோகத்தையே பிடித்தபடியால், இந்த ஸந்நிதிக்கு முன்பாக ஸீதாலக்ஷ்மண ஸமேதனாய்ப் பெருமானை வேறு ஸந்நிதி கட்டி எழுந்தருளப்பண்ணி யிருக்கின்றார்கள். இதோ, அவ்விடம் சென்று அங்கும் ஸேவிக்கப்போகின்றோம்." என்று சொன்னார்.

திருப்புல்லாணியை விட்டு மதுரைக்குப் போனார்கள். அங்கே கூடலழகரையும் திருமாலிருஞ்சோலையில் ஸுந்தரராஜனையும் ஸேவித்தார்கள். பிறகு ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஆண்டாளையும், திருநகரியில் ஆழ்வாரையும், பாண்டியநாட்டுத் திவ்யதேசங்களில் ஸேவை ஸாதிக்கும் பகவன்மூர்த்திகளையும் தர்சித்துவிட்டு வடபுறம் திரும்பினார்கள்.

கேசவாசார்யர் குடும்ப ஸமேதராய்ப் பத்மநாபாசார்யருடன் திருமலையை உத்தேசித்துத் திருப்பதிக்கு வந்து சேர்ந்தார். அங்கே கோவிந்த ராஜனை ஸேவித்து விட்டு, மறுநாள் மத்யாஹ்நத்திற்குமேல் யாவரும் திருமலை யடிவாரத்தை அடைந்தார்கள். "ஓவதஶிதம் ஶிகிம்ஞாயஃ ஸ்ரீநிவாஸாநுகம்பயா । ஐக்ஷ்வா ஸாரஸ்வதேவ யதுஷிதஸ்ய ஶக்ஷராயிதம்" என்னும் ஶ்லோகத்தை அநுஸந்தித்து ஜநகநந்தினி மலை யடிவாரத்தில் ப்ர

ணமம் செய்தாள். ஸ்ரீநிவாஸனுடைய க்ருபை பொன்றுதான் அக்காலம் அவளுக்கு நேர்ந்த பற்று. அந்த க்ருபையே ஸ்ரீசைல ரூபமாகப் பரிணமித்த தென்று ஸ்லோக தாத்பர்யம். மற்றோரிடத்தில் கமலாகாந்தனுடைய காருண்யத்தை ஆஸ்ரிதர்களுடைய ஸர்வ பாபங்களையும் போக்குகின்ற கங்கையென வர்ணிக்கின்றார் நிகமாந்தாசார்யன். ஸாதாரண கங்காஜலம் அதைப் பானம் செய்பவர்க்கு ஆதாராஸ்ரயத்தால் ருசியுடன் கூடியிருக்கும். இங்கு பகவத் கருணையைக் கரும்பின் ரஸத்தைப் பெருக்குகின்ற நதியென்று வர்ணித்தார். அதனுடைய தாத்பர்யம் என்னென்றால், தயாரூபமான அந்த நதியின் பெருக்கை ஹரிதாஸர்கள் மிகவும் களித்துப் பருகுவார்கள் போலும் ஸ்ரீசைலத்தில் அது யாவர்க்கும் ஐஹிகாமுஷ்மிகங்களை ஸாதித்துத் தருகின்றது. ஸந்த்யா காலங்களில் சிரஸ்ஸில் ப்ரோக்ஷித்துக்கொள்ளப்பட்ட ஜலத்தினுடைய சிவதமமான ரஸம் த்விஜர்களால் ப்ரார்த்திக்கப்படுகின்றது. அதுவும் ஸாதாரண ஜலவிஷயமன்று. பகவானுடைய சரீரமாக எண்ணப்பட்டநிலையில், அந்த சரீர விசிஷ்டனான பரமாத்மாவினுடைய கருணாரஸத்தைப் பகவதநுபவ ரூப ஸுகாதிசயத்தின் பொருட்டு நாம் அடையும்படியாய் பகவானை ப்ரார்த்தித்த வண்ணம். அவனே ரஸமென்றும், அப்படிப்பட்ட ரஸத்தை அடைந்து சேதநன் ஆநந்தாநுபவம் பண்ணுகின்றானென்றும் ஸ்ருதி ப்ரஸித்தம். இக்ஷுஸாரம் ஜநங்களுக்கு ருசியால் ப்ரியப்படுவதுபோல, பகவானுடைய க்ருபையாகின்ற நதியின் ரஸமும் பகவத்பரர்க்கு மிகவும் ஆதரணீயமாகின்றது. கரும்பு ரஸம் க்ரமேண கற்கண்டாக மாறுகின்றதுபோல், பகவத் கருணாநதியின் சிவதமமான ரஸமும் சர்க்கரை, அதாவது கற்கண்டுகள் நிறைந்த கிரிரூபமாகப் பரிணமித்துப் பகவத் வாஸஸ்தாநமாகிக் கேவல தர்சந மாத்ரத்தாலே பக்த ஜநங்கட்கு அளவிற்ற ஆநந்தத்தை அளிக்கின்றது. ஆதலால ஸ்ரீநிவாஸ தயாரூபமான கிரியை மற்றோர் பற்றிலாத மாது தயாசதகத்தின் முதல் ஸ்லோகத்தை ஸ்மரித்து சரணமடைந்தாள்.

லோகத்தில் பகவத் வாஸ ஸ்தாநமாகின்ற மற்றெவ்விடமும் திருமலையைப்போல் ஸேவார்த்திகளுடைய ஹ்ருதயங்களைக் கவர்வதில்லை. த்ராவிட ப்ரதேசத்தில கண்ணன் உகந்தருளின

திவ்ய தேசங்களில் திருமலைக்கு ஸமமானது வேறொன்றில்லை. முதலாழ்வார்கள் இத்திருப்பதியில் ஈடுபட்டவண்ணம் மற்றொரு ஸ்தலத்தில் ஈடுபட்டார்களில்லை. பொய்கை யாழ்வார் ஸ்ரீரங்கத்தை இரண்டுதரம் ஸ்மரித்துத் திருமலையை பதினேருதரம் பாடினார். பூதத்தார் திருமலையை ஒன்பதுதரம் சொல்லி ஸ்ரீரங்கத்தை நாலுதரம் பாடினார். பேயாழ்வாரோ ஸ்ரீரங்கத்தை ஒரேதரம் எண்ணித் திருமலையை இருபதுதரம் நினைத்தார். மழிசைப்பிரானும் நான்முகன் திருவந்தாதியில் ஸ்ரீரங்கத்தை நாலுதரம் பாடித் திருமலையைப் பன்னிரண்டு முறை புகழ்ந்தார். முதலாழ்வார்கள் காலத்தில் ஸ்ரீநிவாஸன் ஸந்நிதியே பெரிய கோவிலாயிருந்தது.

தமிழ்நாட்டில் அநாதியாகப் புகழ்பெற்ற திவ்யதேசம் இது. வடவேங்கடம் தென்குமரி யென்று தமிழ் நாட்டுக்குத் தொல்காப்பிய காலம் தொடங்கி எல்லை வகுக்கப்பட்டது. தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியரும், வேங்கடநாதனை 'நிலங்கடந்த நெடுமுடி யண்ணல்' என்று விவரித்துளர். அன்றியும் 1800 வர்ஷங்கட்கு முன் ஜைந ஸமயத்தினரான இளங்கோவடிகள் செய்த சிலப்பதிகாரத்தில் ஸ்ரீநிவாஸனைப்பற்றி, 'நன்னிற மேக நின்றது போலப் - பகையணங் காழியும் பால்வெண் சங்கமும் - தகைபெறு தாமரைக் கையினேந்தி - நலங்கிளராரம் மார்பிற்பூண்டு - பொலம்பூவாடையிற் பொலிந்து தோன்றிய-செங்கண் நெடியோன்' - என்று பாடியிருக்கின்றனர்.

ஸ்ரீ வேங்கடாசல மாஹாத்ம்யமெனும் க்ரந்தத்தில், வாராஹம், பாத்மம், காருடம், ப்ரஹ்மாண்டம், மார்க்கண்டேயம்,வாமநம், ப்ராஹ்மம், பவிஷ்யோத்தரம், ஸ்காந்தம் முதலான புராணங்களில் திருமலை ப்ரஶம்ஸாபரமான அத்யாயங்கள் இருப்பதாகக் கண்டிருக்கின்றது. நம்மிட மிருக்கும் ப்ராஹ்ம மார்க்கண்டேய புராணங்களையும், சங்கரஸம்ஹிதை ஸம்ஹிதைகளையும் நாம் மேலெழுந்தவாருக பேரதித்தவளவில், அவற்றுள் திருமலை ஸம்பந்தமான அத்யாயங்களைக் காணேம். இதர புராணங்களில் அப்படிப்பட்ட அத்யாயங்கள் இருக்கக்கூடும்.

பலராமனுடைய தீர்த்த யாத்ரையை ஸ்ரீ பாகவதத்தில் விவரித்தபடி, ஸ்ரீ வேங்கடாத்ரி ஸ்ரீரங்கம் முதலான ஸ்தலங்கள் பல

ராமனுல் தர்சிக்கப்பட்டன. அதே யாத்ரை மஹாபாரதத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. அங்கே இந்த ஸ்தலங்களின் பெயர்களைக் காணோம்.

இது எப்படி யிருந்தபோதிலும், த்ராவிட தேசத்தில் உள்ள திவ்ய தேசங்கட்குள் சேஷாத்ரி உத்க்ருஷ்டமானது. அதுவுமன்றி இக்காலம் பகவானுடைய ஸாந்நித்யம் அவ்விடம் ப்ரகாசிக்கின்றபடி மற்றெங்கும் ப்ரகாசிப்பதில்லை. 'கலௌ வெங்கட நாயகஃ' என்று கலியுகத்தில் ஸ்ரீநிவாஸனே ப்ரத்யக்ஷ தெய்வமென்று சொல்வார்கள். இந்தப் பெருமாளே ஆழ்வார்களுடைய மங்களாசாஸநம் பொருந்திய உப்பிலியப்பன் ஸந்நிதி நாச்சியார் கோவில் முதலான பல திவ்யதேசங்களில் ஸேவை ஸாதிக்கின்றாரென வெண்ணக்கூடும். ஆனாலும், பகு ஜநங்கட்கு அபேக்ஷிதமான ப்ரயோஜநங்களைத் தந்தருளுவதால், பகுதந ஸஞ்சயத்தைப் பகவான் விதியின்றி ஆகர்ஷிக்கின்றார். அதனுடைய அபஹாரார்த்தம் பயமின்றி அபராத பரம்பரைகளை ஸம்பாதிக்கும் மதிகேடர்களும் அந்த ஸ்தலத்தில் பெருகுகின்றார்கள்.

அப்படிப்பட்ட ஸ்ரீ சைலத்தில் ஜநகநந்தினி மாதா பிதாக்களுடன் ஏற ஆரம்பித்தாள். பத்மநாபாசார்யரும் அவர்களுடன் நடந்தார். பகவத் ஸேவையைப்பற்றிய உத்ஸாஹம் நடையின் ஶ்ரமத்தை அவர்களுக்குக் காட்டவில்லை. மலையின்மீது பார்க்கத்தக்க பல காட்சிகளை நோக்கிக்கொண்டே அவர்கள் நடந்தார்கள். அவ்வண்ணம் நடந்துபோய் ஸூர்யாஸ்தமநத்துக்கு முன்பே பகவத் ஸந்நிதியைத் தர்சித்தார்கள். பரகால மடத்தில் தங்கினார்கள்.

ஸந்த்யாவந்தநம் முதலான ஆஜ்ஞா கைங்கர்யங்களை ஸ்வாமி புஷ்கரிணியில செய்து முடித்துக்கொண்டு, கேசவாசார்யர் மற்றவருடன் பகவத் ஸேவார்த்தம ஸந்நிதிக்குள் சென்றார். ஸேவைக்கு உசிதமான ஸௌகர்யங்களைப் பத்மநாபாசார்யர் ஆப்தர்கள் ஸஹாயத்தைகொண்டு திருப்பதியிலேயே தேடிக்கொண்டார். ஆனபடியால் பகவத் ஸந்நிதி த்வார ரக்ஷகர்கள் கேசவாசார்யரையும் மற்றவர்களையும் ஶ்ரமப்படுத்தாமல் உள்ளே விட்டனர்.

உள்ளே ப்ரவேசித்த க்ஷணமே பகவானுடைய அத்புதமான தர்சநத்தை ஜநகநந்தினி அடைந்தாள். லீலாவிபூதியில் அத்தகைய தோற்றத்தை மற்றெவ்விடத்திலும் எவரும் கண்டிருக்கமாட்டார்கள். ஸ்ரீ வைகுண்டம் சென்று வைகுண்டநாதனைக் கண்ணுற்ற வண்ணம் ஸ்ரீநிவாஸனை ஜநகம் கண்டாள். திசைதிசையின் வேதியர்கள் சென்றிறைஞ்சும் வேங்கட வெனும் கீர்த்தியைத் தெளிந்தாள். பகவான் திவ்ய மங்கள விக்ரஹம் ஆகர்ஷகமா யிருக்கையிலும் பயோத்பாதகமா யிருந்தது. வேங்கடநாதனுடைய மஹா ஸுந்தர விக்ரஹம் அவள் சித்தத்தைக் கவர்ந்தது. அவனுடைய கிங்கரர் அவனுக்குத் திலகம் சாற்றினவகை பயஹேதுவாயிற்று. ஆயினும் நெருங்க நெருங்க அவன் திருமுகத்தின் அழியா வழகை ஜநகம் தெரிந்து அநுபவம் செய்தாள். வாசித்துக்கேட்டு வணங்கி வழிப்பட்டுப் பூசித்துப் போக்கின போதெல்லாம் தானுக ஹ்ருதயத்தன்கண் வந்தேறிநின்ற வெம்பெருமானை அன்று வெளியே கண்ணாக் கண்டதாக எண்ணினாள். வேங்கடத்தான் உள்ளுவார் உள்ளத்தினுள்ளே உளன் எனும் உண்மையை அப்போது அறிந்தாள். அளவரிய வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடி தோயும் பாதத்தான் பாதத்தை நெஞ்சுள் நிறுத்தினாள். வெற்பென்று வேங்கடத்தை நினைத்து அங்கே யாத்ரையாக வந்தனள். வந்து விண்ணோர் தொழுங் கோயிலைக் கண்டு, அதனை வைகுண்டமெனவே எண்ணினாள். எண்ணியபின், பத்மா ஸஹாயன் பக்கம் சென்று நின்றாள். நின்று நினைவுற்றாள். நினைவும் கெடவே, எங்கும் தெரியத்தானேங்கி நின்றானை கண்களால் உள்ளெழுத்துத் தன் நெஞ்சத்தினுள்ளே நிறுத்தினாள். நிறுத்தியபின் இனி யவனைப்போகவொட்டே னென்று, அவன் உள்வந்த வழியாகும் தன்னுடைய நேத்ரங்களைக் கெட்டியாக மூடிக்கொண்டாள். அவ்வண்ணம் அவனைச் சிறிதுகாலம் த்யாநம் செய்தபின் அவன் உருவத்தைத் தன்னுடைய ஹ்ருதயத்தில் காணுமல் மீண்டும் விழிகளைத் திறந்தாள். இவ்வண்ணம் அவள் பெருமானை அநுபவம் செய்வதற்கு ஆராதகாலம் இடம் கொடுத்தது.

ஜநகம் பகவத் ஸேவையி லீடுபட்டதைக் கேசவாசார்யர் கண்டு கொண்டார். "ஜநகம்! நீயறிந்த ஸ்தோத்ரங்களில் ஏதேனுமொன்றை ஸ்மரிக்க இது தக்க காலம்" என்று சொன்னர்.

உடனே ஜநகநந்தினி, 'உலகமுண்ட பெருவாயா உலப்பில்கீர்த்தி யம்மானே, நிலவும்சுடர்சூ ழொளிமூர்த்தி நெடியாயடியே னாருயிரே, திலதமுலகுக் காய்நின்ற திருவேங்கடத்தெம் பெருமானே, குல தொல்லடியே னுன்பாதங் கூடுமாறுகூறுயே' எனும் பாசுரத்தை நினைத்தாள். பின்பு அத்திருவாய்மொழி யாவும் சிந்தித்தாள். சிந்திக்கையில், அடியேன் உன்னடி சேர் வண்ணமருளாயே! உன்னடிசேர அடியேற்கு ஆவா வென்னுயே! பூவார்கழல்கள் அருவினையேன் பொருந்துமாறு புணராயே! உன் பாதம் சேர்வதடியேன் எந்நாளே! எந்நாளுன்னடிக்கீழ் அடியேன் மேவுவதே! உன்பாதம் காணநோலா தாற்றேனே! அந்தோ அடியேன் உன்பாதம் அகலகில்லேன் இறையுமே! எனும் வாக்யங்களை மீண்டு மீண்டும் மெல்லவே சொன்னாள். முடிவில் 'அகலகில்லே னிறையுமென்று அலர்மேல் மங்கை யுறைமார்பா, நிகரிற் புகழா யுலக மூன்றுடையா யென்னை யாள்வானே, நிகரி லமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே, புகலொன்றில்லா வடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே' எனும் பாசுரத்தைப்பாடி ஆழ்வார் பண்ணின சரணாகதியைத் தானும் மனத்தால அநுபவம் செய்தனள்.

அதற்குள், பகவத் ஸேவா காலம் அவர்களுக்கு முடிவுபெற்றது. ஸேவார்த்திகள் பலர் வெளியே காத்திருந்தார்கள். ஆதலால், கேசவாசார்யரும் மற்றவர்களுடன் ஸந்நிதியின் வெளிப்புறம சென்று ப்ரதக்ஷிணமாக வந்தனர். வருகையில், "ஜநகம்! எவ்வண்ணம் பகவானை ஸ்துதித்தாய்?" என்றனர். "அறுபதாம்திருவாய்மொழியை அநுஸந்தித்தேன்" என்று ஜநகநந்தினி மொழிந்தாள்.

"என்ன? உபாயாநுஷ்டாநத்தில் தீவ்ரேச்சையோ?" என்றனர் கேசவாசார்யர். "அடியேனுக்குக் கர்த்தவ்யாம்சம் அது ஒன்றுதானே மோக்ஷத்தில் நிற்கின்றது" என்றாள் ஜநகநந்தினீ. அதற்குக் கேசவாசார்யர் ப்ரத்யுத்தரம் அளித்திலர்.

மறுநாள் பகவத் ஸேவார்த்தம் ஸந்நிதிக்குச் செல்லுமுன் "அடியேனைப்பற்றி ஸ்ரீநிவாஸன் ஸந்நிதியில ஒரு அஞ்சலி ஸமர்ப்பிக்கவேண்டும்" என்று ப்ரார்த்தித்து ஜநகநந்தினி பிதாவைத் தண்டம் ஸமர்ப்பித்தாள். சிறிது காலம் கேசவாசார்யர் மௌனமா

மாய் இருந்தார். ஜநகநந்தினியும் கூப்பின கைகளுடன் எதிரில் நின்ருள். பிறகு, "குழந்தாய்! பெருமாளை உன் நிமித்தம் ப்ரார்த் திக்க இந்த ஸந்நிதியில் ஸௌகர்யப்படாது. கலாவைஷம்யம் இவ் விடத்தில் உண்டு. விசாரணை கர்த்தரும் தக்ஷிண கலாந்தர்மதர். விமாநத்தைத் தர்சித்துக்கொண்டு ப்ரத்யநுஷ்டாநம் செய்ய லாம். மலையைநோக்கியும் செய்யலாம். இப்படி இங்கே ஆசார முண்டு. பெருமாள் ஸமீபம் ஏகாந்தத்தில் ப்ரார்த்திக்க இங்கே அமையமாட்டாது. உன்னைப்போன்ற அதிகாரிக்கு அவ்வண்ணம் ப்ரார்த்திப்பது யுக்தம். ஆதலால் அவஸரப்படாதே. ஸர்வேஸ் வரன் ஸாந்நித்யம் செய்யும் மூர்த்திகள் பேதித்தாலும் அவன் ஒரு வனே ஸர்வத்ர அத்விதீயனுய் இருக்கின்ருன். நீ கிஞ்சித்காலம் பொறுத்திருக்கலாம்." என்று கேசவாசார்யர் சொன்னூர்.

ஸ்ரீ சைலவாஸம் நாலு நாள் செய்து பெருமாளை த்ருப்தி யாக ஸேவித்துக் கேசவாசார்யர் முதலானோர் எவ்வுண்மாயவன் கோயில் தொழ வெண்ணி அத்திருப்பதிக்குச் சென்ருர்கள். ஹ்ருத் தாபநாஸிநியில் நீராடி, நித்ய கைங்கர்யங்களைச் செய்து முடித்துக் கொண்டு கேசவாசார்யர் மற்றவர்களுடன் கோவிலுக்குச் சென்று ஸ்ரீ வீரராகவனையும் கநகவல்லித் தாயாரையும் ஸேவித்தார். அத ற்குமுன் என்றும் ஸேவிக்காத எவ்வுட் பெருமலையை அன்று ஜநக நந்தினி தர்சித்தாள். "இது வீர ஶயனமன்றோ?" என்று பிதாவை வினவினுள். அதற்குக் கேசவாசாரியர், "நீ சொல்வது நிஜமே. தஶக்ரீவன் ஸம்ஹாராநந்தரமே, ஶாலிஹோத்ரர் எனும் தபஸ்விக்குப் பகவான் ஸேவை ஸாதித்தாரென்று ஸ்தலபுராணம்" என்று சொன்னூர்.

தவஹெதா விஶாலாக்ஷி ராவணோ நிஹதோ யுதா ।
ஸுஷ்வாப ஶயனே ஸ்ரீமான் ஸஹிதோ லக்ஷ்மணேந ச ।
தவ ஹெதா விஶாலாக்ஷி நஷ்டௌ தௌ ஸுரத்விஷௌ ॥

என்கிற வாக்யங்களை ஜநகநந்தினி உச்சரித்தாள்.

"குழந்தாய்! ஏன் அந்த ஶ்லோகங்களை உச்சரிக்கின்றனை?" என்றனர் கேசவாசார்யர். "அப்படிப்பட்ட கருணா ஸமுத்ரத்தின் ஒரு திவலை யளவு அடியேனுக்கு உதவாமல் போற்றி!" என்று சொன்னுள் ஜநகம்.

"ஜநகம்! அவனுடைய க்ருபையால் தான் உன் பாபம் மிகை யறுக்கின்றதெனச் சொல்லி யிருக்கின்றேனே! ஸாக்ஷாத் வைதேஹிக்கு கூட உன்னுடைய அவஸ்தை தான் நிலைத்து நின்றது. மநோதௌர்பல்யத்தை ஆவிஷ்கரிக்கின்றையே!" என்று சொன்னார் கேசவாசார்யர்.

ஸந்நிதி ப்ரதக்ஷிணமாக வருகையில், கேசவாசார்யர் குமாரியைப் பார்த்துச் சில விஷயங்கள் சொல்லத்தொடங்கினார்:—"ஜநகம்! ஸ்ரீ வீரராகவன் மஹா வரப்ரஸாதி. நமது குலத்தை அலங்கரித்த கவி வேங்கடாசார்யர் இந்தப் பெருமாள் விஷயமாக "ஜெஸக்ஷாஸாயூ ஜஹஜநி ஸ்ரீதநூவஹாக்ஷாஂகிஜொதாஸூூஃ ஸாக்ஷா ஜெஷவாஃ வாஹோநு க்ஷூதநூதி।ஊஸெரக்ஷாயணீஶாஷிஹிஃ, வீக்ஷாணூவதி விஜாஜதி ஜநதி ஊஜெரக்ஷாஸஷூக்ஷாஹிதீ யீக்ஷாஂதூாயாஜொஹதாயநயஶா ஜொக்ஷாஷூ வெக்ஷாவதாஂ॥" எனும் ஸ்லோகத்தைச் செய்தார். த்யாநிக்கத்தக்க விஷயம் ஜகத் காரணம். ப்ரஹ்மம் இன்னதென்று விவரிக்கு மளவில் இரண்டாவது ஸூத்ரத்தால் ப்ரபஞ்சத்துக்கு ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்கள் எவனிடம் உண்டாகின்றனவோ, அவன்தான் ப்ரஹ்மமென்று ஸூத்ரகாரர் நிஷ்கர்ஷித்தார். ஜகத்காரணம் அசேதநமாயிருக்கக்கூடா தென்பதைக் காட்ட ஐந்தாவது ஸூத்ரத்தால் ஸர்வேஸ்வரன் தனது ஈக்ஷணம் ஒன்றினாலேயே ஸர்வ ஜகத் வ்யாபாரங்களையும் நடத்துகின்றானெனக் காட்டினார். அதாவது, அவன் ஸங்கல்ப மாத்ரத்தால் அவை யாவும் நடந்தேறுகின்றன. இவ்வண்ணம், 'ஜெஸக்ஷாஸாயூ ஜஹஜநிஃ' என்பதால் ஸர்வேஸ்வரன் ஸ்ரீ வீரராகவன் என்று தாத்பர்யம். இந்த ப்ரஹ்மத்வம் தேவதாந்தரங்களினிடம் ஸங்க்ரமிக்க மாட்டாது எனும் ப்ரஸித்தியை 'ஸ்ரீதநூ வஹாக்ஷாஂ கிஜொதாஸூூஃ' என்று ஸ்தாபிக்கின்றார். லக்ஷ்மீ நியதவாஸம் செய்யும் திருமார்பன் என்று சொல்லி ஸ்ரீமந்நாராயணனே ஸ்ரீ வீரராகவனாய் இங்கு ஸேவை ஸாதிக்கின்றார் என்றார், இதெல்லாம் ஸரிதான்; லக்ஷ்மீ பதித்வம் பரம

புருஷன் ஒருவனுக்கேயுரிய அடையாளம். அம்ருத ப்ரதனென்று ஏற்பட்டால் தான் பாரமைஸ்வர்யம் த்ருடப்படும் என்று சொல்லக்கூடும். ஆகலால் 'ஸாக்ஷாச்ச வஷவாஃ வாரோ' என்று சொன்னார் ஸ்ரீ விஷ்ணுபுராணம் ப்ரஹ்லாத ஸ்தோத்ரத்தில் 'ப்ரஹ்மஸம்ஜ்ஞாஸெவா ஜெ தயாம்தெவ வாஃ வாரோ' என்று சொல்லி யிருக்கிறது. அதாவது, காரணத்வம் ப்ரஹ்ம ஶப்தத்தாலும் அம்ருத ப்ரதத்வம் பரமபுருஷ ஶப்தத்தாலும் ஸூசிதங்கள். ஆதலால், நிஸ்ஸம்ஶயமாக ஸ்ரீ வீரராகவனே அம்ருத ப்ரதனென்பதை 'ஸாக்ஷாஜெஷவாஃ வாரோ' என்று சொன்னார். அங்யாகம நிஷ்டர்கள் சாரணத்வ ஶங்கையை ஶங்கரனிடமும் பார்வதியினிடமும் ப்ரமித்துச் செய்கின்றனர். அந்தஶங்கா நிவ்ருத்தியர்த்தம் அவர்களும் மற்ற எல்லாத் தேவர்களும் வீரராகவனே உபாஸிக்கின்றனர் என்பதை 'கூரதநாதிஃ ஷாக்ஷாயணீ ஶாதிஹிஃ' என்று காட்டுகின்றார். அப்படிப்பட்ட ஸர்வேஶ்வரன் இந்த வீக்ஷாரண்யத்தில் ஸேவைஸாதிப்பனேன் எனும் ப்ரஶ்னைக்கு ப்ரதிவசந மளிக்கின்றார். உத்தம ஸாஹித்யம், கூர்மையான புத்தி, க்ஷமை, ஆயுஸ், வ்யாதியின்மை, செல்வம், கீர்த்தி, மோக்ஷம், முதலான ஸர்வாபேக்ஷிதங்களையும் விரும்பும் ஜநங்களுக்குக் கதியாகப் பெருமாள் இந்த வீக்ஷாரண்ய க்ஷேத்திரத்தில் ப்ரகாசிக்கின்றனர் என்று ஶ்லோகத்தை முடிக்கின்றார்.

"தேசிகன் பேரருளாளனை ஸ்ரீராமனையும் க்ருஷ்ணனையும் அநுஸந்தித்து அருளிச்செய்த 'உத்தம வர்த்தலம்' எனும் பாசுரம் உனக்கு ஜ்ஞாபகம் இருக்குமே. ஸ்ரீ வீரராகவனைக் கலியன் அவ்வண்ணமே மங்களாஶாஸம் செய்திருக்கின்றார்.

'காசையாடை மூடியோடிக் காதல்செய்தா னவனூர்
நாசமாக நம்பவல்ல நம்பிநம் பெருமான்
வேயினன்ன தோண்மடவார் வெண்ணெயுண்டா னிவனென்
றேசநின்ற வெம்பெருமா னெவ்வுட்கிடந்தானே.'

இது ஆழ்வார் பாசுரம். காஷாயத்தால் தன்னுடைய ராக்ஷஸ ரூபத்தை மறைத்துத் தெய்வக் கற்பின் பேர்மகள்மேல் காதல் கொண்டு அவளைக் கவர்ந்து போன ராவணனுடைய லங்கா நகரத்தை, 'ஸமேரஸூ லங்காநாம்கூஜா' என்கிறபடியே, முற்றும் அழித்தவன் என்பது முற்பாதியின் பொருள். இது பரத்வத்தைக் காட்டுகின்றது. காலங்களில் எவ்வளவு ஸௌலப்யத்தைக் காட்டினபோதிலும் ஸ்ரீராகவன் பரத்வத்தை என்றும் விட்டதில்லை. இடைச்சிகள் ஏசவும் பேசவும் இடங்கொடுத்த ஸௌலப்யம் கண்ணனிடம் உண்டென்று அதைப்பற்றிப் பாடினார் பிற்பாதியில். இப்படி இரண்டு அவதார மஹிமையும் எம்பெருமானிடம் தங்கிநிற்கப் பரத்வத்தை மிகுதியாகப் பெரிய பெருமாளிடமும், ஸௌலப்யத்தை முக்யமாக அதிஸுந்தரமூர்த்தியான உத்ஸவரிடமும் கொண்டாடுகின்றனர். ஸக்ருத் ப்ரபதநம் செய்து, யானுன்னடிமை யென்பார்க்கெல்லாம் அபய ப்ரதானத்தை வ்ரதமாகக்கொண்ட பெருமாள் இங்கே ஸேவை ஸாதிக்கின்றார். மஹாபாதகம் செய்தவரானாலும் இந்த ப்ரதிஜ்ஞைக்கு விலக்காகமாட்டார். 'யதி வா ராவணஸ்ஸ்வயம்' என்றருளிச் செய்தன ரன்றோ? நெருங்க அஞ்சும் சேதநர்க்கு 'ரூபௌதார்ய-குணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்' என்கிறபடியே தர்சிப்பவர் மநஸ்ஸுக்களைத் தன் ரூபாதிசயத்தால் ஆகர்ஷிக்கின்றார் உத்ஸவமூர்த்தி. ஆகர்ஷித்து, "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ। அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:" என்கிறபடியே, 'என் திருவடிகளைச் சரணமாகப் பொருவாய்; என்னிடம் சேரத் தடையாய் நிற்கும் உன் தீவினை யனைத்தையும் நான் போக்குகின்றேன். அவற்றை நினைத்து நீ பேராக்க வேண்டாம்' என்று சொல்லித் தம்முடைய உதார கல்யாண குணங்களையும் ஆவிஷ்கரிக்கின்றார்.

இப்படிக்கெல்லாம் இந்தத் திவ்ய தேசத்தெம்பெருமானை அநுபவிப்பாய்." என்று சொல்லி முடித்தார் கேசவாசார்யர்.

உடனே ஜநகநந்தினி, "அப்பா! தேவரீர் விவரித்தபடியே ஸமஸ்த கல்யாண குணங்கட்கு ஆச்ரயனாய், ஸர்வ பூதங்கட்கும் அபயப்ரதாநம் செய்வதில் தீக்ஷிதனாய், பரத்வத்தின் ஸௌலப்யாதிசயம் பூண்டவனாய், அடியேனுடைய த்ருஷ்டி சித்தங்களை அபஹரிக்கின்றவனாய் ஸேவை ஸாதிக்கும் இந்த எம்பெருமான் ஸந்நிதியில் அடியேனுடைய ஆத்மரக்ஷாபரத்தை ஸமர்ப்பிக்க திருவுள்ளம் பற்றக் கூடாதோ?" என்று சொன்னாள்.

அதைக் கேட்டார் கேசவாசார்யர். ஈஷத் பெருமூச்சுவிட்டார். பிறகு, "குழந்தாய்" இந்த ஸந்நிதியிலும் அதற்கு ஸௌகர்யக் குறைவு உண்டு" என்று சொன்னார்.

"ஏன் அப்படி? திருமலையில் தான் தென்கலையார் தடுப்பாரென்று யோசிக்கும்படி இருந்தது. இது வடகலை ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு ஏகதேசமாய் நேர்ந்த ஸந்நிதியாச்சுதே." என்று ஜநகநந்தினி மொழிந்தாள்.

"நீ சொன்னது ஸரியே. ஆனாலும் இந்த ஸந்நிதி விசாரணை அஹோபிலம் மடம் ஸ்வாமிகளுடையது. அவர்கள் பெருமாள் முன்னிலையில் யாரையும் ப்ரபத்யநுஷ்டாநம் பண்ணவொட்டுகின்றதில்லை என்று ப்ரஸித்தி" என்றார் கேசவாசார்யர்.

"அவர்கள் ஏன் அப்படிச்செய்யவேண்டும்? தேசிகன் ஸம்ப்ரதாயத்தில் விச்வாஸக் குறைவா? பெருமாள் கோவிலில் நிராடங்கமாய் அநுஷ்டிக்கிறார்களே." என்றனள் ஜநகநந்தினி.

"பெருமாள் கோவில், திருக்குடந்தை முதலான திவ்யதேசங்களில் ப்ரபத்யநுஷ்டாநம் ஸுகமாக நடக்கின்றது. தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு அதிகப்ரவேசமுள்ள ஸ்ரீரங்கம் முதலான திவ்யதேசங்களிலும் உபாயாநுஷ்டாநம் பெருமாள் முன்னிலையில் பண்ணலாம். இங்கே மடம் ஸ்வாமிகள் தாங்களும் ராகவன் முன்னால் ஒருவர்க்கும் பரந்யாஸம் செய்வதில்லை. அதற்குக்காரணத்தை விசாரித்துப் பயனில்லை." என்றனர் கேசவாசார்யர்.

"இப்படியும் தேசிகன் ஸம்ப்ரதாயஸ்தர்கள் செய்வார்களோ? பெருமாளுடைய ப்ரதிஜ்ஞையை வ்யர்த்தமாக்கினால் பெருமாள் அதைத் திருவுள்ளம் பற்றுவரோ?" என்றாள் ஜநகநந்தினி.

"பகு பெயர்கள் இந்த ஊரில் பரங்யாஸம் அநுஷ்டிக்க வேண்டுமானால், புஷ்கரணி கரையில் நின்று கொண்டு விமானத்தைத் தர்சித்துக்கொண்டு அநுஷ்டிக்கின்றார்கள். பெருமாளுடைய ஸந்நிதியில் ஏகாந்தத்தில் உபாயாநுஷ்டானம் செய்வது உன் விஷயத்தில் உசிதமாகத் தோன்றுகின்றது. ஆத்ம ரக்ஷாபரத்தை ஸ்வீகரிக்கப் பேரருளாளன் அவஸர ப்ரதீக்ஷனாய் நிற்கின்றான். ஆதலால் நீ கொஞ்சம் பொறுமையை வஹித்திருக்கக் கூடாதோ? பகவான் எல்லாத் திவ்யதேசங்களிலும் ஸாந்நித்யம் செய்கின்றான். மூர்த்தி பேதத்தால் அவனுக்கு நாம பேதம் உண்டாயிருக்கின்றது. ப்ரணதார்த்தி ஹரனுடைய சுஸ்ரூஷை விம்சதாவதி சாஸி ரவியூஹத்தை நிரந்தரம் அநுபவித்த உனக்கு, அவனே த்யாக விஷயமானால் நல்லது." என்று சொல்லி முடித்தார் கேசவாசார்யர்.

திருவெவ்வுளூரில் நாலு நாளிருந்து பின்பு கேசவாசார்யர் ஸகுடும்பமாகப் பெருமாள் கோவிலுக்குத் திரும்பி வந்து சேர்ந்தார்.

## பதினேழாவது அதிகாரம்.

கேசவாசார்யர் பெருமாள் கோவிலுக்குத் திரும்பிவந்ததும் நவராத்ரி உத்ஸவம் ஆரம்பித்துவிட்டது. தூப்புல் தேசிகனுக்கும் வர்ஷோத்ஸவம் நடந்தது. அது அவ்வர்ஷம் விபவமாக நடக்கவே, அக்ரஹார வாஸிகளெல்லோரும் ஆசமாந்தார்யன் உத்ஸவத்தை அநுபவிக்கக் காஞ்சிபுரத்தில வந்து கூடினார்கள். மத்யாஹ்நங்களில் திருப்பல்லக்கிலும், ராத்ரி காலங்களில் வெவ்வேறு வாஹநங்கள் மீதிலும், ஸ்ரீ தேசிகன் உத்ஸவம் கண்டருளினார். தினந்தோறும் இரண்டு காலங்களிலும் தேவாதிராஜனுடைய ஸந்நிதி வீதியிலும் மாடவீதிகளிலும் தேசிகன் எழுந்தருளினார். தேசிகனுடன் பின்சென்ற வேதபாராயண ச்ரேஷ்டர்களில் ஸ்வாமிகள் விசேஷமாக ஸேவை ஸாதித்தார்கள். வைசாக உத்ஸவங்களிலும் அவ்வளவு வைதிக ஸம்ருத்தி ப்ரகாசிப்பதில்லை. தேசிக பக்தர்கள் அவ்வுத்ஸவத்தை ஸேவித்து ஆநந்தித்தார்கள்.

தேசிகன் ராத்ரி காலங்களில் ஸந்நிதி வீதிக்கு எழுந்தருளுமுன், ஸந்நிதிக்குள் பெருமாளும் தாயாரும் நூற்றுக்கால மண்ட

பத்தின் முன்பாக அமைக்கப்பட்ட சித்திரப்பந்தரில் பத்தி உலாவி மண்டபத்தின்மேல் எழுந்தருளுவது வழக்கமா யிருந்தது. தேசிகன் திரும்பித் தூப்புலுக்குச் சென்றபிறகு, பெருமாள் தாயார் மிகுந்த உத்ஸவத்தைக் கண்டருளினார்கள்.

கேசவாசார்யர் தேசிகன் எழுந்தருளும்போதெல்லாம் வேதபாராயண கைங்கர்யத்தில் அந்வயிப்பர். அக்கைங்கர்யம் நிறைவேறின பிறகு ஸந்நிதிக்குச் சென்று பெருமாளையும் தாயாரையும் ஸேவிப்பார். தேசிகன் வீதியை அலங்கரிக்கும்போது ஹரிப்ரியை வாசலில் வந்து ஸேவிப்பள். ஜநகநந்தினியோ வாசற்படி தாண்டாமல் உள் நின்று ஆசார்யனைத் தர்சிப்பள்.

அவளுடைய உள்ளத்தினின்று ஸுகமும் ஸந்தோஷமும் முற்றிலும் வெளிப்பட்டுப்போயின. அவளுடைய சரிதத்தில் சாயாமாத்ரமளவும் வைகுண்யம் தட்டவில்லை. அவளுடைய அருமை யறியாத புருஷன் செயலால், அவள் ஆடவர் முன் வர வெட்கப்பட்டனள். திவ்ய தேசங்கள் ஸஞ்சரிக்கும் வரையில் தன்னுடைய க்லேசத்தைக் கொஞ்சம் மறந்திருந்தாள். கச்சிநகர் வந்தவுடன் முன்போலவே அது அவளைப் பாதிக்கத் தொடங்கியது. கோவிலுக்கு அவளும் போவதில்லை; ஹரிப்ரியையும் போவதில்லை.

பெருமாள் கோவில் திரும்பிவந்தது முதல் ஜநகம் ரஹஸ்ய த்ரய ஸாரத்தை ரஸித்துச் சிந்தனைசெய்ய ஆரம்பித்தாள். க்ருஹ வ்யாபாரத்தில் அந்வயித்த காலம் நீங்க, மிகுதியான காலமெல்லாம் புஸ்தக நிரீக்ஷணம் செய்வள். இப்படி அவள் இடைவிடாமல் புஸ்தகம் பார்ப்பதைக் கேசவாசார்யர் அடிக்கடி கண்டார். ஒருதரம் அவள் ஸமீபத்தில் சென்றார். புஸ்தகக்கையுடன் ஜநகம எழுந்து நின்றாள்.

“ஜநகம்! என்ன வாசிக்கின்றாய்?” என்று கேசவாசார்யர் கேட்டார். ஜநகநந்தினி ஸ்ரீ கோசத்தைத் திறந்துகாட்டினாள். நிர்யாணாதிகாரம் அவள் விரலிட்ட இடத்தில் காணப்பட்டது. “ஆன பின்பு பகவத்பக்ஷத்தில் அந்திம ஸ்ம்ருதி, முக்தராகிறவர்க்கும் மோக்ஷம் கொடுக்கிறவர்க்கும் தெரியு மித்தனை. இதுக்கு அநந்தரம் யோகிகளோடும் அயோகிகளோடும் வாசியற ஹார்த்தனை

பரமாத்மாவின் பக்கலிலே விச்ரமிக்குமளவும் ஸுஷுப்தி துல்யமாயிருக்கும்" என்கிற பங்க்தியைக் கேஶவாசார்யர் வாசித்தார். சிந்தையிலாழ்ந்தார்.

"குழந்தாய்! இந்தச் சிந்தனை செய்வதில் உன் அபிப்ராயமென்ன?" என்று கேட்டார்.

"தேவரீர் அடியேனை அநுக்ரஹிக்கத் திருவுள்ளம் பற்றியிருப்பதாக நம்பியிருக்கின்றேன். அதற்காக அடியேனுக்கு உசிதமான ஜ்ஞாநத்தையும் உபதேசம் செய்திருக்கின்றது. இந்த க்ரந்தாவலோகநத்தினால் அந்த ஜ்ஞாநத்தை த்ருடப்படுத்திக் கொள்கின்றேன்." என்று சொன்னாள் ஜநகநந்திநி.

கேசவாசார்யருக்கு மேல்வார்த்தை சொல்ல இடங்கொடுக்கவில்லை. பகவத் ஸேவார்த்தம் ஸந்நிதிக்குச் சென்றார். அன்று மஹாநவமி ஐந்தாவது உத்ஸவம். பெருமாளும் தாயாரும் அபிஷேக மண்டபத்தில் கண்ணாடி யறையில் ஸேவை தந்தார்கள். பகவத் ஸேவாநந்தரம் வெளியே வரும்போது கேசவாசார்யர், பத்மநாபாசார்யரும் மாதவாசார்யரும் முன்மண்டபத்தில் ஓர் புறமாக உட்கார்ந்து ஸம்பாஷித்துக் கொண்டிருக்க கண்டார். அவர்களும் கேசவாசார்யரைக் கூப்பிட்டு உட்காரச் சொன்னார்கள். அவரும் அவர்கள் ஸமீபத்தில் போய் உட்கார்ந்தனர். "ஸ்வாமிந்! குமாரத்தி எவ்வண்ணம் இருக்கின்றாள்?" என்று மாதவாசார்யர் கேட்டார்.

"பத்மநாபாசார்யருக்கு எல்லாம் தெரியுமே. அந்த ஸ்வாமி தேவரீருடன் சொல்லவில்லையா" என்றனர் கேசவாசார்யர்.

"அந்த ஸ்வாமியும் ப்ரஸ்தாவித்திருக்கின்றார். அடியேனுக்கும் கிஞ்சித் தெரிந்திருக்கின்றது. க்லேஶ நிவாரணார்த்தமாகத் திவ்ய தேச யாத்ரை செய்தாயிற்றே. தத்நந்தரம் எப்படியிருக்கின்றாள் என்று அடியேன் கேட்டபடி" என்று சொன்னார் மாதவாசார்யர்.

"யாத்ரை காலம்வரையில் துக்கத்தின் ப்ரகாசம் அவ்வளவாகத் தெரியவில்லை. பெருமாள் கோவிலுக்குத் திரும்பிவந்த பிறகு அது பூர்வஸ்திதியில் தான் இருப்பதாக யோசிக்கின்றேன். பக

வத் ஸங்கல்பம் எப்படியிருக்குமோ?" என்று சொல்லிக் கேசவாசார்யர் மௌனத்தை ஆஸ்ரயித்தார். பத்மநாபாசார்யர் முகம் கறுத்தது. மேலே வார்த்தைகள் சொல்ல மூவர்க்கும் அமையவில்லை. இதற்குள் வாத்ய ஶப்தம் ஸந்நிதிக்கு வெளியே கேட்டது. தேசிகன் எழுந்தருளிவிட்டாரென்று மூன்று ஸ்வாமிகளும் ஸந்நிதிக்கு வெளியே சென்றார்கள். நிகம சூடா தேசிகேந்த்ரனை ஸேவித்தார்கள். வேத கோஷ்டியில் போய்ச் சேர்ந்தார்கள்.

தேசிகனும் மாடவீதி ப்ரதக்ஷிணமாக வலம் வந்து, பிறகு ஸந்நிதி வீதிக்குள் ப்ரவேசித்துக் கோபுரத்வாரம் வரையில் எழுந்தருளினார். அவ்விடம் க்ஷணகாலம் தாமதித்துத் திரும்பி ஸந்நிதி வீதியைக் கடந்து திருத்தண்காவுக்குத் திரும்பினார். அநுயாத்ரையைக் கோபுரத்வார ஸமீபத்தில் ஸ்ரீநிவாஸன் செய்ய ஆரம்பித்தான். ஸந்நிதி வீதியின் முடிவில் அதை முடித்தான். கேசவாசார்யர் முதலானவர்கள் பெருமாள் கோவிலுக்குத் திரும்பிவந்த பிறகு, அன்றுவரையில் ஸ்ரீநிவாஸன் அவர்களைப் பார்க்கவில்லை; அவர்கள் அகத்துக்கும் அவன் சொல்லவில்லை. அவர்களுடைய கஷ்டம் பெரிதாயிருந்தாலும், ஸ்ரீநிவாஸனுடைய துயரம் அதற்குக் குறைந்ததாயில்லை. ஆதலால் அவனும் அவஶ்யமின்றி வீட்டைவிட்டுப் போனதில்லை.

ஜகந்நந்தினியுடைய திவ்யதேசயாத்ரை யாரம்பித்த பிறகு ஸ்ரீநிவாஸன் பி. ஏ. பரிக்ஷையில் தேறினானென்று ஸமாசாரம் வந்தது. அதனால் அவனுக்குக் குதூஹலம் சிறிதுமில்லை. லோகத்தில, காமுகர்க்கு, ‘[illegible]’ என்கிற படியே, இச்சாவிஷயமாகின்ற பெண்கள் கிடைப்பதரிதென்று தோன்றும்போதும, அஸுலப வஸ்து ப்ரார்த்தனையும், அதற்குக் காரணமாகின்ற பஞ்சபாணனுடைய பாதையும ஸஹஜம. அவ்வஸ்து மற்றொருவனுடையதாகப் போனபிறகும், காமத்தின் அநுவ்ருத்தியானது சிலவிடங்களில் காணப்படுகின்றது. அந்த அநுவ்ருத்தியானது ராவணாதிகளைப்போன்ற துஷ்டர்களிடம் அஸஹ்யமான பாபத்தொழிலுக்குக் காரணமாகின்றது. ஸ்ரீநிவாஸனைப் போன்ற சிலர்களிடம அது மிகவும் கடினமான மனோவ்யாதியை உண்டாக்கி அக்காயத்தை நிலைக்கச் செய்கின்றது. ஜகத்தின் நற்

குணங்கள், ஸ்ரீநிவாஸனுடைய ப்ரதம ப்ரார்த்தனையையும், பின் நேர்ந்த மனோவ்யாதியையும், மர்யாதைகளைக் கடக்காத வழியில் நிறுத்தின. இப்படிப்பட்ட தசையில் கேவலம் பந்து க்ருத்யப்ர யுக்தமாக ஸ்ரீநிவாஸன் ஜநகநந்தினி முதலானோர்க்குச் சொல்லக் கூடிய உபசாரோக்திகளையும் சொல்ல அசக்தனாயிருந்தான்.

திருவடி கோவிலில் தூப்புல் தேசிகனைப் பிரிந்து ஸ்வக்ருஹத்தை நோக்கி ஸ்ரீநிவாஸன் நடந்தான். நடக்கும்போது அம்மான் திருமாளிகையைக் கண்ணுற்றான். அதற்குள் செல்லவேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. உடனே உள்ளே சென்றான். ஓர் தாழ்வாரத்தில் ஜநகநந்தினி உட்கார்ந்திருக்கக் கண்டான். அவள் கையில் புஸ்தகம் ஒன்று அதனுள்ளிட்ட விரலுடன் ப்ரகாசித்தது. அவள் கண்களோ தரையைப் பார்த்துக்கொண்டிருந்தன. அவன் உள்நுழைந்தவுடன் அவள் தலைநிமிர்ந்தாள். இருவரும் ஒருவரை யொருவர் பார்த்தார்கள். துக்கத்தால் ஜநகநந்தினி (?) பேசிபடைந்த வாட்டத்தை ஸ்ரீநிவாஸன் அப்போதுதான் கண்டான்; உடனே திடுக்கிட்டு நின்றான். அவனுக்கு வாமொழிவில்லை. அவளும் ஒன்றும் பேசவில்லை.

தன்னுடைய புத்தியைச் சிறிது நிலைப்படுத்திக்கொண்டு ஸ்ரீநிவாஸன் பேச ஆரம்பித்தான்: "ஜநகம்! என்ன புஸ்தகம் உன் கையிலிருக்கின்றது?" என்றனன்.

"ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்" என்றாள் ஜநகநந்தினி.

"அதுவும் உனக்குத் தெளிவைத் தரவில்லையோ? தைர்யத்தை இழந்தாய். உன் துக்கத்தால் உனது சரீரம் பட்டபாட்டை அறிவையோ?" என்றான் ஸ்ரீநிவாஸன். ஜநகநந்தினி ப்ரத்யுத்தரம் அளிக்காமல் தரையை நோக்கிக்கொண்டிருந்தாள். "நான் செய்யத் தகாத கார்யம் செய்தேனோ? சொல்லக்கூடாத வார்த்தைகள் சொன்னேனோ? நீ மறந்திருந்த துன்பத்தைத் தூண்டிக் கிளப்பினேனோ? தெரியாமல் நடந்தேன்; என்னை க்ஷமிப்பாய். அம்மா எங்கே?" என்று ஸ்ரீநிவாஸன் சொன்னான்.

"உள்ளே தளிகை பண்ணுகின்றாள்." என்று ஜநகநந்தினி தலைகுனிந்த வண்ணம் விடை தந்தாள்.

"நான் வந்த வேளை நன்றாயில்லை. பிற்பாடு வருகின்றேன்" என்று சொல்லிவிட்டு ஸ்ரீநிவாஸன் நடந்தான். நடுப்பகலில் அந்த ஸந்நிதி வீதி அவனுக்கு இருள் மூடி நின்றது. "தீராத் துயரத்தால் தபிக்கப்பட்டாள். மநுஷ்யர் எதிர் அவள்வர வெட்கப்படுகின்றாள். காயக்லேசம் செய்கின்றாள். அவள் உடல் இளைத்தது. தன் சோகத்தை ஸதா சிந்திக்கின்றாள். துக்கமே அவள் ஹ்ருதயத்தில் நிலைக்கின்றது. அவள் ஸுகார்ஹை. அவளைத் துக்கம் மிகவும் பீடிக்கின்றது. வ்யஸநத்தைப் பரிக்கவும் திறனற்றவள். பூர்ண சந்த்ர முகத்தோடும், வில்லைப்போல் வளைந்து கறுத்த புருவக் கொடியோடும், செந்தாமரைக்கண்களுடனும், கார்மேகம் போன்ற கூந்தலுடனும், கோவைப் பழம்போன்ற உதடுகளுடனும், மெல்லிடையோடும், அழகாயமைந்த ஸர்வாவயவங்களுடனும், ஸ்வர்ணச்சாயையை யொத்த மேனியுடனும், இந்துவின் நிலாவைப்போல் பார்ப்பவர் கண்களைக் குளிரச்செய்யு மிவளைப் பெற்றவர்கள், இவளை வித்யையில் வளர்த்து, ஸர்வகுணங்களோடு தொடுத்து, முடிவில் சோகத்துக்குத் தாரை வார்த்தார்களே!" என்று இவ்வண்ணம் எண்ணமிட்டுக்கொண்டே ஸ்ரீநிவாஸன் தன் இல்லம் சென்றனன்.

ஓர் புறம் தேசிகன் உத்ஸவமும், மற்றோர் புறம் நவராத்ரி உத்ஸவமும், சின்ன காஞ்சீபுரவாஸிகளுக்குப் போது போக்காக வளர்ந்தன. கோவிலுக்குப் போய் வந்துகொண்டும், வீதிகளில் நடந்துகொண்டும், உத்ஸாகத்துடன் யாவரும் உத்ஸவங்கள் அநுபவித்தார்கள். கேசவாசார்யரோ தம்முடைய வ்யஸநத்தைக் காட்டாமல் கைங்கர்ய புத்தியால் உத்ஸவங்களுக்குப் போனார். ஹரிப்ரியைக்கும் ஜநகநந்திநிக்கும் அவ்வளவுமில்லை.

நவராத்ரி முடிந்தது. மறுநாள் தேசிகன் மங்களாசாஸநத்தின் பொருட்டு வரதன் ஸந்நிதிக்கு எழுந்தருளினார். அன்று காலையில் கேசவாசார்யர் பெண்ணைப் பார்த்து, "குழந்தாய்! இன்று தேசிகன் மங்களாசாஸநம் நடக்கப்போகின்றது; ஸந்நிதிக்குப் போகின்றையோ?" என்று கேட்டார்.

"நியமித்தால் போகின்றேன். ஆர் என்னை அழைத்துக்கொண்டு போவார்கள்?" என்று ஜநகநந்திநி சொன்னாள்.

"ஏன் அப்படிக் கேட்கின்றாய்? அம்மாவை அழைத்துக்கொண்டுபோ. வாசற்கதவைப் பூட்டிக்கொண்டு போகலாம். தேசி

கன் ஸந்நிதி வீதிக்கு எழுந்தருளும் முன்னமே நீங்கள் மலைக்குப் போய்க் காத்திருப்பீர்கள். பெருமாளும் தேசிகனும் கீழே எழுந்தருளும்போது நீங்களும் அநுயாத்ரையாகக் கீழே வரலாம். தேசிகன் வாஹந மண்டபம் எழுந்தருளின பிறகு அகத்துக்குப் போவீர்கள். தேசிகன் திருவீதி யலங்கரிக்கும்போது, அகத்து வாசலில் நின்று ஸேவிக்கலாம்” என்று கேசவாசார்யர் சொன்னார்.

பிதாவின் வாக்யத்தைப் பரிபாலநம் செய்யவேண்டுமென்று ஜநகநந்திநி ஸந்நிதிக்குப் போக இசைந்தனள். தேசிகனிடத்திலும் பெருமாளிடத்திலும் குறைவற்ற பக்தியுள்ளவளானாலும் தன்னுடைய நிலையில் வீட்டைவிட்டு வெளியே போக அவளுக்கு ப்ரியமில்லாமல் போய்விட்டது. கூட்டத்தின் மிகுதியை யோசித்தும், போலீஸ் நிர்பந்தங்களை எதிர்பார்த்தும், தேசிகன் ஸந்நிதி வீதிக்கு எழுந்தருளு முன்னமே ஜநகநந்திநியும் அவள் ஜநநியும் மலைக்குப்போய்விட்டார்கள்.

தேசிகன், ஸந்நிதி வீதி மேல் கோடியில் எழுந்தருளும்போதே அவ்வீதி, தேசிக பக்தர்களான ஸ்ரீ வைஷ்ணவ மயமாய்ப் போயினது. அவர்கள் ப்ராயிகமாக விப்ரர்களா யிருந்தபடியால் அது ப்ராஹ்மண மயமாய்ப் போயிற்றென்றும் சொல்லலாம். ப்ரஹ்மண்ய தேவனும் ப்ராஹ்மண ஹிதனுமான புண்டரீகாக்ஷனுக்கு, அப்போது ஸந்நிதிவீதி ப்ரியதர்ஸநமா யிருந்தது. ‘க்ஷவி ௐ ஹவிஶௌரெ வஸூ வெதாசேஹம் யநம்’ என்கிறபடியே, வரதனைத் தவிரத் தமக்கு அபேக்ஷிதார்த்தம் ஒன்றுமில்லை என்று அத்யவஸிக்க பரமாசார்யனுடைய திருவடியை நம்பின விப்ரர்கள், ஸ்ரீக்ருஷ்ணன் உகந்தபடியே ஸ்வலாப ஸந்துஷ்டர்களாயும், ஸாதுக்களாயும், பூதஸூஹ்ருத்தமர்களாயும், நிரஹங்காரிகளாயும், ஶாந்தர்களாயும் ப்ராயிகமாகப் பரிணமிப்பார்கள். தேசிகன் உத்ஸவார்த்தமாகப் பெருமாள் கோவிலுக்கு வந்தவர்களுக்கு மேல்விவரித்தபடியே ஸந்நிதி வீதியில் ஸேவை ஸாதித்த த்விஜோத்தமர்களுடைய தர்சநமும் ப்ராப்தமாயிற்று.

இவ்வண்ணம், நிகமாந்தார்யனுடைய கோதிலாத் தாள் மலரைக் கொண்டாடிக் கொண்டிருக்கும் தீதிலா நல்லோர் திரளை வருஷந்தோறும் தர்சித்து, அந்த ஸதாசார்ய ஸம்பந்தம் ஸ்வாசார்ய

த்வாரா தமக்குக் கிடைத்த ஸுக்ருதத்தை மகித்த சிலர், அவ்வுத்ஸவம் மிகவும் பரிமளிக்கும்படி, ஸந்நிதி வீதிக்குத் திவ்யாலங்காரம் செய்து களித்தார்கள். பக்தி க்ருதமான விபவத்தைக் கடாக்ஷித்துக்கொண்டு தேசிகன் கோபுரத்வாரம் எழுந்தருளவும், ஸ்வாமிக்கு நித்யகைங்கர்யம் செய்கின்ற அர்ச்சகர் முதலான பரிஜநங்கள் விலகினார்கள். பேரருளாளன் ஆஜ்ஞா பரிபாலநத்தை சிரஸா வஹித்த பெரிய ஸந்நிதியைச் சேர்ந்த அர்ச்சகர் முதலான கிங்கரர்கள் தேசிகனை எதிர்கொண்டு, அவ்விடம் தேசிகனுடைய கைங்கர்யத்தில் அந்வயித்தார்கள். அவ்வண்ணமே, தூப்புல் தேசிகன் திருப்பல்லக்குடன் பெருமாள் ஸந்நிதியைச் சேர்ந்த தேசிகன் ஸந்நிதிக்கு எழுந்தருளினர். அங்கு ஸ்ரீ வைஷ்ணவ விப்ரர்கள் தோள்களுக்கு இனியதோர் கைப்பலகையில் எழுந்தருளப்பண்ணப்பட்டவராய், தேவாதிராஜனுடைய கிங்கரரால் ஸர்வப்ரகாரத்தாலும் உபசரிக்கப்பட்டவராய்த் தொண்டரடிப் பொடிக்குள் எழுந்தருளினர். சக்ரவர்த்தித் திருமகன், தாயார் முதலானவர்களுடைய ஸந்நிதிகளுக்குச் சென்று, அடியார் சேகரித்த உபஹாராதிகளை அங்கங்கே ஸமர்ப்பித்து, ஸ்வக்ருதமான திவ்ய ஸ்தோத்ரங்களை உசிதப்படி ஸ்வபக்தர்கள் படநம் செய்கையில, யதாக்ரமம் மங்களாஸாஸநம் செய்துகொண்டு ப்ரதக்ஷிணமாக எழுந்தருளினர். பிறகு ஸ்தோத்ர படந ஸஹிதயாக வைதேயனையும் ந்ருஸிம்மனையும் ஆண்டாளையும் ஸேவித்துக்கொண்டு, ஹஸ்திகிரீஸனை ஸேவிக்க ஹஸ்திகிரிமீது எழுந்தருளினர்.

பெருமாள் ஸந்நிதி முன் மண்டபத்தின் மத்யே தேசிகன் எழுந்தருளி நின்றார். வடகலை ஸ்ரீ வைஷ்ணவர்கள் தேசிகன் முன்பாக இருபுறமும் கோஷ்டியாக நின்றனர். அம்மண்டபம், பெருமாள் ஸந்நிதி, ஸந்நிதி ப்ரதக்ஷிணம், இவை யாவற்றிலும் தேசிக பக்தர் நிறைந்து நின்றார்கள். அது போலீஸ் உத்யோகஸ்தர்கள் செய்த உபகாரம். கோவிலுக்குள் ப்ரவேசித்த தேசிக பக்தர்களில் நூற்றிலோர் பாகம்கூட மலையின்மேல் அடைவதற்கு இடமிராது.

தேசிகன் எழுந்தருளின உடனே வரதராஜ பஞ்சாஸத் ஸ்தோத்ரம் படிக்கப்பட்டது. பிறகு தேசிகன் சர்பப க்ருஹத்துக்குள் எழுந்தருளி, பெருமாளுடன் ஏகாஸநத்தில் இருப்பதை பெரி

த்து, வரதன் முன்னால் நிவேசிக்கப்பட்டார். தேசிக பக்தர்கள் கொண்டுவந்த விவித விசித்ரங்களான உபஹார வர்க்கங்கள் பெருமாளுக்கு ஸமர்ப்பிக்கப்பட்டன. பெருமாள் அவ்வுபஹாரங்களை திருவுள்ளம்பற்றினவுடன் பெருமாளுக்குக் கர்ப்பூர ஹாரத்தி பண்ணப்பட்டது பிறகு ந்யாஸ தசகமும் ந்யாஸ விம்சதியின் முடிவான ஸ்லோகமும் தேசிக பக்தர்களால் அத்யாதரத்துடன படிக்கப்பட்டன. அது நடந்த உடனே தேசிகன் முன்போல் முன் மண்டபத்தில் எழுந்தருளி நின்றார். பெருமாளுடைய திருப்பரியட்டம் திருமாலை, ஸ்ரீ ஸடாரி முதலான ஸர்வமர்யாதைகளும், யதாந்யாயம் தேசிகனுக்கு செய்யப்பட்டன.

> ‘ [illegible] ॥’

என்று, விபவ தசையில் மஹாதயாதீரனை அநுபவித்தவண்ணம், நின்றவிடத்தில் நிலைத்துப் பெருமாளைச் சிறிது காலம் அநுபவித்துவிட்டு, ப்ரதக்ஷிணமாக எழுந்தருளித் தம்முடைய ப்ராசார்யனான நடாதூர் அம்மாள் காலக்ஷேப மண்டபத்தில் தேசிகன் வீற்றிருந்தார். அவ்விடம் பக்தஜநங்கள் தேசிகனுடைய இதர ஸ்தோத்ரங்களைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

இதற்குள் பெருமாளும் அலங்காரம் செய்துகொண்டு மலையின் கீழிறங்கத் திருவுள்ளம் பற்றினார். ‘ [illegible] ’ என்றும், ‘ [illegible] ’ ‘ [illegible] ’ என்றும், வேங்கட நாதன் அநுஸந்தித்தபடியைத் தேவாதிராஜன் திருவுள்ளம் பற்றி, ஸந்தர்ப்பாநுகூலமாகக் கோபாலன் திருக்கோலங்கொண்டு ப்ரதக்ஷிணமாக எழுந்தருளினார். எழுந்தருளின பெருமாளை தேசிகன் எதிர்கொண்டு ஸமீபத்தில் நின்று, ‘ [illegible] ’ என்று கோபீஜநங்கள் ஸ்ரீ க்ருஷ்ணனுடைய தர்சநத்தை ப்ரார்த்தித்த வண்ணம் நிரந்தரமாக அநுபவித்தார்.

அந்த க்ரமத்திலே பெருமாளும் தேசிகனும்கூடி ஸர்வ ஸேவார்த்திகளுக்கும் அமிதமான ஸந்தோஷத்தை அளித்துக்கொண்டு, அடிமேல் அடியாக மலையிறங்கி, மலை ப்ரதக்ஷிணமாக அபிஷேக மண்டபத்தின் முன் எழுந்தருளினார்கள்.

அங்கே பெருமாள் மண்டபத்தின்மீது நிற்கவும், தேசிகன் பகவானுக்கு எதிர்முகமாகக் கீழே நிற்கவும், ஸேவார்த்திகள் தேசிகனுடைய திவ்யஸூக்திகளால் பெருமாளை ஸ்துதிக்கவும், தர்சிப்பவர்களுடைய மனங் களிக்கச் சில காலம் சென்றது. பிற்பாடு, பெருமாள் உகந்தருளிய மர்யாதைகளைத் தேசிகன் மீண்டுமொருதரம் பெற்றுக்கொண்டு, வரதனைத் தர்சித்துக்கொண்டே தொண்டரடிப்பொடி வாசலுக்காக எழுந்தருளினார். வாத்ஸல்யாதிசயத்தால வரதனும் தம்முடைய பக்தனை விட்டுப் பிரிவாற்றாமல், தேசிகன் தர்சனபதத்தில் நிற்கும் வரையில் கடாக்ஷித்துக்கொண்டு நின்றார். பிறகு பெருமாள் மண்டபத்துக்குள் எழுந்தருளினார்.

தேசிகன் பெரிய ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி, ஸுதர்ஸநன் ஸந்நிதியில ஸுதர்ஸநனையும், அவ்விடம் எழுந்தருளியிருக்கும் ஆழ்வார்களையும் மங்களாசாஸநம் செய்துகொண்டு, ஸ்ரீ பாஷ்யகாரர் ஸந்நிதிக்கு எழுந்தருளி, யதிராஜ ஸப்ததியால் பாஷ்யகாரரை மங்களாசாஸநம் செய்து, அவர் அளித்த மர்யாதைகளைப் பெற்றுக்கொண்டு, வாஹநமண்டபம் எழுந்தருளித் திருப்பல்லக்கில் மறுபடியும் ஸேவை ஸாதித்தனர்.

பிறகு ஸந்நிதி வீதியிலும் மாடவீதிகளிலும் தேசிகன் விசேஷோத்ஸவம் கண்டருளினார். அவ்வுத்ஸவ விபவத்தை விவரிக்க ஆரம்பித்தால் மிகவும் கதை வளரும். ப்ரஹ்ம தேஜஸ்ஸும் வைதிக ஸ்ரீயும், அந்த ப்ரகாரமாக மற்றெக்காலத்திலும் அவ்வூரிலாவது எவ்வூரிலாவது ப்ரகாசிக்கக் காண்பதரிது. அப்படிப்பட்ட விபவம் சிறிதும் குறையாமல் தேசிகன் தூப்புல் ஸந்நிதிக்குத் திரும்பி எழுந்தருளினார். அதற்குள் ஸூர்யனும் அஸ்தமனத்தையடைந்தான்.

ஸ்த்ரீ ஜாதிக்குரிய ஸங்கோசத்துடன் அவ்வுத்ஸவ மஹிமையை எவ்வளவு பர்யந்தம் கண்டு களிக்கக்கூடுமோ, அவ்வளவிற் குறையாமல் ஜநகநந்தினி கண்டு களித்தாள். அவள் உள்

ளத்தில் குடிகொண்ட வ்யஸநமும் அன்று மாறுதல் அடைந்தது. பெருமாளுடைய ஸேவையானது அவளுடைய சித்தத்தைக் கவர்ந்தது. தேசிகனுக்கு நடந்த விபவமெல்லாம் அவளுக்கு ஆநந்தப் பெருக்கை விளைத்தது. வாசற்படி தாண்டாமல் அன்று வரையில் பகவானை ஸேவித்தவள், அன்று ஸந்நிதிக்கு யாவரும் அறியச் சென்றது மன்றித் தேசிகன் திரும்பவும் ஸந்நிதி வீதிக்குள் ப்ரவேசித்தது முதல், க்ருஹத்தின் வெளியில் நின்று உத்ஸவ விபவத்தைக் கண்ணுற்றாள். தேசிகன் வாஹந மண்டபத்துக்கு எழுந்தருளும்போது அவள் தாயுடன் இல்லத்துக்குத் திரும்பி வந்து விட்டாள். ஆகலால், தேசிகன் திருவடி ஸந்நிதியைக் கடந்துமாடவீதி ப்ரவேசம் செய்தருளின பர்யந்தம் பத காலம் அவள் வீட்டின் வெளியே நிலைத்து நிற்க அவகாசம் கொடுத்தது. மாடவீதி ப்ரதக்ஷிணமாக உத்ஸவம் கண்டருளித் தேசிகன் மறுபடியும் திருவடி ஸந்நிதியை நெருங்கவும் வரதன் விஜயதசமி பாரிவேட்டைக்காகத் தண்டிகையில் எழுந்தருளி ஸந்நிதி வீதியைக் கடந்தனர். இவ்வண்ணம் பெருமாளும் தேசிகனும் மறுபடியும் கூடினதைத் தர்சித்தது, அது தேசிகனிடம் பெருமாள் கொண்ட விசேஷ ப்ரீதியை ஆவிஷ்கரிப்பதாக ஜநகநந்தினி நினைத்தாள்.

## பதினெட்டாவது அதிகாரம்.

பரமாசார்யனுடைய விசேஷ உத்ஸவ தர்சநம், அவனால் ஸம்யக் ரக்ஷிதமான உபாயாநுஷ்டாந விஷயமாக ஜநகத்தின் ஹ்ருதயத்தில் த்வரையை விளைவித்தது. கேசவாசார்யரும், பெண் விளம்பத்தை ஸஹிக்கமாட்டாளென்று தெரிந்துக்கொண்டார். விளம்பித்தால் அவளுக்குச் சோகம் வளருமென்று நிச்சயமாய் அறிந்தனர். ஒருநாள் அவர் புஸ்தக நிரீக்ஷணம் செய்துகொண்டிருக்கையில் ஜநகம் வந்து தண்டனஸமர்ப்பித்தாள். பின்ன அவள் கைகளைக் கூப்பிக்கொண்டு நிற்கையில், "குழந்தாய்! ஆசார்ய நிஷ்டையை விரும்புகின்றையோ? உக்திநிஷ்டை உனக்கு ப்ரியமோ?" என்று கேசவாசார்யர் மொழிந்தார்.

"ஸம்ப்ரதாய வழக்கத்தை அடியேனுக்காகத் தேவரீர் மாற்றவேண்டாம்" என்று ஜநகநந்தினி சொன்னாள்.

"உனக்குத் தெரியாத அம்சம் ஒன்றுமில்லை. ஆனாலும் ப்ரபத்தி ப்ரயோகத்தை நாளைக்கு உனககு உபதேசிக்கினறேன்.

அநுஷ்டானகாலத்தில் அதனால் உனது அநுஸந்தானம் ஸரியான க்ரமத்தில நிலைக்கும்'', என்று சொன்னார் கேசவாசார்யர். அதைக் கேட்டுக்கொண்டு ஜநகம் உள்ளே சென்றாள்.

மறுதினம், கேசவாசார்யர் பகவதாராதநம் செய்து முடித்தவுடன் ஜநகத்தைப் பகவதஸந்நிதியண்டை அழைத்தார். ஜநகம் வந்தாள்; பெருமாளை ஸேவித்து நின்றாள்; ப்ரபத்தி ப்ரயோகத்தின உபதேசத்தைப் பெற்றாள்; மறுபடி ஸேவித்தாள்; எழுந்து நின்றாள். ''குழந்தாய்! நாளைக்குப் பேரருளாளன் உன்னை அநுக்ரஹிப்பன்'' என்று கேசவாசார்யர் சொல்ல, அதைக் கேட்டுக்கொண்டு வெளியே சென்றாள்.

அன்று ஸாயங்காலம் வழக்கப்படி பத்மநாபாசார்யர் கேசவாசார்யரிடம் வந்தார். அவரைக்கொண்டு கேசவாசார்யர் மறுநாள் செய்யப்போகின்ற உபாயாநுஷ்டானத்துக்கு வேண்டிய ஸௌகர்யங்களைச் செய்வித்துக்கொண்டார்.

அன்றிரவு ஜநகநந்தினி தூங்கினாளில்லை. படுக்கையில் படுத்த பிறகு சிந்தையில ஆழ்ந்தனள. ''ஓ! கருணாஸமுத்ர! எனக்கேன் இப்பிறவித் துயரம் கொடுத்தாய்? எனக்கு ஸத்ஸங்கமளித்தாய். உன் திருவடிக்கு எனை ஆளாக்கவல்லவோ அதை நீ செய்தது? உன்னிடம் பக்தி எனக்குத் தந்தாய்; அதன் பயனன்றோ தத்வஹித புருஷார்த்த ஜ்ஞானம் எனக்கு நேர்ந்தநிலை? ப்ரவ்ருத்திமார்க்கம் எனக்கு அற்றது. நிவ்ருத்தி மார்க்கத்தை நான் அடையவேண்டியவளன்றோ? ஒவ்வொருவரும் ஸ்வகர்மங்களால் உன்னை ஆராதித்துக்கொண்டு, நிவ்ருத்தி தர்மத்தில் நின்று காலம் கழிக்கலாமென்றால, எனக்கு ஸ்வகர்மம் என்ன வைத்தாய்? நான் பர்தருமதியன்றோ? எனக்குப் பர்த்தாவின் பணிவிடை யற்றுப்போயிற்றே! ஸாக்ஷாத் ஸ்வாமி தாம் ப்ரியப்படாத பத்நியின பொருட்டு ஆர்த்த ப்ரபத்தி பண்ணி, அவ்வுலகுக்கு அவளை அனுப்பிவிட்டுத் துர்யாஸ்ரமத்தைக் கைக்கொண்டாராமே! எனது பர்த்தா அந்த அநுக்ரஹத்தை அடியேனிடம் செய்தாரில்லையே!

''இந்தத் துக்கமெல்லாம் ப்ராரப்தம் சிதைகயறுக்க வென்று எண்ணுகின்றேன். அதற்காகத்தான் நீ எனக்கு இந்த ஜநமம் அளித்தாய். இன்னும் நான் அநுபவிக்க வேணடிய ப்ராரப்த பலம்

விசேஷமாயிருந்தால், அதெல்லாம், உனது க்ருபையால் நாசமடையாதோ? எனக்கு உன் பணிவிடை யொன்று தவிர வேறேது வேண்டும்? அதை எனக்கு இப்போதே நீ அருளவேண்டும். ப்ரஹ்லாத த்ருவாதிகளுக்குப் போகாநுபவம் புண்யபலமாக லபித்தது. எனக்கு இனியொரு புண்யபலாநுபவமும் மிகுந்திருக்கின்றதோ? இந்த க்ருஹத்தில் எனக்குண்டாகிய ஜந்மம் ஸுக்ருத பலமே. உன் திருவடிகளில் பக்தியை நிலைக்கச்செய்தாய். அதுவும் ஸுக்ருத ப்ரயோஜநமே. ஸதாசார்ய கடாக்ஷமும், உன்னைப் பற்றிய ஜ்ஞாநமும், இவை எனக்கு ஸுக்ருதத்தால் நேரிட்டனவென்பதும் நிஜமே. இவற்றின் முடிவான பயன் உன் திருவடிகளில் எனது ஆத்மாவின் பரந்யாஸமன்றோ? அது நடந்தபின் வேறு ஸுக்ருத பலாநுபவம் ஏது? அதனுடைய பலம் உன் ப்ரஸாதம். ப்ரஸாத பலம் உனது நித்யகைங்கர்யம். அதைத்தான் அவிளம்பேந பெறவேண்டுகின்றேன். நீ உன் ப்ரதிஜ்ஞையை மறவாமல் முடித்தருள்வாய்.

"இந்தீவரஸ்யாமனாய், பீதாம்பரதாரியாய், வநமாலையும் மயிற்றோகையும் பவழமாலையும் அணிந்துகொண்டு, தோழனுடைய தோளின் மீது ஒரு கையை வைத்துக்கொண்டு, மற்றொரு கையினால் ஒரு தாமரை மலரைச் சுழற்றிக்கொண்டு, செவிகளில் நீலோத்பலம் விளங்க, கபோலங்களில் அளகங்களாட, புன்னகைகொண்டு முகபத்மம் ஜ்வலிக்க நீ நின்றுகொண்டிருக்கையில், உன்னைக் கண்ட விப்ரஸ்த்ரீகள், யாவர்க்கும் ப்ரியதமனான உனது திவ்ய சரித்ரங்களை முன்பே செவிகளாரக் கேட்டு, உனது பக்தியில் ஆழ்ந்த மநஸ்கராய் இருந்தபடியால், தமது நேத்ரங்களால் உன் விக்ரஹத்தை உள்ளே ஆகர்ஷித்து, அதைத் தமது ஹ்ருதயத்தில நிலைக்கச்செய்து, சிலகாலம் தம் புத்தியினால் அதை ஆலிங்கநம் செய்து, உன்னை நெடுங்காலம் காணாமையால் வளர்ந்த தம்முடைய தாபத்தைத் தீர்த்துக்கொண்டார்கள்.' யாவர்க்கும் இவ்வநுபவம் ஸுஷுப்தியில் உண்டு என்பார்கள். அது அவர் அறிவதற்கு வழியின்றியே நேரிடுகிறது; ஆகையால் அதை அநுபவமெனத்தகுமோ? இப்படி எல்லாருடைய ஆத்மாக்களிடத்திலும் அவ்வாத்மாக்கள் அறியக்கூடாத தசையில் இருக்கின்ற ஸர்வேஸ்வரனை ஸேவனம்டி, அவனைத் தவிர்த்து மற்ற யாவத் வஸ்துக்களினிட

மும் ஆசையைப் போக்கி, விப்ரஸ்த்ரீகள் வந்தார்களே! அந்த ஏற்றம் எனக்கிலதே! அந்த ரூபதர்சநம் எனக்கிலதே! அவர்களுடைய ஸுக்ருதம் எனக்கிலதே! அந்த ஸுக்ருதம் எனக்கும் இருந்தால், அவர்களுடன் அக்காலமே உனைத் தர்சித்திருக்கமாட்டேனோ? தர்சித்திருந்தால் இந்த ஜந்மம் எனக்கேன் வரும்? அவர்களுக்கும் நீ சொன்னதென்ன? மநஸ்ஸை உன்னிடம் செலுத்தச் சொன்னாய்; அதனால் பஹு ஸீக்ரமாக உனது ப்ராப்தியை அவர்க்கு நீ ப்ரதிஜ்ஞை பண்ணினாய். உன் கதாஸ்ரவணத்தாலும், உன் திவ்யமூர்த்திதர்சநத்தாலும், உன்நாமஸங்கீர்த்தநத்தாலும் உன்னைத் த்யாநிப்பதாலும், உன்னிடம் பக்தி நிலைக்குமென்றும், உனது ஸந்நிகர்ஷமாத்ரத்தால் அது நிலைக்காதென்றும் சொல்லி, அவர்களுடைய பர்த்தாக்கள் செய்யும் தர்மங்கள் அவர்களாலே நிறைவேறவேண்டியிருக்கபடியால், பர்த்தாக்களிடமே அவர்களை அனுப்பிவிட்டாய். என்னை அவ்வண்ணம் எங்கு அனுப்பப்போகின்றாய்? விப்ரபத்நிமார் அபேக்ஷித்ததான உன்னுடைய பாதகமலங்களின் ஸேவையை எனக்கு உடனே தர நீ இரங்கவேண்டுமென்றோ? எனக்குள்ளது ஆகிஞ்சந்யம்; எனக்கு வேறு கதியில்லை; நான் செய்யத்தக்கது உன் திருவடிகளில் சரணாகதி; எனக்காக என் ஆசார்யன் அதைச் செய்யப்போகின்றார். இன்னும் லோகத்தில் நானிருந்தால் கெடுவேன். நானிருந்து செய்யவேண்டியதொன்றுமில்லை. எனக்கு ஸ்வதர்மமென்று ஒன்றில்லை. உன் திருவடிகளுக்கு என்னை உத்தரக்ஷணமே கூவிக்கொள்ளவேண்டுமே!

"கோப ஸ்த்ரீகள் உனைத் துறந்து, உன் பிரிவாற்றாமையால் தளர்ந்து, உன்னை இடைவிடாமல் த்யாநித்துக்கொண்டு லோகவாஸம் செய்தார்கள். அவ்வண்ணம் என்னை இருக்கச் செய்வையோ! அம்மஹாத்மாக்களுடன் என்னை ஒப்பாக நினைப்பையோ! அவர்களுக்குக் கிடைத்த உனது ஸம்ஸ்லேஷம் எனக்கெப்படிக் கிடைக்கும்? கிடைக்குவேண்டுமென்று எண்ணிக்கொண்டே பல ராத்ரிகளில் படுத்தேன். ஸ்வப்நத்திலும் அது எனக்குக் கிடைக்கவில்லை. அதற்கும் ஸுக்ருதம் வேண்டும். அதில்லாமையால் நீயும் எனக்கு அத்தகைய ஸ்வப்நம் தந்தாயில்லை."

"கோப கன்னிகைகள் உன்னைத் தமது பதியாகக் கொள்ளவேண்டுமென்று வ்ரதமிருந்தார்கள். நான் அவ்வாசைகொள்ள

லாமோ? அவரைப்போல் வ்ரதம் அநுஷ்டிக்கலாமோ? அவர்களுக்கும் நீ யாது சொன்னாய்?

'ந மய்யாவேஶித தியாம் காம: காமாய கல்பதே ।
பர்ஜிதா: க்வதிதா தாநா: ப்ராயோ பீஜாய நேஷ்யதே ॥'

வறுத்த பயறும் சமைத்த நெல்லும் விதைக்குதவுமோ? விஷயஸுகத்தை நாஶம் செய்வது பகவத்ப்ரேமை. காமபோகத்தைப் பரம புருஷனிடம் இச்சித்தால் காமம்கெடும்; போகமும்வாராது. அதற்கு த்ருஷ்டாந்தம் கோபஸ்த்ரீகளே. இதெல்லாம் நான் கற்று, உன்னிடம் விஷயஸுகத்தை இச்சித்து, விப்ரலம்ப ஶ்ருங்காரத்தை அநுபவமும் செய்ய வொண்ணுமோ? மநோரதங்களின் ப்ரவாஹங்களுக்கு ஆணைபோட அமையாதென்பர். ஆசைக்குப் பரிமிதி இல்லை யென்பர். ஆகலால் அத்யந்தம் அபலையான என்னை ஆழ்வாரைப்போல் உன்னிடம் ப்ரேமையை வளர்க்கச் சொல்வையோ! ஆழ்வார்க்கு அது தகும்; என் தத்கால நிலைக்குத் தகுமோ? ஆழ்வார்க்கு அது ஸாத்யம்; எனக்கு ஸாத்யமோ? உன் குற்றேவலை நான் வேண்டுகின்றேன். வேறொன்றும் வேண்டுகின்றேனில்லை. அதை நீ எனக்கு இப்போதே தரவேண்டுமென்று ப்ரார்த்திக்கின்றேன்.

"விஷ்ணுசித்தன் கன்னிகை அநுஷ்டித்த மார்க்கத்தை எனக்கு ஓதுவையோ! அவள் உன்னை மணவாளனாக வரித்தாள். உன்னிடம் அவளை ஆகர்ஷித்து அவள் ப்ரார்த்தனையை அங்கீகரித்தாய். வேதவதி உன்னை நாதனாக அபேக்ஷித்துத் தவம் புரிந்தாள். அக்நிரூபதாரியாய் அவளை நீ உட்கொண்டாய். லோகத்தார் அறிந்தபடியே தங்கட்கு விவாஹத்தை அவர்கள் உன்னிடம் வேண்டினார்கள், எனக்கு விவாஹம் ஆய்விட்டதே! அவர்கள் அநுஷ்டாநம் எனக்குதவுமோ?

"சரண்யா! நான் என் செய்வேன்! ஆலயம் சென்று உன் திவ்யமூர்த்தி தர்சநம் செய்யவென்றால், வீட்டின் வெளியே செல்ல என் மநஸ் இசையவில்லையே! புருஷர் கண்களுக்கு லக்ஷ்யமாகத் தக்க ரூபத்தை நீ எனக்குத் தந்தாய் என்பார்கள். நான் ஸ்திரீயாயிருந்தாலும் தாய்வீடே எனக்கு இருப்பிடமாயிற்று. புருஷர்களில் யோக்யரும் உண்டு; துஷ்டரும் உண்டு. அவர்கள் கண்

களில் பட நாணமாயிருக்கிறது. மிகவும் பயப்படுகின்றேன். ஆபரணங்களைக் கழற்றியெறியச் சொல்வையோ? எனக்கு ஆபரணங்களேது? பிதாவும் உபபங்கரன்று; பர்த்தாவும் நகைகள் தந்திலர். நானிருக்கும் ஸ்திதியைக் காட்டிலும் வைதவ்யம் எனக்குக் குணமன்றோ? அவ்வண்ணம் நான் எண்ணக்கூடாது; என்னுடைய பதி இருக்கின்றாரே! ஆனால் என் கஷ்டத்தைச் சொல்கின்றேன். ரூபவிகாரத்தை நானாகச் செய்ய அமையுமோ? என் காயக்லேசத்தால் காலக்ரமத்தில் அது எனக்கு உண்டாகலாம். அதுவரையில் என் செய்வேன்! ஸ்த்ரீகளுடைய ஸாதுத்வ விஷயத்தில் ஜநம் ப்ராயேண துர்ஜநமாகும் என்பார்களே.

“ஆதலால் இவ்வுலகில் உனக்கடிமை செய்ய எனக்கு இடமில்லை; உன்னடியார்க் கடிமையும் எனக்கு உற்றிலது. இந்த்ரிய மனோ ஜயமுள்ள மாதர்கள் எவருடைய நோக்கத்தையும் லக்ஷ்யம் செய்யமாட்டார்கள்; எவருடைய வார்த்தைகளையும் பாராட்ட மாட்டார்கள். அப்படிப்பட்ட மாதர்களும் உளரோ? தேவாதிராஜ! நான் சிறு பெண்; ஜ்ஞானமற்றவள்; தபஸ்ஸற்றவள்; சக்தியில்லாதவள்; பலமில்லாதவள்; பேதை; யுக்தாயுக்த விசார ஸாமர்த்யம் எனக்கில்லை. ‘அந்யதா ஶரணம் நாஸ்தி த்வமேவ ஶரணம் மம’ ஆதலால், ஓ ஜநார்த்தநா! தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே என்னைக் கூவிக்கொள்வாய். அதற்குக் காலம் குறுகிற்று.

“நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க
எண்ணாராத் துயர்விளைக்கு மிவையென்ன வுலகியற்கை
கண்ணாளா! கடல்கடைந்தாய்! உன்கழற்கே வரும்பரிசு
தண்ணாவா தடியேனைப் பணிகண்டாய் சாமாறே.”

*　　*　　*　　*

“ஆமாறொன் றறியேன்நான் அரவணையா யம்மானே!
கூமாறே விரைகண்டாய் அடியேனைக் குறிக்கொண்டே.”

*　　*　　*　　*

“..........................................கடல்வண்ணா! அடியேனைப்
பண்டேபோல்கருதாதுன்னடிக்கேகூவிப்பணிகொள்ளே.”

*　　*　　*　　*　　*　　*

"ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப
கண்டசதிர் கண்டொழிந்தேன் அடைந்தேனுன் திருவடியே."

இவ்வண்ணம் இரவெல்லாம் நினைந்தொழித்தாள். முடிவில் தன்னுடைய தேஹாவஸாநத்தையும், ததநந்தரம் நித்யவிபூதியில அவன் திருவடி ஸேவையையும் விளம்பமின்றித் தரும்படி அவனை ப்ரார்த்தித்தாள். இப்படி மனந்தளர்ந்து, பெருமூச்செறிந்து, கண்ணீர்மல்கி, மாதவனையே நினைத்திருக்க பெண்மணிக்குக் கொஞ்சம் நித்ரையும் இராமுடிவில் நேரிட்டது.

நித்ரையில் பகவத் க்ருபையால் ஸ்தூல சரீரத்தை விட்டு வெளியில் சென்றாள். ஓர் நதிக்கரையில் தான் நிற்பதைக் கண்டாள். அது ஒரு மணல் மேடு. தன்னைச் சுற்றிய பல வ்ருக்ஷங்களைக் கண்டாள். அவையாவும் புஷ்பித்து நின்றன. நாற்புறமும் புஷ்பங்களின் மணம் பரவின. மரங்களில் பக்ஷி ராசிகள் ஆநந்தமாக உட்கார்ந்து சப்தம் செய்தன. அது ஸாயம் ஸந்த்யாகாலம். சந்திரன் உதித்துக் கீழ்த்திசையை அலங்கரித்தான். ஆகாசத்தில் நக்ஷத்ரங்கள் தலை காட்ட ஆரம்பித்தன. காலமும் தேசமும் அவ்வளவு ரமணீயமாய் நிற்கத் தான் ஒன்றியாய் அப்ரதேசத்தில் இருப்பதைப்பற்றி வியந்தாள். ஆனால், அவள் சித்தம் ப்ரஸாதத்தை அடைந்து நின்றது. அவளுக்கு யாதொரு பயமும் தோன்றவில்லை.

இவ்வண்ணம் அவள் நின்றுகொண்டிருக்கையில், மதுரமாகவும் அவள்மனஸ்ஸை ஹரிக்கத்தக்கதாகவும் ஓர் திவ்யகாநம் அவள் காதுகளைப் பூரித்தது. "இதென்ன ஆஸ்சர்யமாக இருக்கின்றதே! இந்தப்ரதேசத்திற்கு நான் எவ்வண்ணம் வந்தேன்? இப்படிப்பட்ட திவ்ய காநம் யார் செய்கின்றார்கள்?" என்று அவள் எண்ணுகையில், ஸமீபத்தில் ஒரு மஹாபுருஷன் வரக் கண்டனள். 'கடலோ! மலையோ! முழுநீலக்கல்லோ! காயாநறும் போதோ! படர்பூங் குவளை நாண்மலரோ! நீலோத்பலமோ! பானலோ!' என்றிப்படியெல்லாம் அந்தப் புருஷனுடைய தூரதர்சநத்தை நிலாவெளிச்சத்தில் அவள் சங்கித்துக்கொண்டிருக்க, சாருப்ரஸந்நவதநனாய், மந்தஹாஸத்துடன் அவளைக் கடாக்ஷிப்பவனாய், நீலமேகம் போன்ற திருமேனியனாய், மஞ்சள்பட்டாடை தரித்தவனாய், பருத்து நீண்ட நான்கு திருத்தோள்களுடையவனாய், ஶங்கசக்ரகதாபாணியாய், பத்மபத்ரங்களைப் போன்ற தீர்க்கமான நேத்ரங்களுடன்

கூடினவனாய், அழகுடன் வளைந்த புருவங்களும் அழகான மூக்கும் காதுகளும் கபோலங்களும் கொண்டவனாய், கோவைப்பழம் போன்ற அதர பல்லவம் சோபிக்கின்றவனாய், அகன்ற திருமார்பில் ப்ரஹ்ம ஸூத்ரமும் கௌஸ்துப மணியும் அலர்மேல்மங்கையும் விளங்கப் பெற்றவனாய், திவ்யாபரணபூஷிதனாய் நவரத்நங்கள் ஜ்வலிக்கின்ற கிரீடகுண்டலங்கள் அணிந்தவனாய், வநமாலை தோள்களின் மீது அசையப்பெற்றவனாய் அவன் தன்னிடம் நெருங்கக் கண்டாள். பலநாள் கற்றும், கேட்டும், நினைத்தும், த்யானித்தும், அவள் உள்ளடக்கிய உருவம் எதிரில் வந்து நிற்கக் கண்டாள். தரையில் வீழ்ந்தாள். திருவடிகளைப் பற்றினாள். தனது கண்ணீரால் அவற்றை நீராட்டினாள். 'கமலநாத! இந்த அநாதையை ரக்ஷிப்பாய்' என்று இவ்வளவு தான் அவள் சொல்லத் துணிந்தாள்.

உடனே ப்ருந்தாவந சரனும் விஸ்தரித்த க்ருபை கொண்டவனாய், தன் திருக்கைகளால் அவளைத் தூக்கி எழுப்பி, அவள் சிரஸ்ஸின்மேல் தன் அபய ஹஸ்தத்தை வைத்தான். "வத்ஸே! உன் ஸங்கல்பம் எனக்குத் தெரியும். என்னை நீ வழிபட்டது வீணாகமாட்டாது. உனது பக்தியை நான் உகந்தேன். உனது இஷ்டம் கைகூடும்" என்று சொன்னான்.

அப்போது ஜநகத்தின் பேரானந்தத்தை வர்ணிக்கப் பொருந்துமோ? அது அவள் கண்களினின்று ஆறாய்ப் பெருகிற்று. உடனே விழித்துக்கொண்டாள். அவள் ஸ்பஷ்டமாகக் கண்டதெல்லாம் காணாமல் போயின. கேட்ட சொற்களோ இன்னும் அவள் கர்ணங்களை விடவில்லை. தன்னுடைய அநுபவம் ஸ்வப்நாநுபவமென்று தெரிந்துகொண்டாள். "ஆனால் என்ன? என் அநுபவம் பொய்யாகுமோ? புருஷோத்தமன் வேறு எவ்வண்ணம் தனது க்ருபையை ஆவிஷ்கரிப்பன்! நான் அவனைத் தர்சித்தது நிஜமே. முகுந்தா! உன் கருணையைப் பெற்றேன். என் துக்கத்தை விட்டேன். நான் வேண்டும்போது இந்தத் தர்சநம் தந்தருள்வாய். என் அந்திம ப்ரயாணத்தில் என் கண்முன் நிலைத்து நிற்பாய்" என்று ப்ரார்த்தித்தாள்.

மறுநாள் கேசவாசார்யர் ஸபத்நீகராய் ஜநகநந்தினியை அழைத்துக்கொண்டு தேவாதிராஜன் ஸந்நிதிக்குச் சென்றார்.

அது ஸந்நிதி வீதி வாஸிகளுக்கு அபூர்வகாட்சி. இதென்ன வென்று யாவரும் யோசித்தார்கள். ஜநகத்தின் கதை தெரியாத வர் யாருமில்லை. முன் அவள் ஸௌந்தர்யத்தை விஸ்மயத்துடன் கண்டு ஆநந்தித்த ஜநங்கள் அன்று அவள் தோற்றத்தைக் கண்டு கஷ்டம் கொண்டார்கள்.

'வரிவர்ணாஞ்சிதபரிஷ்க வொருஸாம்ஸநாம்
உயதீ விநொருகபரீகஷாநநம் ।
கருணஸ்ய மூர்திரயவா ஶரீரிணீ
விரஹவ்யயெவ வநமெதி ஜாநகீ ॥'

என்கிற ஸ்லோகம், ஜநகநந்தினி நிமித்தமாகவே பிறந்ததுபோல் தோன்றியது. அவளுடைய கபோலங்கள் வெளுத்து இளைத்தன. ஆகிலும் அவற்றில் நின்ற ஸௌந்தர்யம் அவற்றை விடவில்லை. ஸம்ஸ்காரமில்லாமையாலும், அன்று அவள் செய்த ஸ்நாநத்தாலும், கட்டுக்குள் அடங்காமல் அவளுடைய கூந்தல் மயிர்கள் விளையாடிக்கொண்டு அவள் வதநத்தை மறைத்தன. அவள் சோகமே ரூபமெடுத்தால்போல் தோன்றினாள். பர்த்தாவின் வியோகம் உடல்கொண்டதோ வென விளங்கினாள். இன்னும் இரவெல்லாம் தூக்கமின்றிக் கண்ணீர் விட்டமையாலும், பெருமூச்சுகளின் ஔஷ்ண்யத்தாலும், கண்கள் செவந்தும், பருத்தும், அதரோஷ்டங்கள் வாட்டமடைந்தும், 'நநம தஸ்யா: ரூவரு ரூஷிதொருநெதும் விரோயா।நிஶ்வாஸாநா மஶிஶிரதயா ஹிநவணாயரொஷ்ம' எனும் வர்ணனையும் ஜநகநந்தினியின் தோற்றத்துக்குப் பொருந்தியது. அவளைப் பார்த்துத் துக்கிக்காதவர் யாருமில்லை.

ஸ்ரீநிவாஸன் வீட்டு வாசலில் உட்கார்ந்திருக்கையில் ஸந்நிதிக்குப் போனவர்களைப் பார்த்தான். "இதென்ன புதுமையாயிருக்கின்றதே!" என்று கொண்டு எழுந்து நின்றான். அவர்கள் சிறிது தூரம் சென்றபிறகு பின் தொடர்ந்தான்.

கோவிலுக்குள் சென்று த்வஜஸ்தம்பத்தின் அருகில் ஸேவித்துவிட்டு ப்ரதக்ஷிணமாகச் சென்றார்கள். ஆழ்வார், பாஷ்யகாரர், நிகமாந்தார்யன், இவர்கள் ஸந்நிதிகளின் முன்னின்று ஸே

வித்தார்கள். பிறகு தாயார் ஸந்நிதிக்குச் சென்றார்கள். அவ்விடம் பத்மநாபாசார்யரும், மாதவாசார்யரும் உபஹாரங்களுடன் காத்துக்கொண்டிருந்தார்கள். தாயாரைத் தர்சித்துவிட்டு, ஸ்ரீ அழகிய சிங்கர் ஸந்நிதி முன்பாக நின்று பெருமாளை ஸேவித்துக்கொண்டு மலை ஏறினார்கள். பெருமாள் ஸந்நிதி முன்பாகப் பல தரம் ப்ரணாமம் செய்தார்கள். பிறகு கேசவாசார்யர் உட்கார்ந்து ஸங்கல்பம் செய்துகொண்டு, "குழந்தாய்! பெருமாளை ஸேவித்துக்கொண்டிரு. உபாயாநுஷ்டாந ஸமயோசிதமானபடி உன் புத்தியை ஸ்திரப்படுத்திக்கொள்" என்று சொல்லிவிட்டுப் பெருமாள் ஸந்நிதிக்குள் சென்றனர். ஸந்நிதி கிங்கரர்கள் வெளியே நின்றார்கள்.

பத்மநாபாசார்யர் மாதவாசார்யருடன் முன் மண்டபத்தில் ஓர் பக்கமாக உட்கார்ந்தனர். ஸ்ரீநிவாஸனும் அவ்விடம் போய் அவர்களுடன் உட்கார்ந்தான். "ஸ்வாமிந்! இன்றைக்கென்ன விசேஷம்? மாமா, அவர் பத்நீ, ஜநகம், எல்லோரும் சேர்ந்து ஸந்நிதிக்கு வருவது அபூர்வமாச்சுதே! தேவரீர்களும் இவ்வுபஹாரங்களுடன் எழுந்தருளிய விசேஷமென்ன?" என்று பத்மநாபாசார்யரை வினவினன்.

"ஸ்ரீநிவாஸா! உனக்கொன்றும் தெரியாதுபோல் இருக்கிறது. ஜநகத்துக்குப் பரந்யாஸம் நடக்கின்றது" என்று பத்மநாபாசார்யர் சொன்னார்.

"பரந்யாஸத்துக்கு த்வரை என்ன? அவளுக்கு வயஸ்ஸு இன்னும் பதினேழு ஆகவில்லையே!" என்றனன் ஸ்ரீநிவாஸன்.

"ப்ராயேண நம்மவர்கள் சிறு வயஸ்ஸில் பரந்யாஸம் செய்துகொள்வதில்லை. அதிகாராபாவம் அதற்குக் காரணம். ஜநகம் அதற்கு அதிகாரியாயிருக்கின்றாள் என்பது உனக்குத் தெரிந்த விஷயமே. உபாயாநுஷ்டாந விஷயமாக அவளுக்கு த்வரை உண்டாவதற்குக் காரணமும் நீ யோசிக்கத்தக்கதே" என்றார் பத்மநாபாசார்யர்.

ஸ்ரீநிவாஸன் வேறொன்றும் சொன்னானில்லை. இதெல்லாம் உசிதமாயில்லையென்று அவன் மநஸ் துடித்தது. எழுந்தான், அவ்விடம் விட்டு நடந்தான்.

ஜநகமோ சரீரத்தில் சக்தியுள்ளவரையில் பெருமாளை ஸேவித்தாள். பிறகு சிறிது காலம் கரங்களை அஞ்ஜலி பத்தங்களாய் வைத்துக்கொண்டு நின்றாள். மறுபடி தண்டன் ஸமர்ப்பித்தாள்; மறுபடி முன்போலவே நின்றாள். கேசவாசார்யர் ஸந்நிதிக்குள் இருந்தவரையில் அவ்வண்ணம் செய்துகொண்டிருந்தாள். நிற்கும் காலமெல்லாம் பிதாவின் ஆஜ்ஞையைச் சிரஸா வஹித்து த்வயத்தையும், த்வயவிவரணமான ஆளவந்தார் ஸ்லோகங்களையும் பாஷ்யகாரர் அருளிச்செய்த ஸ்லோகத்தையும் ந்யாஸதசகத்தையும் க்ரமேண அநுஸந்தித்தாள். பிறகு, ஆழ்வார் பாசுரங்களை அநுஸந்திக்க ஆரம்பித்தாள்.

"மாயம் செய்யேலென்னை உன் திருமார்வத்து மாலைநங்கை
வாசம்செய் பூங்குழலாள் திருவாணை நின்னாணைகண்டாய்
நேசம் செய்துன்னோடென்னை யுயிர் வேறின்றியொன்றாகவே
கூசம்செய்யாதுகொண்டாயென்னைக்கூவிக்கொள்ளாவந்தந்தோ"

"கூவிக்கொள்ளாய் வந்தந்தோ! என் பொல்லாக்கருமாணிக்கமே!
ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலால் அறிகின்றிலேன்நான்
மேவித்தொழும்பிரமன் சிவனிந்திரனாதிக் கெல்லாம்
நாபிக்கமல முதற் கிழங்கே! உம்பரந்ததுவே."

முடிவாக நிகமாந்தார்யன் செய்யுளை நினைவுற்றாள்.

"நின்னருளாங் கதியன்றி மற்றொன்றில்லேன்
நெடுங்காலம் பிழைசெய்த நிலைகழிந்தேன்
உன்னருளுக் கினிதான நிலையுகந்தேன்
உன்சரணே சரணென்னும் துணிவுபூண்டேன்
மன்னிருளாய் நின்றநிலை யெமக்குத்தீர்த்து
வானவர்தம் வாழ்ச்சிதரவரித்தேனுன்னை
இன்னருளால் இனியெமக்கோர் பரமேற்றாமல்
என்திருமால் அடைக்கலங்கொள் என்னைநீயே."

இதற்குள் பகவானை ப்ரார்த்தித்து விட்டுக் கேசவாசார்யர் வெளியில்வந்தார். ஸந்நிதி கிங்கரர்கள் உள்ளே சென்றார்கள். பிறகு கேசவாசார்யரும் ஹரிப்ரியையும் ஜநகநந்தினியும் ஸந்நிதிக்குள் ப்ரவேசித்தார்கள். பத்மநாபாசார்யரும் மாதவாசார்யரும் உபஹாரங்களுடன் பின் தொடர்ந்தார்கள். உபஹாரங்க

ளைப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்துவிட்டுப் பெருமாளை யாவரும் நன்றாகத் தர்சித்தார்கள். "ஜநகம்! ப்ரணதார்த்திஹரன் என்னுடைய ப்ரார்த்தனையைத் திருவுள்ளம் பற்றினான். இனி உன்னுடைய ஆத்ம ரக்ஷாபரம் அவனைச் சேர்ந்தது. ரக்ஷா பலமும் அவனுடையதே. அவற்றைப்பற்றி இனியுனக்கு யாதொரு கவலையும் வேண்டியதில்லை. நீ இனிமேல் நிர்ப்பரையாக இருக்கலாம். இங்குள்ளவரையில் உசிதமான பகவத் கைங்கர்யங்கள் உனது சரணாகதியின் பலமென்றறி. உன்னுடைய சரீராவஸாநத்திலே, நித்ய விபூதியில், பகவான் உகந்தருளிய நித்ய கைங்கர்யங்கள் க்ரமமாக உனக்கு ப்ராப்தமாகும்" என்று கேசவாசார்யர் தம் புத்ரியை நோக்கிச் சொன்னார். இந்த ப்ரகாரம் ஜநகநந்தினிக்கு உபாயாநுஷ்டாநம் நிறைவேறிற்று.

திரும்பி யாவரும் கேசவாசார்யர் க்ருஹம் வந்து சேர்ந்தார்கள். ரேழித் திண்ணையில் கேசவாசார்யரும் பத்மநாபாசார்யரும் மாதவாசார்யரும் உட்கார்ந்தார்கள். ஹரிப்ரியை உள்ளே சென்றாள். ஜநகநந்தினி பிதாவைப் பலதரம் ப்ரணமம் செய்தாள். கேசவாசார்யரும், "குழந்தாய்! உன்னிடம் மஹாதயாதீசன் க்ருபை செய்யட்டும். அவன் திருவடிகளில் உனது பக்தி விஸ்தரிக்கட்டும். உன்னை ஸத்வ்ருத்தத்திலே அவன் ஸ்திரப்படுத்தி ரக்ஷிக்கட்டும்" என்று சொல்லி ஜநகத்தை ஆசீர்வதித்தார்.

அன்றிராத்ரி கேசவாசார்யர் பகவத் ஸந்நிதிக்குப் போயிருக்கையில், ஸ்ரீநிவாஸன் கேசவாசார்யர் க்ருஹத்துக்கு வந்தான். ரேழியில் ஹரிப்ரியையும் ஜநகநந்தினியும் உட்கார்ந்திருக்கக் கண்டான். "அம்மா! ஜநகம் பரந்யாஸம் செய்துகொண்டாளா? என்று ஹரிப்ரியையைப் பார்த்துக் கேட்டான்.

"ஆமாம் பண்ணிக்கொண்டாள். நீயும் அப்போது கோவிலுக்கு வந்திருந்தாயே!" என்று சொன்னாள் ஹரிப்ரியை.

"அம்மா! பரந்யாஸவிஷயமாக ஜநகத்துக்கு இவ்வளவு அவஸரம் என்ன?" என்று ஸ்ரீநிவாஸன் கேட்டான்.

"அது பெண்ணுக்கும் பிதாவுக்கும் தெரியும். என்னைக் கேட்டால் நான் என்ன சொல்வேன்?" என்று ஹரிப்ரியை சொன்னாள்.

"மாமாவை நான் எப்படிக் கேட்பேன்? ஜநகம்! உன்னைத் தான் கேட்கின்றேன். உனக்கு பரிஹாஸத்தில் இவ்வளவு த்வரை என்ன?" என்றான் ஸ்ரீநிவாஸன். ஜநகம் மௌநமாயிருந்தாள்.

"ஜநகநந்தினி! ஏன் எனக்கு ப்ரத்யுத்தரம் தருகின்றாய் இல்லை? என்னுடன் ஸம்பாஷிக்க உனக்கு ப்ரியமில்லையோ?" என்று ஸ்ரீநிவாஸன் மறுபடியும் சொன்னான்.

'உன்னுடன் பேசக்கூடாத நியமத்தை நான் வைத்துக் கொள்ளவில்லை. நீ கேட்பதற்கு ஸரியான ப்ரத்யுத்தரம் தோன்றவில்லை. நான் இஷ்டப்பட்டேன். அப்பாவை ப்ரார்த்தித்தேன். அவர் அநுக்ரஹித்தார். இதெல்லாம் நீயே அறிந்துகொண்டிருக்கலாம். இன்னும் யாது சொல்ல வேண்டுகின்றாய்?" என்றனள் ஜநகநந்தினி.

"உனக்குப் பரிஹாஸத்தில் த்வரை ஏன் என்று நான் கேட்டேன்", என்றான் ஸ்ரீநிவாஸன்.

"த்வரை உண்டாயிற்று. என் தத்கால ஸ்திதியில் நான் உபாயாநுஷ்டாநத்தை வேண்டினேன்" என்றாள் ஜநகநந்தினி.

"ஜநகம்! இப்படிப்பட்ட காலம் வரப்போகின்றதென்று நான் எண்ணினேனில்லை. இன்னும் என்ன வரப்போகின்றதோ வரட்டும். வந்ததையெல்லாம் அநுபவித்துதான் தீர வேண்டும்" என்று சொல்லிவிட்டு ஸ்ரீநிவாஸன் வெளியே சென்றான்.

## பத்தொன்பதாவது அதிகாரம்.

ஜநகநந்தினி க்ருதக்ருத்யாதிகாரத்தை அடைந்தாள். அடைந்தது முதல், பின்மாலைப் பொழுதில் மாதாபிதாக்களுடன் துயிலெழுவள். உசிதமான ஸ்லோகங்களைச் சொல்லிப் பகவத் க்ருபையை ப்ரார்த்திப்பள். பிதா ஸ்நாநார்த்தம் உதயமான குளத்துக்குச் சென்று திரும்புவதற்குள், ஜநகநந்தினியும் ஹரிப்ரியையுடன் அநந்த ஸரஸ்ஸுக்குச் சென்று நீராடி வீட்டுக்குத் திரும்புவள். புஷ்கரிணியில் நீராடினவுடனே விமாநத்தைத் தர்சித்துத் தன் விஷயமாகத் தயாதீக்ஷை செய்த ரக்ஷகனை த்யானிப்பள். புஷ்கரிணிக்குச் செல்லும்போதும், அங்குநின்று திரும்பி வருகையிலும், சித்தத்தை வரதனிடம் செலுத்தி, நேத்ரங்களை அவன் உத்ஸவகாலங்களில் அலங்கரிக்கின்ற வீதியினிடமே உய்

த்து, உலகத்தில் வேறொரு பதார்த்தம் தர்சிக்க உள்ளதென்று அங்கீகரிக்காதவள் போல நடப்பள். அகத்துக்குள் ப்ரவேசித்து வஸ்த்ரதாரணம் செய்துகொண்டு, முகத்தைப் புண்ட்ரங்களால் அலங்கரித்துக்கொண்டு, ஆசார்யனை பிதாவைத் தண்டன் ஸமர்ப்பிப்பள். பிறகு, பகவத்ஸந்நிதியை யதாக்ரமம் சுத்திசெய்வள். ரங்கவல்லிகளால் அலங்கரிப்பள். ஆராதநத்துக்கு வேண்டிய பாத்ரங்களைச் சுத்தம்செய்து, ஸந்நிதியில் கொண்டு சேர்ப்பள். புஷ்பச் செடிகளினின்று புஷ்பங்களைப் பறித்து ஸந்நிதியில் கொண்டு சேர்ப்பள். பகவதாராதநத்துக்காகச் சந்தநம் அரைத்து வைப்பள். இவ்வண்ணம் கைங்கர்ய புத்தியால் பண்ணக்கூடிய பரிசர்யையெல்லாம் செய்துவிட்டுப் புஸ்தகம் பார்ப்பள். காலையில் ரஹஸ்யத்ரயஸாரமும் கீதாபாஷ்யமும் வாசிப்பள். மத்யாஹ்நத்திற்குமேல் ஸ்ரீமத்ராமாயணம், ஸ்ரீவிஷ்ணுபுராணம், ஸ்ரீபாகவதம், பகவத் விஷயம் இவற்றில் இஷ்டமான பாகங்களைப் படிப்பள். இப்படி ஜநகநந்திநிக்குக் காலக்ஷேபம் அமைந்தது.

யாவருக்கும் தர்சநயோக்யமாயும், தர்சந மாத்ரத்தால் மநஸ்ஸை ஹரிப்பதாயும் இருந்த அவளுடைய முகமானது முன் மந்மதனுடைய த்வஜம் போலிருந்து; இப்போது அவ்வாகாரம் அதைவிட்டு விலகியது. அதற்குப் பதிலாக வைராக்யம் என்பது அவள் முகத்தில் ஜ்வலிக்க ஆரம்பித்தது. நாதிஸ்தூலமாயும், நாதிக்ருஶமாயுமிருந்த அவள் சரீரத்தில் காய க்லேச ப்ரயுக்தமான இளைப்பு வ்யாபித்தது. ஸ்வர்ணமயமாக ப்ரகாசித்த அவள் தேஹ வளப்பம் மாறி ரக்த சோஷணத்தை ஜ்ஞாபிக்கின்ற ஒருமாதிரியான வெளுப்பு அவள் உடலை மூடியது. காதாசித்கமாய் அவள் வதநத்தை அலங்கரித்த புன்னகையானது அதை முற்றிலும் துறந்தது. ஸம்ஸ்காரம் அற்றுப்போன அவளுடைய கேசபாசமானது, காந்தி யற்றும் காற்றிலடிக்கப்பட்டும் தளர்ந்து போயிற்று. மலர் வர்க்கங்கள் குதூஹலத்துடன் தேடிய அவள் குழல் அம்மணத்தை முற்றிலும் துறந்தது. அந்தப் பெண்மணியைப் பார்த்து யாவரும் துக்கத்தில் மூழ்கிப்போனார்கள். ‘ தஸ்வி ஹநீயம் வபுஸ்திஷ்ம ’ என்கிறபடியே, அவள் சரீரத்தை விட்டு ஒழியாத பேரழகு மாத்ரம், இன்னும் பார்ப்பவர் கண்களை அபஹரித்தது.

ஒவ்வொரு ராத்ரியும் கேசவாசார்யர் ஸந்த்யாவந்தநம் செய்த பிறகு அகத்துக்கு வந்து, ஜநகநந்திநியை அழைத்துக்கொண்டு கோவிலுக்குப் போவது வழக்கமாய்விட்டது. கோவிலுக்குப் போகும்போதும் அவ்விடத்தினின்று திரும்பும்போதும், பகவத் ஸம்பந்தமான ப்ரஸ்தாவங்களை ஜநகத்துக்குச் சொல்லிக்கொண்டே கேசவாசார்யர் நடப்பர். உத்ஸவ திநங்கள் தவிர மற்ற திநங்களில் தாயாரையும் பெருமாளையும் பிதாவுடன் ஜநகம் ஸேவிப்பள். இந்தப்ரகாரமாகப் பிதாவால் ரக்ஷிக்கப்பட்டவளாய், ஜநகம் பகவத் கைங்கர்யங்களில் ஜாகரூகையாயும், ப்ரதிதிநமும் பகவானைத் தர்சித்துக்கொண்டும், காலமெல்லாம் பகவானை ஸ்மரித்துக்கொண்டும், உத்தராக்ருத்யாதிகாரத்தை நிறைவேற்றினாள். அவள் ஹ்ருதயத்தினின்று மூதம் வெளிப்பட்டது. அவ்விடத்தில் சோகம் குடிகொண்டது.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த ஹரிப்ரியை, "இதற்கா ஶரண்யன் எனக்கொரு பெண்மணியைத் தந்தான்? புருஷனுயிருந்தால் அவளை ஸங்யாவஸி என்னலாம். ஸங்யாவஸியைப் பெறுவதற்கா நான் பிறந்தேன்! எனக்கிந்த லோகம் அஸ்தமித்துப் போச்சுதே! என் கட்டழகி முடிவில அழகையெல்லாம் துறந்தாளே! ஸந்தோஷித்து விளையாடும் வயஸ்ஸில் பரமைகாந்தி யாய்விட்டாளே!" என்று அடிக்கடி நினைத்துத் தனியே அழுவள்.

இவ்வண்ணம் தன் மாதா கண்ணீர் விடுவதை ஒருதரம் ஜநகம் பார்த்தாள். உடனே, "அம்மா! ஏன் இப்படித் துக்கிக்கின்றாய்?" என்று கேட்டாள்.

"பெண்ணே எனக்குத் துக்க மில்லாமல் வேறே என்ன இருக்கின்றது? உனக்கு அது தெரியாதா? உன்னைப் பார்த்துக்கொண்டு ஸந்தோஷிக்கச் சொல்கின்றையா?" என்று ஹரிப்ரியை சொன்னாள்.

"அம்மா! இதை அப்பா தெரிந்துகொண்டால் மிகவும் கஷ்டப்படுவர். உங்கள் இருவர்க்கும் சோக காரணம் பெரிது. அவர் சோகத்தைக் காட்டாமல் உள்ளடக்கி வைக்கின்றார். நீயும் அப்படியே செய்யவேண்டு மன்றோ?" என்று ஜநகம் சொன்னாள்.

"அப்பா ஜ்ஞாதா, அவர் துக்கத்தைப் பாராட்டமாட்டார். நான் ஸ்த்ரீஜாதியாச்சுதே. வேறெவ்விதமாக என் காலத்தைக் கழிப்பேன். க்ருஹ வ்யாபார காலம் போக மற்றெல்லாக்காலமும் என் சிந்தைக்கு நீயொருவஸ்துதான் விஷய மாகின்றாய். உன்னை நினைக்கும் போதெல்லாம் என் மனம் துடிக்கின்றதே!" என்றாள் ஹரிப்ரியை.

"அம்மா! நீயும் அப்பாவைப் பார்த்து அவரைப்போல் நடக்க வேண்டும்." என்றாள் ஜநகநந்தினி.

"குழந்தாய்! நான் அப்பாவைப் போல் இருக்கப் பொருந்துமோ? லோக நீதி தெரியாமல் வார்த்தை சொல்லுகின்றையே. உன்னுடைய அத்தை தனது பிள்ளைக்காக உன்னைக் கேட்டபோது, அப்பா ஸம்மதித்திருந்தாரானால், நமக்கு இந்த ஆபத்து வந்திருக்க மாட்டாதே. உனக்காக உன் அத்தான் ப்ராணனைக் கொடுப்பனே—" என்று ஹரிப்ரியை சொன்னவுடன், ஜநகம்,

"அம்மா! அம்மா! அப்படிச் சொல்லாதே. நான் பர்த்ருமதி. என்னை மற்றொருவர் கல்யாணம் பண்ணிக்கொண்டிருக்கலாம் என்று நினைக்கவும் கூடுமோ? என்னுடைய பர்த்தா மஹா தேஜஸ்வீ; யசஸ்வீ. அவர் பாண்டித்யம்பெரிது. ஜ்ஞானத்தாலும் வைராக்யத்தாலும் அவர் ஸ்ரேஷ்டர். எனது துரதிருஷ்டத்தால் நான் அவருடன் கூடி வாழ அமையாமல் போச்சுது—" என்று சொன்னாள்.

"ஆமாம் பெண்ணே! உன் பர்த்தா மஹாநுபாவர்தான். இப்படி எண்ணிக்கொண்டிருப்பதால் உன் பெற்றோர்க்கு என்ன ஆறுதல் உண்டு? உனக்குத் தான் அதனால் யாது பரயோஜநம்? உன் சரீரத்தின் ஸ்திதி உன் துக்கத்தை விஸ்தாரமாகக் காட்டுகின்றதே. உன்னை நான் பெற்று வளர்த்தும், உன்னைப் பார்த்துப் பார்த்து ஸந்தோஷப்பட்டும் இருந்ததற்கெல்லாம் இதுவா முடிவு? ஜநகம்! என் துக்கம் என்னை விடாது. நீ பண்ணும் ப்ரயத்நம் வீண்தான்" என்று ஹரிப்ரியை சொன்னாள்.

"அம்மா! நீ சொல்வது நிஜமே. நம்முடைய துக்கம் தீராததே. அதற்குப் பரிஹாரம் இல்லை. ஆதலால், அதை உள்ளடக்கி வைக்கவேண்டும். நீ அழுதால் நானும் அழுவேன். அந்த ஸ்திதி

யில் நம்மை அப்பா பார்த்தால் மிகவும் கஷ்டப்படுவர்", என்று ஜநகம் சொல்லிவிட்டு அப்புறம் நடந்தாள். ஜநகத்துக்கு மேல் விவரித்த ஸம்பாஷணை வருத்தம் தந்தது. தன்னுடைய நிலை தனக்கு மாத்ரம் சோக காரணமென்று எண்ணிக்கொண்டிருந்தவளுக்கு அபூர்வ யோசனைகள் உண்டாயின.

துலா மாஸமும் மழைக் காலமும் சேர்ந்து வந்தன. மழையை லக்ஷ்யம் செய்யாமலே ஜநகநந்தினி காலை வேளைகளில் குளத்துக்கு நீராடப் போனாள். புருஷர்களைப் போல் ஸ்த்ரீகள் குடைகள் பிடித்துக் கொள்வதில்லை. தாயார் மழையில் நனைந்து கொண்டு போனபடியால் பெண்ணும் அவ்வண்ணம் செய்ய ஆரம்பித்தாள். கேசவாசார்யர் வழக்கமாக வெளியில் செல்லும் காலமானபடியால் ஜநகம் மழையில் நனைவது அவர் பார்வைக்கு வாராமல் போயிற்று. ஒருநாள் ஹரிப்ரியையுடன் ஜநகம் மழையில் நனைந்துகொண்டு குளத்தினின்று திரும்பி வருவதைக் கேசவாசார்யர் பார்த்துவிட்டார்.

"குழந்தை மழையில் நனையக் குளத்துக்கு ஏன் அழைத்துக் கொண்டுபோனாய்?" என்று அவர் ஹரிப்ரியையைக் கேட்டார்.

"நானா அழைத்துக்கொண்டு போகிறேன்? அவள் நான் எவ்வளவு தடுத்தாலும் கேட்காமல் குளத்துக்கு வருகின்றாள். இன்று நாங்கள் புறப்படுகையில் மழையில்லை. திரும்புங்கால் மழையில் அகப்பட்டுக்கொண்டோம்" என்று ஹரிப்ரியை சொன்னாள்.

"ஜநகம்! நீ ஏன் புஷ்கரிணிக்குப் போகிற வழக்கம் வைத்துக்கொண்டாய்? புதிய வாடிக்கைகள் உன் தேஹத்துக்கு ஸரிப்படமாட்டா. இப்படியும் மழையில் நனைவையோ?" என்றார் கேசவாசார்யர். உடனே ஹரிப்ரியை உள்ளே நடந்தாள்.

"அப்பா! அடியேன் சரீர போஷணத்தைப் புத்தி பூர்வமாகச் செய்யவேண்ணுமோ! அடியேனுடைய தத்கால நிலைமைக்குப் புஷ்கரிணியில் ப்ராதஸ்நாநம் யுக்தமன்றோ? மழைக்குப் பயந்து அதை த்யஜிக்கலாமோ?" என்றாள் ஜநகநந்தினி.

"குழந்தாய்! சரீர போஷணம் வேண்டாம்; காயக்லேசம் நீ இவ்வண்ணம் செய்யலாமோ?" என்றார் கேசவாசார்யர்.

"அப்பா! காயக்லேசமின்றித் தேவரீர் பலதரம் அடியேனுக்கு உபதேசித்த இந்த்ரிய நிக்ரஹம் ஸித்திக்குமோ?" என்றாள் ஜநகநந்தினி.

'𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑍍 𑌭𑌵𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌦𑌾 । 𑌤𑌸𑍍𑌯𑍇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍍𑌯𑌵𑌶𑍍𑌯𑌾𑌨𑌿 𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌶𑍍𑌵𑌾 𑌇𑌵 𑌸𑌾𑌰𑌥𑍇𑌃 ॥ 𑌯𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑍍 𑌭𑌵𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌦𑌾 । 𑌤𑌸𑍍𑌯𑍇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌵𑌶𑍍𑌯𑌾𑌨𑌿 𑌸𑌦𑌶𑍍𑌵𑌾 𑌇𑌵 𑌸𑌾𑌰𑌥𑍇𑌃 ॥' என்று உபநிஷத் சொல்லிற்று. இந்த்ரியங்கள் குதிரைகள், மநஸ் கடிவாளம். புத்தி ஸாரதி. புத்தியைக் கொண்டு மநஸ்ஸை இழுத்துப் பிடித்து இந்த்ரியங்களை வஶ்யங்களாகப் பண்ணவேண்டும். அதை விட்டுப் புத்தி பூர்வகமாய் காயக்லேசம் செய்தால், இந்த்ரியங்கள் கெடும். சரீரம் வ்யாதி பீடிதமாகும்." என்றார் கேசவாசார்யர்.

"அப்பா! சரீரம் வ்யாதி பீடிதமானால் என்ன? எதை உத்தேசித்து அதை நான் ஸம்ரக்ஷிக்க வேண்டும்?" என்றாள் ஜநகம்.

"குழந்தாய்! உன் ப்ரஶ்நைகள் எனக்கு ஸந்தோஷம் அளிக்கவில்லை. உன் மாதாவை உத்தேசித்து நீ காயக்லேசம் செய்யாமலிருக்கக் கூடாதோ? உன்னுடைய கஷ்டம் முன்னமே அவளைப் பாதிக்கின்றதே! உன் சரீரம் கெட அவள் இன்னும் துயரப் படாளோ? என் மநஸ்ஸுதான் உன் விஷயத்தில் கல்லாயிருக்குமோ? என்னைப் பற்றியும் நீயுன்னை ரக்ஷித்துக் கொள்ளமாட்டாயோ? இன்னும் வ்யாதிகளால் சரீரம் பீடிக்கப்பட்டால் நீயே பாதைப்பட மாட்டாயோ? எப்படிப்பட்டவர்களும் சரீர பாதையை ஸுகமாக நினைக்கமாட்டார்கள். பகவத் ஸங்கல்பத்தை எவராலும் தடுக்கப் பொருந்தாது. உன் விஷயமாக நீயே ஒரு ஸங்கல்பம் பண்ணாதே. பதி வியோகம் ப்ரபல துக்கம். அதை நான் ஒப்புக்கொள்கிறேன். பதி வியோகம் வந்த பிறகும், மாதா பிதாககள் தநயா விஶ்லேஷத்தை ஸஹிக்கமாட்டார்களென்பதை நீ சிந்திப்பாய்" என்று சொன்னார் கேசவாசார்யர். ஜநகம் உள்ளே சென்றாள்.

அன்று முதல் ஜநகநந்தினி மழையில் நனைந்துகொண்டு நடந்தாளில்லை. மழையில்லா நாட்களில் காலை நீராட்டம்மட்டும்

முன்போலவே நடந்துகொண்டு வந்தது. கார்த்திகை மாஸம்
கழிந்தது. மார்கழித் திங்கள் பிறந்தது. 'மாஸாநாம் மார்க-ஶீ
ர்ஷோ-ஹம்' என்று கண்ணன் திருவுள்ளம் பற்றின மாஸமென்று
ஜநகஜா அதை நினைத்தாள். முன் ஸ்வப்நத்தில் தன்னை அநுக்ரஹி
த்த ப்ருந்தாவந ஸஞ்சாரியை நினைக்க ஆரம்பித்தாள். தான்வேண்
டும்போதெல்லாம் தர்சநம் தந்தருளவேண்டுமென்று தான்
பண்ணின ப்ரார்த்தனையை ஸ்மரித்தாள். தனதிஷ்டம் கைகூடு
மென்று வரம் தந்தவனை தநுர் மாஸம் முற்றிலும் த்யாநித்துக்
கொண்டே யிருக்கவேண்டுமென்று நிஶ்சயம் செய்தாள்.

இருட்டிலும், நிலவிலும், பனியிலும், குளிரிலும், நாள்தோ
றும் விடியற்காலத்தில் ஜநகத்துக்குப் புஷ்கரிணியில் மார்கழி நீ
ராட்டம் நடந்தது. அப்போது அர்த்தாநுஸந்தாநத்துடன் அவள்
திருப்பாவை முப்பதையும் தனக்குள்ளே ஒவ்வொரு நாளும் சொ
ல்லிக்கொள்வள். ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்,
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம்போல் முகத்தான் ஒருநாள் அவ
ட்கு த்யாந விஷயமாவன். பாற்கடலுள் பையத் துயின்ற பர
மன் ஒருநாள் அவளால் சிந்திக்கப்படுவன். ஓங்கி யுலகளந்த உத்த
மனை மற்றொரு நாள் அவள் எண்ணித் துதிப்பள். ஊழி முதல்
வன் சங்கும் சக்கரமும் சார்ங்கமும் கைகளி லேந்தி நீலமேகம்
போன்ற மேனியுடன் மற்றொரு நாள் ஜநகநந்தினியால் நினைக்கப்
பட்டான். தூயபெருநீர் யமுனைத்துறைவனை ஒருநாள் அவள்
வாயினாற் பாடி மநத்தினால் சிந்தித்தாள். புள்ளரையனை ஓர்
நாள் அவள் உள்ளத்தில் கொண்டாள். நாராயணன் ஒருநாள்
அவள் நெஞ்சில் குடிகொண்டான். மற்றொரு நாள் மல்லரை
மாட்டிய தேவன் அவள் மனத்தே வந்து நின்றான். மாமாயன்
மீண்டொருநாள் அவள் உள்ளத்திற் குடிகொண்டான். அவ்
வண்ணமே தூமாய்முடியானைய், முகில் வண்ணனைய், தென்னிலங்
கைக் கோமானைச் செற்றவனைய், புள்ளின்வாய் கீண்டானைய், பங்
கயக் கண்ணனைய், வல்லானைக் கொன்றானைய், மணிவண்ணனைய்,
எம்பெருமானைய், நந்தகோபாலனைய், பின்னைமணாளனைய், செற்
றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலனைய், பசுக்கள் ஆற்றப் படைத்
தான் மகனைய், சந்த்ர சூர்யர்களைக் கண்களா யுடையோனைய்,
பூவைப்பூவண்ணனைய், பொன்றச்சகடம் உதைத்தவனைய், நெடுமா

லாய், ஆலினிலையானாய், கோவிந்தனாய், ஒழிக்க ஒழியா உறவின னாய், தன்னைக் குற்றேவலென்றும் கொள்பவனாய், கடல் கடைந்த மாதவனாய், ஒவ்வொரு பாசுரத்திலுடையவும் விலக்ஷணமான பகவதாகாரத்தை க்ரமமாக ஒவ்வொரு திநத்திலும் நாள் முழுவதும் சிந்தித்தாள். அன்றிரவில் அவ்வண்ணம் தன்பக்கல் சென்று தாமரைத் திருக்கையைத் தன் சிரஸ்மேல் வைத்த வரதனை, அவனுக்கே உரியதான தினமுழுதும் வாயினும்பாடி மனத்தினால் சிந்தித்தாள். ஜநகநந்தினிக்குக் கர்மபந்த மெனப்பட்ட தெல்லாம் தீயினில் விழுந் தூசுகள் போல் சாம்பலாய்ப் போயின.

அஸ்தமித்த பிறகு ஒவ்வொருநாளும் கோபிகா கீதத்தை ஜநகம் தனக்குள் பாடி அநுபவித்தாள். தனக்கு அவன் தர்சநந்தந்து மறைந்தானாகலால், அவனை மீண்டும் காண மிக்க விரும்பினாள். வ்ரஜாங்கனைகளுக்கு மன்மத மன்மதனாய், மென்மாலையைத் தோளில் அணிந்தவனாய், பொற்பட்டாடை யுடுத்தினவனாய், புன்னகை விளையாடிய முகபங்கயத்தனாய், அவன் திவ்யதர்சநம் தந்தருளிய வண்ணம் தனக்கும் தந்தருளப் போகின்றான் என்று இடைவிடாமல் நம்பினாள்.

இவ்வளவோடு நிற்காமல் தினந்தோறும் பிதாவுடன் கோவிலுக்குச் சென்று ப்ரணதார்த்திஹரனைத் தர்சித்தாள். பிதாவால் சொல்லப்பட்ட ஸத்விஷயங்களைப் பக்தியுடன் கேட்டாள். பரமாத்மாவான ஸ்ரீக்ருஷ்ணனிடம் மேல் விவரித்த ப்ரகாரம் ஜநகநந்தினியினுடைய பக்தியானது அந்த மார்கழி மாஸத்தில் அத்யுத்கர்ஷத்தை அடைந்தது. அடிக்கடி அவள் கண்கள் முன்பாக அவன் உகந்த ரூபம் ஆவிர்பவித்து மறைவதுபோல் தோன்றியது. போகி பண்டிகை வந்தது. பெருமாளையும் ஆண்டாளையும் ஜநகம் அன்று ஸேவித்தாள். ஆண்டாளுடைய பாக்யவிசேஷம் ஜநகத்துக்கு ஒரு சுபஸூசகமாய்த் தோன்றியது.

அன்றிரவு ஜநகத்தின் ஸ்வப்நத்தில் கோபீவல்லபன் முன்போலத் தர்சநம் தந்தான். அவனுடைய திவ்ய ரூபத்தை ஜநகம் கண்டாள் ; களித்து உட்கொண்டாள். அவன் பாத கமலங்களில் விழுந்தாள் ; கண்ணீர் சொரிந்தாள். அளவற்ற ஆநந்தத்தை அநுபவித்தாள். ‘ [illegible]

டிவ: க்ருபயா பரிப்லுத: । உத்த்ருத்ய தக்ஷிணேநாஸ்ய ஸாம்ஸாஜம்’ என்கிறபடியே, ஸ்ரீபகவான் மிகுந்த கருணையுடன் ஜநக நந்தினியைத் தன்னுடைய திருக்கைகளால் எடுத்து, அவள் சிரத்தின்மீது தன் பத்மஹஸ்தத்தை வைத்தான். “ஜநகநந்தினீ! உனக்கு மங்களம் உண்டாகும். உன்னிடம் நான் ப்ரீதனானேன். விளம்பமின்றி நீ எனது ஸாயுஜ்யத்தை அடையப் போகின்றாய்.” என்று சொல்லிவிட்டு ஸ்ரீக்ருஷ்ணன் அந்தர்தாநத்தை அடைந்தான். உடனே ஜநகம் விழித்துக்கொண்டாள்.

தன்னுடைய ஜந்மபலம் பகவத்க்ருபை யென்றும், அந்த க்ருபையினுடைய ப்ரயோஜநம் அவனுடைய நித்ய கைங்கர்ய ப்ராப்தி என்றும், அவ்விரண்டும் தனக்குக் கிடைத்து விட்டதென்றும் ஜநகம் அத்யவஸித்தாள்; ஆநந்த மடைந்தாள். அவள் ஹ்ருதயத்தில் நிறைந்து பெருகிய பேரின்பமானது அவள் முகத்தில் ப்ரகாசித்தது. ஸங்க்ராந்தியன்று காலையில் வழக்கப்படி ஸ்நாநம் செய்து முடிக்த கூந்தலுடனும், ஸ்ரீ சூர்ணம் ப்ரகாசிக்கும் முகத்தில் முன் என்றும் கண்டிராத ஒரு ஸந்தோஷக் குறிப்புடனும், க்ருஹ வ்யாபார நிமித்தம் ஸஞ்சரித்துக்கொண்டிருந்த தன் புத்ரியைக் கேசவாசார்யர் பார்த்தார். விஸ்மய மடைந்தார்.

“ஜநகம்! உன் முகத்தைப் பார்த்தால் ஏதோ விசேஷம் உண்டென்று யோசனை உதிக்கின்றது” என்றார் கேசவாசார்யர்.

“விசேஷம் உண்டு.” என்றாள் ஜநகநந்தினி.

“என்ன? அதை விவரிப்பாய்” என்றனர் பிதா.

“பகவான் ராத்ரி ஸ்வப்நத்தில் ஸேவை ஸாதித்தார். தேவரீர் அடியேனை அநுக்ரஹித்த தினத்துக்கு முன் ராத்திரியிலும் அவனுடைய தர்சநம் கிடைத்தது” என்றாள் ஜநகம்.

“எவ்வண்ணம் தர்சந மளித்தான்? என்ன நடந்தது?” என்றார் கேசவாசார்யர்.

“கோபாலனாக இரண்டு காலத்திலும் ஸேவை ஸாதித்தார். ப்ரதம தர்சநத்தில் அடியேனுடைய பக்தியை உகந்ததாயும், அடியேன் இஷ்டம் கைகூடு மென்றும் திருவாய்மலர்ந்தருளினார்.

நேற்றிராத்ரி அடியேனுக்கு ஸ்வப்ராப்தியை விளம்ப மில்லாமல் தருவதாக வரமளித்தார்” என்று சொன்னாள் ஜநகநந்தினி.

கேசவாசார்யர் யோசித்தார். அவர் புத்ரியின் ஏகாக்ர சித்தத்தை அவர்க்குத் தெரியும். அதற்கு அவரும் ஸஹாயமாக நின்றார். பெண்ணின் அநுபவம் கேவலம் ப்ரமமன்றென நினைத்தார்.

“குழந்தாய்! நீ சொல்வது உண்மையானால் நீ பகவத் ப்ரஸாதத்தை ஸம்பாதித்து விட்டாய். அதற்குத் தக்க ஸாமக்ரிகள் முன்னமே உன்னிடம் சேர்ந்தன. உன்னுடைய ஜந்மம் ஸபலமாயிற்று. ஜந்மாந்தரத்திலேயே பகவான் உன்னை உகந்தருளினான். நித்ய கைங்கர்ய ப்ராப்தியின் பொருட்டு உனக்கு யாதொரு உபாய ஸ்வீகார மின்றி நீ இந்த ஜந்ம மெடுத்தாய். உன் பூர்வ ஸுக்ருத பலமாக உனக்கு ஸத்ஸங்கம் உண்டாயது. தத்வ ஜ்ஞாநம் ஸ்திரப்பட்டது. ஸம்ஸார ஸ்ப்ருஹை நசித்தது. ஆசார்ய ப்ராப்தியை அடைந்தாய். ரமாகாந்தன் திருவடிகளில் ப்ரபதநம் செய்தாய். வாஸுதேவன் பர்யங்கத்தை ஆரோஹணம் செய்யப்போகின்றாய். உன் ஆசார்யனுக்கு மிகுந்த ஸந்தோஷத்தை உண்டுபண்ணினாய்.

“ஆனால் உன்னுடைய பிதா உன் வியோகத்தை ஸஹிப்பது கஷ்டம். சிரகாலம் உன்னுடன் பழகினபடியால் உண்டான ஸ்நேஹம் அதற்குக் காரணம். உன் ஆத்மாவும் என்னுடையதும் அவனுடைய சொத்துகள். நமக்கு அறியக்கூடாத சில ப்ராசீநஸத்கர்மங்களடியாக அவன் ஸங்கல்பத்தால் நமக்குள் இந்தச்சரீர ஸம்பந்தம் ஜநித்தது. அவன் ஸங்கல்பத்தாலேயே அது அற்றுப்போம். லோக ரீதியில் உன்னை நான் முந்திக்கொள்ளல் ந்யாயம். அவன் திருவடிகளில் நானே உன் ஆத்மாவை ஸமர்ப்பித்தேன். அவனுடைய சொத்தை [அதாவது, எனதென்று அபிமானிக்கத் தகாததை] அவன் திருவுள்ளத்தாலேயே சில காலம் என்னிடம் நிக்ஷேபித்திருந்ததை அவனிடமே தந்தேன். உன் மனோரதப்படியோ, உன் சரீராரம்பத்துக்குக் காரணமாய் நின்ற ப்ராப்தாவஸாநத்தாலோ, உனக்குப் பகவத் ப்ராப்தி க்ஷிப்ரமாக நேரிட்டால், சாஸ்த்ர ரீதியாக நான் சோகிக்கக்கூடாது.

“நானெப்படியாவது போகின்றேன். உன் ஸ்வப்நம் ஸத்யமாக முடிந்தால் உன் மாதா என்ன செய்வள்?” என்றிவ்வண்

ணம் கேசவாசார்யர் சொன்னார். ஜநகநந்தினி ஒன்றும் சொல்லவில்லை. பிதாவைப் பலதரம் நமஸ்கரித்தாள். நமஸ்கரித்துக் கொண்டேயிருக்கையில், "குழந்தாய்! போதும். உன் கார்யங்களைப் பார். நாராயணன் உன்னை ரக்ஷிக்கட்டும்" என்று சொன்னார். ஜநகம் அப்புறம் சென்றனள்.

அன்றிராத்ரி பெருமாள் சிவாரத்துக்கு எழுந்தருளினார். கேசவாசார்யர் கைங்கர்யார்த்தம் அநுயாத்ரையாகச் சென்றார். மறுநாள் காலையில் ஜநகம் எழுந்திருக்கும்போதே தன்சரீரம் உஷ்ணித்திருக்கவும் துர்ப்பல மடைந்திருக்கவும் கண்டாள். அந்நாளுக்குரிய கார்யங்களில் அந்வயிக்கவும் அவளுக்குச் சக்தியில்லை. மத்யாஹ்நத்தின் மேல் உக்ரமான ஜ்வரம் உண்டாகிப் படுக்கையாய்ப் படுத்துவிட்டாள். ஹரிப்ரியை ஸ்ரீநிவாஸனுக்குச் சொல்லியனுப்பினாள்.

உடனே ஸ்ரீநிவாஸன் வந்தான். ஸந்திவேசங்களை ஹரிப்ரியையினிடம் தெரிந்துகொண்டான். உள்ளே சென்று ஜநகத்தைப்பார்த்தான். ஜ்வர வேகத்தால் தூங்குகின்றவள் போல் தென்பட்டாள். 'ஜநகம்!' என்று கூப்பிட்டான். அவள் கண்திறந்தாள்.

"என்ன உடம்பு?" என்று ஸ்ரீநிவாஸன் கேட்டான். "ஜ்வரம்" என்றாள் ஜநகநந்தினி. "உன்னைத் தொடலாமா?" என்று ஸ்ரீநிவாஸன் கேட்டான். "தொடவேண்டுமா? தொட்டுப்பார்" என்றனள்.

ஸ்ரீநிவாஸன் அவள் கையைத் தொட்டான். பிறகு முகத்தைத் தொட்டுப்பார்த்தான். ஜ்வரம் மிகவும் உக்ரமான தென்று அறிந்தான். "ஜநகம்! நான் ஹாஸ்பிடல் வைத்யரை அழைத்துக்கொண்டு வருகிறேன்" என்று சொல்லிக்கொண்டு எழுந்தான்.

"நீ அவரைக் கூப்பிடாதே. நான் ஹாஸ்பிடல் மருந்து சாப்பிட மாட்டேன். எனக்கு வைத்யரே வேண்டாம்" என்று ஜநகநந்தினி சொன்னாள்.

"ஏன் அப்படிச் சொல்லுகின்றாய்? இதென்ன பைத்யம்?" என்றனன் ஸ்ரீநிவாஸன்.

"பைத்யம் ஒன்றுமில்லை. எனக்குச் சிகித்ஸை பயன்படாது" என்றாள் ஜநகம்.

“ஜ்வரவேகத்தால் பேசுகின்றையோ?” என்றுன் ஸ்ரீநிவாஸன்.

“ஆமாம். அதன் வேகம் சிகித்ஸையால் அடங்காது. தானே அடங்கும்” என்றுள் ஜநகநந்தினி. இதை யெல்லாம் கேட்டிருந்த ஹரிப்ரியை,

“குழந்தாய்! நான்தான் ஸ்ரீநிவாஸனை வரவழைத்தேன். அப்பா இல்லையென்று உனக்குத் தெரியாதா? ஸ்ரீநிவாஸன் வைத்யரை அழைத்து வரட்டும். தடை சொல்லாதே.” என்றுசொன்ருள்.

“அம்மா! எனக்கு ஹாஸ்பிடல் வைத்யம் வேண்டாம். அப்பா வந்தபிறகு பார்த்துக்கொள்ளலாமே. உனக்கு அவஸரம் என்ன?” என்றுள் ஜநகம்.

“இந்த ஜ்வரத்தை வைத்யம் செய்யாமல் நிமிஷமும் வைத்துக்கொள்ளலாமோ? நான் வைத்யர் திருமலாசார்யரையாவது அழைத்துக்கொண்டு வருகிறேன்” என்றுன் ஸ்ரீநிவாஸன்.

“வேண்டுமானுல் அழைத்துக்கொண்டுவா” என்றனள் ஜநகம். ஸ்ரீநிவாஸன் வைத்யர் வீட்டிக்குப் போனுன். ஹரிப்ரியை பெண்ணின் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தாள்.

வைத்யர் வந்தார். ஜநகத்தின் கையைப் பிடித்துப் பார்த்தார். “என்னமாயிருக்கின்றது?” என்றுள் ஹரிப்ரியை. “ஜ்வரம் தான். இரண்டு மூன்று வேளை மருந்து கொடுத்தால் ஸ்வஸ்தமாகும்” என்றுர் வைத்யர். தேன் கொண்டுவரச் சொல்லி இரண்டு மூன்று கட்டு மாத்திரைகளைத் தேய்த்துக்கொடுத்தார். ஜநகம் கஷ்டத்துடன் எழுந்து ஔஷதத்தைச் சாப்பிட்டாள். “மறுபடியும் ஸாயங்காலம் வருகின்றேன்” என்று சொல்லிவிட்டு வைத்யர் எழுந்துபோனுர். ஸ்ரீநிவாஸன் அவரைப் பின்தொடர்ந்தான்.

“என்னமாயிருக்கிறது?” என்று வெளியில் வந்து வைத்யரைக் கேட்டான்.

“உக்ரமான ஜ்வரம். இரண்டு மூன்று வேளை ஔஷதம் செல்லட்டும்; அப்புறம் பார்ப்போம்” என்றுர் வைதயர். ஸ்ரீநிவாஸன் ஹ்ருதயத்தில் சோகாக்நி மூட்டப்பட்டது. கேசவாசார்ய

ருடைய வீதித் திண்ணையில் ஸ்ரீநிவாஸன் உட்கார்ந்தான். உள்ளே செல்வன். கண்மூடிப் படுத்திருக்கும் ஜநகத்தைப் பார்ப்பன். வெளியே வந்து உட்கார்வன். இவ்வண்ணம் ஸாயங்சாலம் வரையில் சென்றது. அவனுடைய மாதாவும் விஷய மறிந்து அவ்விடம் வந்து சேர்ந்தாள்.

அஸ்தமித்தவுடன் வைத்யர் வந்தார். கைபார்த்தார். அது வரையில் ஜநகநந்தினி ஜ்வரவேகத்தால் கண்களை மூடிக்கொண்டு படுத்திருந்தாள். கூப்பிட்டால் கண்களைத் திறந்து பார்ப்பள். கேட்ட கேள்விக்குப் பதில்சொல்வள். அந்த விஷயங்களை வைத்யர் கேட்டுத் தெரிந்துகொண்டார். முன்போலக் கட்டுமாத்ரைகளைத் தேனில் தேய்த்து ஜநகத்துக்கு மருந்து கொடுத்தார். ஆஹாரத்துக்காகக் கஞ்சி கொடுக்கச் சொன்னார். மறுநாள் காலையில வருவதாகச் சொல்லிவிட்டுப் போனார்.

அன்றிரவு ஜநகம் தூங்கினளில்லை. ஜ்வரம் ஒரே நிதாநமாய் அடித்தது. அதிகமாகப் படுக்கையில் புரண்டாள். வாயில் வந்தபடி யெல்லாம் பேசினள். ஆனால் அவள் வார்த்தைகள் எல்லாம் ஸத்விஷயங்களைப் பொருத்தன. பிதாவுடன் பேசுவதுபோல் பேசுவள். பகவத்விஷயமான ஸ்லோகங்களையும் பாசுரங்களையும் பாடுவள். கூப்பிட்டு, ஸந்தர்ப்ப மற்றபடிப் பேசுகிறதாகச் சொல்லப்பட்டால், "நான் அப்படியா சொன்னேன்?" என்று சொல்வள். படுக்கையைச் சுற்றி ஹரிப்ரியையும் ஜநகவல்லியும், ஸ்ரீநிவாஸனும் உட்கார்ந்து காலம் கழித்தார்கள்.

பின்மாலை வரதன் ஸேவரத்தினின்று திரும்பி எழுந்தருளினர். உடனே கேசவாசார்யர் வாசலில்வந்து கதவைத் தட்டினர். ஹரிப்ரியை எழுந்துபோய்க் கதவைத் திறந்தாள். கேசவாசார்யருடன் பத்மநாபாசார்யரும் நின்றார். "குழந்தை தாபஜ்வரத்தால் ஸங்கடப்படுகிருள்; ராத்ரியெல்லாம் நாங்கள் தூங்கவில்லை; வந்து பாருங்கள்!" என்று சொன்னாள்.

கேசவாசார்யரும் பத்மநாபாசார்யரும் உள்ளே சென்றார்கள். கேசவாசார்யர் ஜநகநந்தினியிடம் போய் உட்கார்ந்து அவள் கையையும் முகத்தையும் தொட்டுப் பார்த்தார். ஜ்வரவேகத்தைத் தெரிந்துகொண்டார். "ஜநகம்!" என்றார். ஜநகம் கண்திறந்து

பிதாவைப் பார்த்தாள். "குழந்தாய்! என்னமாயிருக்கிறாய்?" என்றார். "ஜ்வரம் மயக்கமாய் இருக்கின்றது. தாகம் எடுக்கின்றது" என்று சொன்னாள்.

வைத்யர் திருமலாசார்யர் வந்து இரண்டு வேளை மருந்து கொடுத்தாரென்றும், மறுபடியும் காலையில் வருவர் என்றும் ஹரிப்ரியை கேசவாசார்யருடன் சொன்னாள். கேசவாசார்யர் யோசிப்பதுபோல இருந்தார்.

"ஜ்வரவேகம் பலமாய் இருக்கிறது போல் தோன்றுகிறதே. வைத்யம் போதுமா?" என்று பத்மநாபாசார்யர் கேட்டார்.

"திருமலாசார்யர் வந்தால் அவரைக் கேட்டுக்கொண்டு மேல் யோசனை செய்யலாமே" என்றார் கேசவாசார்யர்.

"நான் போய் திருமலாசார்யரை அழைத்துக்கொண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு ஸ்ரீநிவாஸன் போனான்.

"நான் சீவரத்துக்குப் போகும்போது குழந்தை ஸௌக்யமாயிருந்தாளே. இந்த ஜ்வரம் எப்போது வந்தது?" என்றார் கேசவாசார்யர்.

"நேற்று உதயம் முதற்கொண்டே அவளுக்கு உடம்பு செவ்வையில்லை. இந்த வேகமான ஜ்வரம் மத்யாஹ்னமே வந்துவிட்டது. அப்போதே படுக்கையாய்ப் படுத்துவிட்டாள். ஸ்ரீநிவாஸனை வரவழைத்தேன். அவன் ஆஸ்பத்ரி வைத்யரை அழைத்துக்கொண்டு வருவதாய்ச் சொன்னான். ஜநகம் அதை ஒப்பவில்லை. அதன்பிறகு திருமலாசார்யரை அழைத்துவந்தான்" என்று ஹரிப்ரியை சொன்னாள்.

"இந்த ஜ்வரத்துக்குக் காரணம் பகுப்ரகாரமாக ஏற்பட்டுவிட்டது. பரண்யன் ஸங்கல்பம் எப்படியிருக்குமோதெரியாது" என்று சொன்னார் கேசவாசார்யர்.

"தேவரீர் இப்படி அதைர்யப் படலாமோ?" என்றார்பத்மநாபாசார்யர். மேலே யாதொரு வார்த்தையும் நடக்கவில்லை. ஸ்ரீநிவாஸனும் திருமலாசார்யருடன் வந்துசேர்ந்தான். வைத்யர் வந்தவுடன் ஜநகநந்தினியினுடைய கையைப் பிடித்துப் பார்த்தார். பிறகு "ராத்ரி தூங்கினாளா?" என்று கேட்டார். "தூக்கமில்லை,

மிகவும் அரற்றிக்கொண்டிருந்தாள்" என்று ஸ்ரீநிவாஸன் சொன்னான். வைத்யர் நடைத்திண்ணைமீது போய் உட்கார்ந்தார். கேசவாசார்யர், பத்மநாபாசார்யர், ஸ்ரீநிவாஸன், இவர்களும் போய் உட்கார்ந்தார்கள். கேசவாசார்யர் வைத்யரைப்பார்த்து, "என்ன யோசிக்கின்றது? ஜ்வரத்தின் ஸ்வரூபம் என்ன?" என்று கேட்டார். "இந்த ஜ்வரம் அங்குரித்து மூன்று நாள் ஆயிருக்கவேண்டும். ஸாவதாநமில்லாமையால் அது வ்ருத்தியாய் விட்டது. இரண்டு வேளை ஔஷதம் கொடுத்தேன். அது ப்ரயோஜநப்பட்டதாகத் தோன்றவில்லை. பெரிய காஞ்சீபுரம் ஸ்வாமிகுருக்களிடம் விசேஷமாத்ரைகள் உண்டு. அவரை அழைத்துவாருங்கள்" என்று வைத்யர் சொன்னார்.

"அடியேன் புறப்பட்டுப்போய் குருக்களை அழைத்துக்கொண்டு வருகிறேன்" என்று சொல்லிப் பத்மநாபாசார்யா சென்றார். வைத்யர் திருமலாசார்யரும் "இதோ வந்து விடுகிறேன்" என்று சொல்லிவிட்டுப் போனார். ஸ்ரீநிவாஸன் ஆற்றின் பக்கமாய்ப்போனான். கேசவாசார்யரும் உதயமான குளப்புறம் சென்று நீராட்டம் செய்துகொண்டு ஈரவஸ்த்ரங்களுடன் இல்லத்துக்குத் திரும்பிவந்தார். உடனே வஸ்த்ரதாரணம் செய்துகொண்டு ப்ராதஸ்ஸந்த்யாவந்தநம் முதலான நித்யகர்மங்களைச் செய்து முடித்துக்கொண்டார். அவருடைய பத்நியும் ஸஹோதரியும் மாறிமாறி ஜநகநந்திநியினுடைய பக்கத்தில் இருந்தார்கள். ஸ்ரீநிவாஸனும் அவர்கள் பக்கம்வந்து உட்கார்ந்தான்.

## இருபதாவது அதிகாரம்.

ஸூர்யோதயமாய் நான்கு நாழிகையாயிற்று. ஜநகம் கண் திறந்தாள். மாதாவைப் பார்த்து, "அப்பா எங்கே?" என்றனள். ஸ்ரீநிவாஸன் எழுந்துபோய்க் கேசவாசார்யரை அழைத்து வந்தான்.

"அப்பா! என் பக்கத்தில் உட்காரும்" என்றாள் ஜநகம். கேசவாசார்யர் வந்து உட்கார்ந்தார்.

"அப்பா! ஜ்வரவேகம் ஸஹிக்கப்போகவில்லை. இது மரணயன் ஸங்கல்பம்போல் தோன்றுகிறது. சிகித்ஸைக்காக ச்ரமப்

படுதல் ப்ரயோஜநப்படும்போல் தோன்றவில்லை" என்று ஜநகம் சொன்னாள்.

"குழந்தாய்! ஶரண்யன் ஸங்கல்பம் எப்படியிருந்தாலும், சிகித்ஸையில்லாமல் விட எங்களுக்கு மநஸ் துணிடமாட்டாது. அது விஷயத்தில் நீ எங்களுடைய இஷ்டத்தைப் பகுமாநிக்க வேண்டும்" என்றார் கேசவாசார்யர்.

"தேவரீர் நியமநப்படி நடக்கின்றேன். தாகம் எடுக்கின்றதே. தீர்த்தம் கிடைக்குமோ?" என்றாள் ஜநகநந்தினி.

"வைத்யரை ப்ரதீக்ஷிக்கின்றோம்; அவர் வருகிறவரையில் பொறுத்திரு" என்றார் கேசவாசார்யர். ஜநகம் கண்களை மூடிக் கொண்டாள்.

அதன்பிறகு பத்மநாபாசார்யர் ஸ்வாமிகுருக்களை அழைத்துக்கொண்டு வந்தார். அவர்கள் பின்னால் திருமலாசார்யரும் வந்தார். பத்மநாபாசார்யரும் வைத்யர்களும் ஜநகநந்தினியிடம் வரவே பெண்டுகள் எழுந்து விலகினார்கள். ஸ்ரீநிவாஸனும் கேசவாசார்யரும் பக்கத்தில் இருந்தார்கள். ஸ்வாமிகுருக்கள் ஜநகத்தின் கையை நிதாநமாய்ப் பார்த்தார். பிறகு திருமலாசார்யரைப் பார்த்து, "என்ன மாத்ரை ப்ரயோகித்தீர்கள்?" என்றார். திருமலாசார்யர் தாம் தேய்த்த மாத்ரைகளைச் சொன்னார்.

பிற்பாடு, தேன் கொண்டுவரச்சொல்லிச் சில கட்டுமாத்ரைகளைத் தேய்த்து ஜநகநந்தினியைச் சாப்பிடச்சொன்னார். தன் மாதாவின் ஸஹாயத்துடன் ஜநகம் எழுந்து ஔஷதத்தை உண்டாள். மீண்டுமொருதரம் மாத்ரைகளை முன்போல் தேய்த்து, அந்த மருந்தை மத்யாஹ்நம் கொடுக்கும்படி சொன்னார். ஆகாரத்துக்காகக் கோதுமைக்கஞ்சி கொடுக்கச்சொன்னார். தீர்த்தத்தில் இரும்பைப் போட்டுக் காய்ச்சி, கேட்டபோது கொஞ்சம் தீர்த்தம் கொடுக்கச்சொன்னார். ஸாயங்காலம் திரும்பி வருவதாகச் சொல்லிவிட்டுப் போனார்.

ஸாயங்காலம் வரைக்கும் ஜநகநந்தினிக்கு ஜ்வரம் குறையவில்லை முதல்நாள் போலப் பெண்டுகள் சிந்தாக்ராந்தர்களாய்ப் பக்கத்தில் இருந்தார்கள். கேசவாசார்யரும், ஸ்ரீநிவாஸனும், அடிக்கடி வந்து பார்ப்பார்கள். ஸ்ரீநிவாஸன் செய்யச்சொன்ன

தொழில்களைச் செய்துகொண்டிருந்தான். அன்றைய தினம் ஜநக நந்தினிக்கு ஆகாரம் குறைந்துவிட்டது. மத்யாஹ்நம் திருமலா சார்யர் வந்து கைபார்த்தார். ஜ்வரம் குறையாது ஒரே வேகமாய் அடிக்கின்றதென்று சொன்னார்.

அஸ்தமந வேளையில் ஸ்வாமிகுருக்கள் வந்தார். ஜநகத்தின் கையைப் பிடித்துப் பார்த்தார். முன்னே விட விசேஷ மாத்திரை களைத் தேய்த்தார்; மருந்து கொடுத்தார். ஜநகம் படுக்கையிலே யே அதைச் சாப்பிட்டாள். ராத்ரியில் கொடுப்பதற்காக மருந்து தேய்த்துவைத்தார். மறுநாள் காலையில் வருவதாகச் சொல்லி விட்டு எழுந்துபோனார்.

போகும் வைத்யரைப் பத்மநாபாசார்யர் பின்தொடர்ந்தார். "குருக்கள்! வ்யாதியின் ஸ்வரூபம் என்ன?" என்று கேட்டார். "வ்யாதி பலந்தான். விசேஷ மருந்துகளைக் கொடுக்கின்றேன். இதுவரையில் மருந்துகள் வேலை செய்யவில்லை" என்று குருக் கள் சொன்னார். "ப்ராணபயம் உண்டோ?" என்று பத்மநாபா சார்யர் கேட்டார். "இல்லை என்று சொல்லக்கூடவில்லை; சக்தி யுள்ளவரையில் பார்க்கின்றேன்; இப்போது சீதளம் வந்திருக் கின்றது; காலையில் வருகின்றேன்" என்று வைத்யர் சொன்னார்.

பத்மநாபாசார்யர் முகம் விழுந்துபோச்சுது. மெள்ளமெள் ளத் திரும்பி நடந்தார். கேசவாசார்யர் வீட்டுவாசலில் நின்று அவரைப் பார்த்துக்கொண்டு நின்றார். அவர் நெருங்கினவுடன் "வைத்யர் என்ன சொன்னார்? விசேஷமுண்டோ?" என்று கேசவாசார்யர் கேட்டார். "தோஷம் உண்டாயிருக்கின்றதென் றும், ப்ராணபயம் சங்கிக்கத்தக்க தென்றும், தம்மால் ஆனதைச் செய்வதாயும் சொல்லிப் போனார்; காலையில் வருவதாயும் சொன் னார்" என்று பத்மநாபாசார்யர் சொன்னார். இப்படிப்பட்ட யோச னைகள் முன்னமே கேசவாசார்யருக்கு உண்டாய்விட்டன. அவர் பரமஸாது; என்ன செய்வர்? பகவான் தமக்களித்த விலையில்லாத ரத்நத்தை இழந்துபோகக் காலம் வந்ததே! என்று வருந்தினார்.

அன்றிராத்ரி ஜநகநந்தினிக்குப் படிப்படியாகப் பலங்குறைந் தது. சிலகாலம் மயக்கத்தால் கண்களை மூடிக்கொண்டிருப்பள். சிலகாலம் கண்களைத் திறந்துகொண்டு பக்கத்தி லிருப்பவர்களைப் பார்ப்பள். கேட்ட கேள்விக்கு இரண்டொரு வார்த்தைகள் சொ

ஸ்வன். அந்த க்ருஹத்தி லிருந்தவர்களில் ஒருவர் கூட அன்றி ராத்ரி கண்களை மூடினரில்லை.

காலையில் குருக்கள் வந்தார். கையைப் பார்த்தார். சீதளம் மிகம் மீறி நிற்பதைத் தெரிந்து கொண்டார். மருந்து பயன்படா தென்று அறிந்திருந்தும், மருந்து தேய்த்துக் கொடுத்தார். ஸாயங் காலம் வருவதாகச் சொல்லி வெளிப்பட்டார்.

பத்மநாபாசார்யர் அவருடன்கூட நடந்துபோய் வ்யாதியின் ஸ்வரூபத்தைப் பற்றிக் கேட்டார். "இன்று மத்யாஹ்நம் வரை யில் தள்ளினால் பிழைப்புண்டு" என்று வைத்யர் சொல்லிவிட் டுப் போனார். அந்த வார்த்தைகளின் அர்த்தத்தைப் பத்மநாபா சார்யர் தெளிவாக அறிந்தார்.

அன்றுகாலை பத்துநாழிகை ஆயிற்று. ஜநகம் கண்திறந்தாள். தாய் ஒரு பக்கமும், ஸ்ரீநிவாஸன் மற்றொரு பக்கமும் இருந்தார் கள். கநகவல்லி உள்ளே தளிகை பண்ணிக் கொண்டிருந்தாள். கேசவாசார்யர் ஸங்க்ரஹமாகப் பகவதாராதநம் செய்துகொண் டிருந்தார்.

ஜநகம் ஸ்ரீநிவாஸனைப் பார்த்தாள். "ஸ்ரீநிவாஸா! என்னு டைய மரணத்தைப்பற்றி ஸ்ரீக்ருஷ்ணனை ப்ரார்த்தித்தேன். பக வான் க்ருபை செய்வதாக வரமளித்தார்; என்னுடைய நிர்யா ணம் ஸமீபித்துவிட்டது. என்னுடைய ஸ்திதியில் அதற்காக யாரும் வ்யஸநப்படவேண்டாம். எனக்காக நீ உன்னுடைய ஸுகத் தைப் பறிகொடுத்தாய். அது ந்யாயமன்று. இனியாவது லோக ரீதியை அநுஸரித்து நட. உன் மதாபிதாக்களுக்கு நீ யொரு பிள்ளை. என் மாதாபிதாக்களுக்கும் இனிமேல் நீதான் கதி.!' என்று சொன்னாள்.

ஸ்ரீநிவாஸனும் ஹரிப்ரியையும் கண்ணீர் தாரைதாரையாய் விட்டார்கள். பிறகு ஸ்ரீநிவாஸன், "உன்னுடைய ஸ்திதியைப் பற்றி சோகஸாகரத்தில் மக்நராயிருந்த உன் மாதாபிதாக்களு க்கு உன்னுடைய வியோகரூபமான மஹாசோகத்தை நீ கொடுப் பதற்கு ஸம்மதித்தையே! எனக்குப் புத்தி சொல்லுகிறையே! உன்னைக் கண்ணால் பார்த்துக்கொண்டு, அதையே ஒரு பாக்யமாக வெண்ணிப் பிழைக்க நிஸ்சயித்திருந்த ஜநங்களுக்கு உன்னுடைய வியோகாநந்தரம் ஆறுதலும் உண்டோ?" என்று சொன்னான்.

"ஸ்ரீநிவாஸா! மரணத்தை நான் ப்ரார்த்தித்த போதிலும், அது ஸந்நிஹிதமான பிறகு என் அப்பாவையும் அம்மாவையும் நினைத்துக் கஷ்டப்படுகின்றேன். இப்போது ஸர்வப்ரகாரத்தாலும் அரக்ஷைதயாய் விட்டேன். உன் வார்த்தைகளால் நீ எனக்கு வருத்தம் தராதே." என்று ஜநகம் சொன்னாள். பின் மாதாவைப் பார்த்தாள்.

"அம்மா! என் வியோகத்தை நீ ஸஹிக்கமாட்டாய். ஆனாலும் அப்பாவினுடைய கைங்கர்யத்தை அநாதரிக்கவேண்டாம். நான் ஜீவித்திருக்க, என்னைத் திநமும் பார்த்துத் துக்கிக்கின்றாய். என் வியோகத்தால் உண்டாகும் துக்கம் இன்னும் பெரிதானாலும், அது, எனைக்காணாத காரணத்தால் க்ரமேண குறையலாம். எனது துக்கமோ இத்தோடு முடிகின்றது. மரணம் இன்றோ, நின்றோ, யாவர்க்கும் ஸம்பவிப்பதே. ஆதலால் உனது ஜந்மலாபமான பர்த்தாவின் பணிவிடையை மறவாதே. ஸ்ரீவைகுண்டநிலயன் ஸ்தாநத்திலே நாமெல்லோரும் சேரப்போகின்றோம் என்பது ஸத்யம்." என்று சொன்னாள்.

ஹரிப்ரியை அவ்வார்த்தைகளைக்கேட்டு, ஸஹிக்கமாட்டாமல் எழுந்து உள்ளேபோய் உட்கார்ந்து அழுதாள்.

"ஸ்ரீநிவாஸா! அப்பாவைக் கூப்பிடு" என்று ஜநகம் ஸ்ரீநிவாஸனுடன் சொன்னாள். ஸ்ரீநிவாஸன் போய் அதைச் செய்யக் கேசவாசார்யர் பகவதாராதநத்தை முடித்துக்கொண்டு புத்ரியினிடம் வந்து உட்கார்ந்தார்.

"அப்பா! அடியேனை வாத்ஸல்யத்துடன் வளர்த்தீர்; ஜ்ஞாநமளித்தீர்; அடியேனுடைய ஆத்மரக்ஷணத்தின் பொருட்டுப் பகவானை ப்ரார்த்தித்தீர். ஸகல விதத்தாலும் தேவரீரைப் போன்ற ஸுஹ்ருத்தமரான பிதா கிடைத்தது அடியேனுடைய பாக்ய விசேஷம். அடியேனுடைய வியோகம் தேவரீர்க்குத் துஸ்ஸஹமா யிருக்குமென்று இப்போது நன்றாகத் தெரிந்து கொண்டேன். தேவரீருடைய திருவுள்ளத்தை அநுஸரித்து அடியேனுடைய ப்ரார்த்தனைகள் இல்லாமல போயின. அதுவும ஸரண்யனுடைய ஸங்கல்பவிசேஷமே. அடியேன் ஏதாவது தெரிந்தும் தெரியாமலும் தேவரீர் திருவடிகளில் அபராதப்பட்டிருந்தால் அதைப்பற்றித் தேவரீருடைய க்ஷமையை ப்ரார்த்திக்கின்றேன்.

அடியேனுடைய மாதா கேவல ஸ்த்ரீபுத்தியுடன் கூடினவள். மிகவும் துக்கப்பட்டுப்போவள். அவளிடம் தேவரீர் க்ருபையாய் எழுந்தருளியிருக்கவேண்டும். வேறென்ன சொல்லப்போகின்றேன்? அடியேனுக்கும் அசக்தி மேலிடுகின்றது" என்று ஜநகம் சொன்னாள்.

"குழந்தாய்! உன் இஷ்டபந்துக்களைப் பற்றிச் சிந்திக்க இது தருந்த காலமன்று. உனக்கு இரண்டுதரம் சேவை ஸாதித்த பரண்யனை ஸ்மரி. உனக்கு ஸ்மரணசக்தி யுள்ளவரையில் அவனையே ஸ்மரி. எங்களுடைய மஹா ஸுக்ருதத்தால் நீ எங்களுக்குக் குழந்தையாய் வந்து பிறந்தாய். அந்தஸுக்ருதத்துக்கு முடிவு வந்து விட்டது. நீ பரமபுருஷனுக்கு வரணீயையாய் விட்டாய். அவன் ஸங்கல்பத்தை யாரால் தடுக்க முடியும்?" என்று கேசவாசார்யர் மொழிந்தார். ஜநகம் கண்களை மூடிக்கொண்டு த்யாநிப்பது போலிருந்தாள். கேசவாசார்யர் நடைத்திண்ணையில் போய் உட்கார்ந்தார்.

இவ்வண்ணம் இரண்டொரு நாழிகைகள் சென்றன. ஆதித்யன் உச்சி யேறினான். ஜநகம் கண்திறந்தாள். "அப்பா!" என்றாள். கேசவாசாரியரை அழைத்து வந்தார்கள். "அம்மா! என்னமாயிருக்கிறாய்?" என்று கேசவாசார்யர் கேட்டார். 'ஹரஹரே தேவஹுதிஷ்நு' என்று ஜநகநந்தினி சொன்னாள். "ப்ராஜ்ஞனிடம் விஶ்ரமிக்கப் போகின்றையா?" என்றார் கேசவாசார்யர். "பரண்யன் அழைக்கின்றான்; போகின்றேன்." என்று சொல்லி ஜநகம் கண்களை மூடிவிட்டாள்.

ஊர்த்வச்வாஸம் என்கிற கணக்குக்காக நாலு ஶ்வாஸம் வெளிவந்தது. ஜநகநந்தினியின் சரீரம் நிஶ்சலமாக நின்றுவிட்டது.

கேசவாசார்யர் கண்களில் நீர் ததும்ப ரேழிக்குச் சென்றார். ஸ்ரீநிவாஸன் கதறிக்கொண்டு வாசலுக்குப் போனன. ஹரிபரியை எழுந்தாள்; விழுந்தாள்; புரண்டாள்; கதறினாள். அவள் துக்கத்துக்கு அளவுண்டோ? "அம்மா! என்னை விட்டுப் போகிறையோ!" என்று பலதரம் கூவினாள். ஜநகத்தின் சரீரத்தை அணைந்தாள். முகத்துடன் முகத்தைச் சேர்த்துக்கொண்டு கண

ணீர் விட்டாள். உட்கார்ந்துகொண்டு புலம்பினள். அதை யார் வர்ணிக்க முடியும்! எமக்கு அதை நினைக்கவும் திறனில்லை. செய்யுள் நடையால் சிறிது வரைகின்றோம்.

(1) தீவினை முற்றும் தீரத் தொடர்வதோ
ஆவி யென்னுடல் நீங்கி யகல்வதோ
யாவு மெற்கிவள் யாண்டுகொண் டேகுவாய்
தேவ னேபெருந் தேவிம ணாளனே.

(2) மண்ணிவள் வந்து வாழ்வுற்று மாண்பினைப்
புண்ண தாக்கினை போக்கினை யென்கொலோ
கண்ணனே யெந்தன் கண்ணிவள் நீகொளக்
கண்ணுங் கெட்டவட் கென்கதி சொல்லுவாய்,

(3) பேர ழகுடை யாளெந்தன் பெண்மணி
சீர்க லைகள் தெளிவுற வோதினள்
ஊர ளைத்தும் புகழ்துயர் நீர்மையாள்
யாரெ னக்கிணை யென்றிறு மாப்புற்றேன்.

(4) ஆசைக் கோர்சர ணாயினை யங்கனுய்
பேசக் கேட்டுநான் பேரின்ப மாழ்ந்தனன்
பாச மன்ன தெனக்குப் பணித்துநீ
நாசம் போயின ஞாயம் விளம்புவாய்.

(5) இந்தக் கால மெனக்குறு மென்றுநான்
சிந்தை கொண்டிலன் சிற்றறிவா லந்தோ!
சந்த மொன்றிய வென்னிளந் தையனீ
முந்திச் செல்லல் முறையோ மொழிந்திடாய்.

(6) எங்குநான் சென்றுன் இன்முகங் காணுவேன்
எங்கு நானுன தின்சொல் பருகுவேன்
கங்கு லும்பக லுங்கண்ண நீர்சொரிந்
திங்கு மங்கு முனைநினைந் தேங்குவன்.

(7) பொய்கை யாடநீ போக வெழுந்திராய்
கொய்ம லர்கள்நீ கொள்வதற் கேற்பன
அய்யன் நூலுனக் கோதுமக் காலமே
சையெ னத்தரை மேல்சய னிப்பையோ.

(8) சுற்ற கல்வியும் கல்வியி னற்பயன்
பெற்ற வேளையி தென்றுனைக் கொண்டனன்
துற்ற வேளையி தென்றுனைக் கொண்டனன்
அற்ற பற்றின ளாயினே யோசொலே.

(9) தாம ரைக்கண்கள் தண்மதி போல்முகம்
வாம நீள்குழல் செவ்விதழ் வாயுடன்
காம னேந்திய கார்முகம் போன்றநீ
ஈமத் தேற்று மெரிக்கிரை யாவதோ.

(10) கண்தி றந்தெனைப் பாரடி காதலி
பண்மொ ழியொன்று பார்த்தெனைப் பேசடி
எண்ணிய குற்றம் யாதுசெய் தேனடி
மண்ப டுத்தவன் மாதே யெழுந்திராய்.

(11) பூவின் மெல்லிய மேனியைப் பொங்கழல்
தாவி வேகத் தருணமும் வந்ததோ
ஆவிக் கோரமு தேயணங் கேயுனைப்
பாவி யேன்பறி தந்திடும் பாங்கிதோ.

(12) என்னை னத்தரிப் பேனுயி ரின்னுநான்
என்னை னப்பகர் வேனந்தன் தீவினை
முன்செல் வாய்மட வாய்மொழி வாயுனைப்
பின்செ லும்வழி பெற்றிழந் தேற்குநீ.

இந்த ரீதியாகப் பலவாறு நினைத்து நினைத்தழுவாள். தன் காதலி இன்னும் உயிருடன் இருக்கின்றாளென்று எண்ணி அவளை ஏதேதோ கேட்டு இரப்பாள். அவள் அசைவற்றிருக்கக் கண்டு துயர கடலில் ஆழ்ந்துபோவாள். ஒன்றேயொன்று ஒவ்வாத வருத்தங்களைப் படுவாள். பிராணன் உண்டோ ! என்று யாவரும் ஐயுறுவண்ணம் கீழே விழுந்து மூர்ச்சை போவாள். முடிவில புலம்பவும் சக்தியற்றுப் படுத்தாள்.

ஜநகநந்தினி பரமபதம் போயினள். கச்சிநகரும் திருநீங்கிய வண்ணம் தோன்றிற்று. யாவருக்கும் நல்லவரான கேசவாசார்யர் துக்கத்தைத் தமதென்று யாவரும் கருதினார்கள். அவர் இல்லம் முழுதும் அவ்வூர் பெண்டிரும் ஆடவரும் கூடிநிறைந்தது.

*   *   *   *

ஸ்ரீநிவாஸனுக்கு முன்போல் வேகாநதி தான் சரணமாயிற்று. பெற்றவள் துயரத்தைப் பிறர் மதிக்கக்கூடும். அவள் துக்கம் ரஹஸ்யத்தில் தான் ப்ரகாசிக்கத்தக்கது. பந்துவினுடைய மரணம் துக்கத்தை விளைவிக்கும்; ஆயினும், ஸ்ரீநிவாஸன் அம்மான் மகள் இறந்தா ளென்று அழுதானில்லை. உறவல்லாத அவ்வூர் ஜநங்களும் ஜநகநந்தினியை நினைத்து அழுதார்களாகையால் மற்றோரிடம் காணுத விசேஷ குணங்கள் ஜநகநந்தினியை ஆஸ்ரயித்து நின்றன வென்பது ஸித்தம். அந்தக் குணங்களுடைய சிந்தனையும், அவற்ருல் இழுக்கப்பட்ட சித்தமுடையவனுய், ஸ்ரீநிவாஸன் அவளைத் தானே அடையவேண்டுமென்று ப்ரதமத்தில் கொண்ட ஆசையும், அவ்வாசை நிராகரிக்கப்பட்ட பின்பும்; அவளிடம் அவனுக்குண்டாயிருந்த அன்பானது அவன் மனத்தை விட்டகலாத காரணமும், ஜநகநந்தினியின் வியோகத்தை அவனுக்கு அஸஹ்யமாக்கிவிட்டன. யாது செய்வன்? உரத்த குரலின்றித் தாரை தாரையாய் கண்ணீர் விட்டான். "ஜநகநந்தினீ! உனை நான் எவ்வாறு மறப்பேன்? ஸகலேந்துமுகீ! உன் முகத்தை நான் இனி எங்கே காணப்போகின்றேன்? வாரெழில் கொண்ட நேத்ரமுடையவளே! உன் இந்தீவரம் போன்ற கண்களை இனி யெங்கே பார்ப்பேன்! நீ ம்ருதுவாகவும் மதுரமாகவும் பேசும் சொற்களை எங்கு கேட்கப் போகின்றேன்! உன்னுடைய விநயமும், ஆசாரமும், பக்தியும், பொறுமையும் இனி எந்த ஸ்த்ரீயினிடம் ப்ரகாசிக்கப்போகின்றன! எனக்கு வெளியில் ஸஞ்சரிக்கின்ற ப்ராணன் போலிருந்தையே! நீ மரண மடைந்தபின் நான் எவ்வண்ணம் உயிர்த்து நிற்பேன்! உன்னை எனக்கென்றே ஈஸ்வரன் படைத்தா னென்று எண்ணினேன். நீ பரர்பொருளாய்விட்டாய். ஆனபோதிலும் உன்னைக் கண்களால் பார்த்துக்கொண்டு, அதற்காகவாவது ஜீவித்திருக்க வெண்ணினேனே! அந்தப் பாக்யமும் அற்றுப்போனேனே! புஷ்பஹாரங்களிலும் லதைகளிலும் உன் சரீரத்தை யோசிப்பேனே? பயந்த பெண்மான்கள் பார்வையில் உன் கண்களைத் தேடுவேனே? சந்த்ரனிடமும் செந்தாமரையினிடமும் உன் முகத்தைத் தேடுவேனே? மயிற்றோகையினிடம் உன் கூந்தலழகைச் சிந்திப்பேனே? கோவைப் பழத்தில் உன் உதடுகளின் காந்தியைக் காண்பேனே? எப்படித்

தான் யோசித்தாலும் இவையெல்லாம் ஒன்று சேர்ந்து உன் உருவத்தைக் காட்டமாட்டாவே. நீ படித்தாயென்று ஜனங்கள் அறிவதன் முன்னமே ப்ரயாணப்பட்டுவிட்டையோ! இனி நான் என் செய்வேன்! என் நினைப்பேன்! எவ்வாறு உய்வேன்! வரதா! என் தலைமேல் கல்லைப் போட்டுவிட்டையே!" இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு ஸ்ரீநிவாஸன் புலம்பிக்கொண்டிருந்தான்.

காலத்தின் வேகம் ப்ரியபந்துக்கள் மரித்த பிறகுதான் தெரிகின்றது. செத்தவரைச் சுமந்துபோகச் சாகவேண்டியவர் ப்ரயத்நப்படுவது லோகவழக்கம். உறவினர் துக்கித்துக்கொண்டிருக்கையில், ஆப்தர்கள் அத்தொழிலை மேற்கொள்கின்றார்கள். அவர்களில் சிலர் உறவினர் பக்கல் உட்கார்ந்து உபசார வார்த்தைகளைச் சொல்வார்கள். யுவதி விஷயத்தில் பிதாமகனுடைய ப்ரதம ஸ்ருஷ்டியாக எண்ணத்தக்கவளானாலும், ஜீவனால் விடப்பட்ட ஜநகத்தின் சரீரத்தை வேகவஹிக்குக் கொண்டு போகும் காலம் ஸமீபித்துவிட்டது. அதற்கு வேண்டிய க்ரியைகள் யாவும் ஆலஸ்யமின்றி நடத்தப்பட்டன. ஆகலால் ஸ்ரீநிவாஸன் தன்னையும் மறந்து தனியே அழுதுகொண்டிருக்கையில், ஸமீபத்தில் ஸ்த்ரீகள் குரல்விட்டுப் புலம்பும் சப்தத்தைக் கேட்டான். தலை நிமிர்ந்து பார்த்தான். ஜநகநந்தினியின் சரீரம் கொண்டு போகப்படுவதையும் அதன்பின் விப்ர குலோத்தமர்கள் கூட்டமாகச் செல்வதையும் கண்டான்.

"பெண்ணே! பதினாறு வருஷங்கள் பிழைத்து உன் ஆயுளை முடித்தையோ? கச்சிமா நகரத்தில் வஸிக்க இனி உனக்கு இடமில்லையோ? உன் சந்த்ரம் அமைந்த நாளளவுகூட உனக்கு ஜீவிக்கக் காலமில்லையோ? காட்டுத்தீக்கு அளிக்கவா உன் வடிவழகு அவ்வண்ணம் வளர்ந்தது? ஸர்வ ஸக்தி யுடையவனெனப் பெயர் கொண்ட பகவான் உன்னை அவ்வண்ணம் பண்ணி இவ்வண்ணம் அழிப்பானேன்?" என்று கதறினான்.

"மீண்டொருதரம் அவள் முகத்தைப் போய்ப் பார்க்கின்றேன். அது தான் முடிவான தர்சநம். அதன் பிறகு என் மநஸ்ஸு தான் அவள் உருவைக் காட்டவேண்டும்" என்று சொல்லிக்கொ

ண்டு எழுந்து போனான். இதற்குள் சிதையை அடுக்கினார்கள். பிறகு ஜநகத்தின் சரீரம் சிதையின் மேல் வைக்கப்பட்டது. அது கண்களுக்குத் தெரியும்வரையில் ஸ்ரீநிவாஸன் பக்கத்தில் நின்று, விடாமல் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு முட்டைகளால் அது மூடப்பட்டது. அதன்மேல் தீயு மிடப்பட்டு, ஒரு நிமிஷ காலத்துக்குள் அது சிதையெங்கும் வ்யாபித்து விட்டது.

ஹரிப்ரியை அக்காட்சியைக் கண்டாள். கலங்கினாள்; கதறினாள். பெண்டுகள் அவளை அவ்விடம் விட்டு அழைத்துக்கொண்டு நடந்தார்கள். ஆடவர்களும் சிறிதுகாலம் க்ரமித்தவுடன் ருத்ர பூமியைத் துறந்தார்கள். வரதாசார்யர் அப்போது ஸ்ரீநிவாஸனைத் தேடினார். அவன் அகப்படவில்லை. யாவரும் ஊருக்குள் திரும்பி ப்ரவேசித்தார்கள்.

பாடசாலை ஸம்ஸ்க்ருத உபாத்யாயர் திரும்பி நடக்கையில் 'அஹந்யஹநி பூதாநி கச்சந்தீஹயமாலயம் । ஶேஷாஃ ஸ்தாவர மிச்சந்தி கிமாஶ்சர்யமத: பரம்' என்று சொன்னார். அதைக்கேட்ட தமிழ்பண்டிதர் 'நாடோறு மக்கள் நரகம் செலக்கண்டும், நீடூழி வாழ நினைவர்,' என்று பின்பாட்டு பாடினார்.

கேசவாசார்யருடைய ஶோகம் உள்ளே அவரை எரித்துக் கொண்டே இருந்தது. ஆனாலும் அதை அவர் வெளியில் ப்ரகாசிக்க விடவில்லை. தமது நித்யகர்மங்களை க்ரமமாகச் செய்து கொண்டு வந்தார். பகவத் கைங்கர்யங்களை முன்போலவே நடத்தி வந்தார். ஆஶ்ரயித்த ஶிஷ்யர்களுக்கு அத்யாத்மவித்யா ப்ரதாநம் பண்ணிக்கொண்டு வந்தார். ப்ரஹ்மவித்துக்களுடைய வருத்தம் அப்படித்தான் இருக்கும்.

ஹரிப்ரியையோ துக்கம் மூர்த்திகரித்தது போல் தோன்றினாள். ஸ்வதர்மம் அறிந்தவள் ஆதலால் பர்த்தாவின் கைங்கர்யத்தைத் தவறுதலின்றி நடத்தி வந்தாள். ஆனால் அன்று முதல் அவள் ஓரிடமும் போனாளில்லை; ஒருவருடனும் பேசினாளில்லை,

ஸ்ரீநிவாஸனை ஶ்மஶாநத்தில் பார்த்தபிறகு ஒருவரும் கண்டிலர். அவன் போனவழி யார்க்கும் தெரியாது. அவனுடைய மாதாபிதாக்கள் மஹா துக்கத்தை அநுபவித்தார்கள். தக்க

காரணமில்லாமல் தங்களுக்குப் புத்ர வியோகம் நேர்ந்ததாக எண்ணினூர்கள். கநகவல்லி மட்டும் அடிக்கடி, "அண்ணு அப்படி நடந்திராவிட்டால், அவர்க்கும் கஷ்டம் வந்திராதே, நானும் துக்கபடாதிருப்பேனே!" என்று சொல்லிக்கொண்டிருந்தாள். அது ஸ்த்ரீ புத்தி.

'அந்யாஹ்யந்யச்சிந்தயதி ஸ்வஸ்தம் விதயாத்யஹம்।'

எனும் ஸ்லோகப்படி ஈஸ்வர ஸங்கல்பம் இருக்குமென்பர். ஈஸ்வர ஸங்கல்பம் மநுஷ்யருடைய ஸுகதுக்க ப்ராப்தி விஷயத்தில் ஸாபேக்ஷமாய் நிற்கின்றது, 'நாத்ர நகாரகாரணவாதி வாரஷோயநீஸ்வரஃ। 'ஐதஸ்யதரதஸ்யநம் க்ருதாந்தஃவசி கஷிதி' எனும் படியே, ஸுகதுக்கங்கள் கர்மாத்யக்ஷன் ஸங்கல்பாதீநங்கள்; ப்ரயத்நம் மாத்ரம் மநுஷ்யஸாத்யம்,; ப்ரயத்நத்தினுடைய பலத்தை அபேக்ஷித்தே ஸாதாரணமாக ஜநங்கள் ப்ரவ்ருத்திக்கின்ருர்கள். பல தாநமோ, அவர்களுடைய ப்ராரப்தகர்மங்களை அநுஸரிக்கும் ஈஸ்வர ஸங்கல்பத்தைப் பொறுத்து நிற்கும், அத்யந்தம் நிவ்ருத்தி தர்மத்தை ஆஸ்ரயித்திருந்த கேசவாசார்யர், 'ப்ரயத்நேநாபி கர்தவ்யம் ஸ்வயமேவ திஷ்டதிஃ' என்கிறபடி அத்யவஸித்தனர்.

ஜநகநந்தினீ முற்றிற்று.

𑌶𑍍𑌰𑍀𑌃

# 𑌹𑌰𑌿𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌵𑌿𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑌿𑌃

1. 𑌅𑌥 𑌅𑌮𑌙𑍍𑌗𑌲𑍇𑌤𑌃 𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌤𑌃
𑌸𑍍𑌵𑌸𑌾𑌨𑍍𑌤𑌰𑌙𑍍𑌗 𑌮𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 ।
𑌅𑌖𑌿𑌲𑌾𑌦𑍍𑌭𑍁𑌤𑌮𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌤𑌾 𑌸𑌤𑍀
𑌵𑌿𑌭𑌵𑌾𑌤𑍁𑌤𑌰𑌂 𑌹𑌰𑌿𑌪𑍍𑌰𑌿𑌯𑌾 ॥

2. 𑌅𑌯𑌿 𑌨𑌨𑍍𑌦𑌿𑌨𑌿! 𑌦𑍁𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌦𑌿𑌵𑍍𑌯𑌪𑍂𑌰𑍍𑌵𑌂
𑌫𑌲𑌿𑌤𑌾 𑌮𑍇 𑌯𑌦𑌿𑌯𑌂 𑌦𑌶𑌾 𑌤𑌵 ।
𑌨 𑌜𑌹𑌾𑌤𑍍𑌯𑌸𑌵𑌸𑍍𑌤𑍁 𑌮𑌾𑌮𑌹𑍋!
𑌧𑌿𑌗𑌿𑌦𑌂 𑌨𑌿𑌕𑍍𑌷𑌰𑌣𑌂 𑌮𑍇𑌨𑌾 𑌮𑌮 ॥

3. 𑌅𑌯𑌿 𑌨𑌾𑌥! 𑌰𑌮𑌾𑌸𑌖! 𑌕𑌥𑌯𑌾
𑌹𑌰𑍇𑌤𑌮𑌾𑌂 𑌹𑍃𑌤𑌮𑌙𑍍𑌕𑍇𑌤𑌾𑌽𑌵𑌿𑌯𑌂 ॥
𑌨 𑌵𑌿𑌵𑍇𑌦 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑌵𑌦𑍍𑌯𑌸𑌾
𑌵𑌿𑌹 𑌨𑌷𑍍𑌟𑌾 𑌨𑌨𑍁 𑌦𑍁𑌰𑍍𑌵𑌚𑌨𑌾𑌵𑌿𑌣𑍀 ॥

4. 𑌨𑌯𑌨𑌂 𑌮𑌮 𑌨𑌨𑍍𑌦𑌿𑌨𑌿! 𑌕𑌥𑌯𑌾
𑌨𑌯𑌤𑌾 𑌤𑌾𑌂 𑌮𑌮 𑌕𑌾𑌣𑌤𑌾 𑌕𑍃𑌤𑌾 ।
𑌸𑌮𑍍𑌪𑌦𑌿𑌹 𑌕𑌾 𑌮𑌤𑌿 𑌮𑌮
𑌪𑍍𑌰𑌸𑌵𑍇𑌶𑍁𑌦𑍍𑌧𑌤𑌃 𑌪𑍍𑌰𑌸𑍀𑌦 𑌮𑍇 ॥

5. 𑌵𑌿𑌜𑌿𑌤𑌾 𑌰𑌤𑌿𑌰𑌾𑌹𑌿 𑌰𑌞𑍍𑌜𑌿𑌤𑍈𑌃
𑌸𑌨𑍍𑌤𑌤𑌯𑌾 𑌮𑍇 𑌶𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌵𑌤𑍍𑌤𑌯𑌾 𑌚 𑌧𑍀𑌃 ।
𑌯𑌶𑌸𑌾 𑌵𑌿𑌭𑌯𑌾 𑌜𑌗𑌤𑍍𑌤𑍍𑌰𑌯𑍀-
𑌤𑍍𑌵𑌯𑌿 𑌮𑌵𑌤𑌾𑌰𑍀𑌵 𑌵𑌂𑌶𑌿𑌤𑌾𑌸𑍁𑌖𑌂 ॥

ஸ்ரீ:

ஸ்ரீயை நம:.

**ஜநகநந்தினி** :—ஜனகநந்தினியின் சரித்திரப் பூர்த்தியாயது. நவீனக் கதைப்பாங்கில் ஊரும், பெயரும், இடங்களும், விஷயங்களும் புகலப்பினும் புராதன தரும ஸாரமெள்ளளவும் கெடாமல் ஆதியோடு முற்றுமளவும் இதில் குடிகொண்டுளது. தமிழ்நாட்டு ஸ்ரீ வைஷ்ணவ மடந்தைமாரின் முன் சன்ம நல்வினைப் பயனே இந்நூல் வடிவம் பெற்று வந்துளதென்பதற்கு ஐயமில்லை.

இக்கலி நாளில் மாதர்களின் படிப்பும் ஒழுக்கமும் சீராதல் வெகு முக்கியம். அதற்கேற்ற நூல்களும் போதனைவகைகளும் முக்கியமே. ஜநகநந்தினி நமக்குச் சமய ஸஞ்சீவியேயாம். இதைத் தம் கருணையால் அனுக்கிரகித்தவர் நெடுநாளைக்கு முன் **நந்திதுருக்கம்** எனும் புஸ்தகமொன்றும் வேறொன்றும் [பூர்த்தியாய் வெளிவரவில்லை] நன்னடையில் எழுதியுள்ளார். இவர் தமிழ் வசன நடையும் இவர் பாடும் பாடல்களின் நடையும் குளிர்ந்தும் மதுரமாயும் விளங்குகின்றன. இம்மகான் இளவயது தொடங்கி நாளது மட்டும் தமிழையும் வடமொழியையும் ஆங்கிலத்தையும் முக்கியமாய்க் [illegible]விப்பயன் கருதியே சர்வ பலம் வாய்க்கும்படி உழைத்துவருபவராதலால், இவர் மனோதருமத்தையும் வாக்கு மாதுரியத்தையும் நாம் கண்டு களிக்க ஜநகநந்தினி நேர்ந்திருப்பது விசேஷமே. வைஷ்ணவ பரிபாஷைகள் தக்க இடங்களில் வழங்கப்பட்டிருப்பதால் இது ஸ்ரீவைஷ்ணவ சமயப் பிராமணப் பெண்ணினத்தார்க்கு முக்கியமாம். பரிபாஷைகளை விலக்கி வைத்துப் பார்க்கின், தமிழ் வசன நடை மாசு மறுவின்றி வெகு சீராயமைக்கப்பட்டுள்ளது. சீக்கிரம் வெளிப்படில் சிற்சில மாதர்பால் நல்லொழுக்கம் நிலைபெற ஜநகநந்தினியாம் பீஜம் அங்குரிக்கும். காலமும் ஏற்றதே.

தம்பதிகளிடம் நற்சந்ததிகளுதிக்க அத்தம்பதிகள் தெய்வபக்தியோடு நியமமுள்ளவராயிருத்தல் வேண்டும். பொன்னேர் பூட்டவும் விதை விதைக்கவும் நல்ல நாட்பார்ப்பது உண்டன்றோ? பலநாட்பயிராம் ஸந்ததிகள் தி[illegible]யுளும் பத்தியும் பெற்றுச் சுகமடையக் கால நியமம் இல்லறத்தார்க்கு முக்கியம். **வித்தில்லாத** சம்பிரதாய மேலுமில்லை கீழுமில்லை யென்பது பழமொழி. நல்வித்தை நற்காலத்திலிடில் நற்பயனளிக்கும்.

இனித் தமிழ் பாடல்கள் சில வருமாறு :—

(1) சனக நந்தினி தன்பெயர் பூண்டுதன்
னைம ணஞ்செறி யின்றமிழ் மாண்பொடு
வனிதை மார்பதி மாவிர தஞ்சொலு
புனித மாக்கதை புக்கது போற்றவே.

(2) மனையின் மாட்சி வளந்திரு கிற்பதாய்த்
தனயர் தம்பதி தாயொடு தந்தையர்
தனொடு வந்தவர் சந்ததி வாழ்கினே
தினமு மோதிடிற் றீவினை தீயுமே.

(3) ஆங்கி லத்தமிழ்ப் போக்கை யகற்றியே
தேங்கு தென்றமிழ்ச் செல்வந் திருந்திய
பாங்கு சேர்தமிழ் நன்னடை பாவியல்
ஓங்கு நூலிது முத்தம மாகுமே.

(4) பத்தி வெள்ளம் பரந்துக ண்ணீருக
மத்த கக்கை மடங்கி விழுந்திட
தத்தி தெத்தி யுள்ள முருகிட
பித்த ரென்னவும் பேசிடச் செய்யுமே.

(5) நாரியர் தம்நெறி நாணுஞ் சிறக்கவே
யாரியர் நன்னெறி யாய்ந்து மனத்தினிற்
காரிய மிக்கலி காலப் போழ்தினிற்
சீரிய நூலிது செய்தது சீரிதே.

(6) கோணல் கொண்ட் குவலய மிந்நாள்
காணு நன்னெறி காணவு முண்டெனப்
பாணி நன்மணிப் பவளஞ் சிலசில
காணு நற்றமிழ் நூலிது கண்ணதே.

(7) கதைப்பெ ருக்கங் காணும் கலியிதிற்
சுதைப்பெ ருக்கச் சொல்லுறு பெட்டகப்
புதைப்பி ருக்கப் போந்த நலத்தினுற்
விதைப்பெ ருக்க மறத்தின் விரிவிதே.

(8) தோன்றிற் புகழொடு தோன்றுகவென்றசொல்
சான்ற தாகத் தாரணி வந்தவர்க்

கூன்று பேர்தி வான்பக தூரொடு
மேன்ற * பீயே பீயெலு மாயதே.

(9) சாலும் பிங்களஞ் சாலி சகமது
மேலு மாயிரத் தெண்ணூ றுநாற்பதாம்
மேலு மாங்கிலம் நூறுபத் தொன்பதின்
பால தாம்பதி னேழிற் பகர்ந்ததே.

(10) அந்த வெவ்வுளூர் தட்டைக் குலத்தினில்
வந்த ரங்கா சாரியர் வாக்கிது
சொந்தத் தென்றமிழ் சொன்னய வாரியம்
முந்து மாங்கிலம் மூன்றறி வேற்றதே.

வேறு.

(11) இந்த நூல்கை யேந்தியே
சொந்த மாகத் தோய்பவர்
மைந்தர் பெற்று வாழ்ந்துபின்
தந்தம் நாய்கர்ச் சார்வரே.

வேறு.

(12) முந்தை நூனெறி முற்றிய நூலிதை
முந்த வாய்ந்து மொழிந்தவ னூரெனில்
உந்து பொன்னி யமுதர் வலங்கையிற்
சொந்தத் தில்லையூர் வேங்கடன் சொன்மினே.

தி.வெங்கடராம ஐயங்கார்

---

* B. A., B. L.

